# ஆதாரக் கல்வி:
# தத்துவங்களும் முறைகளும்

(A must for every 'Basic' Worker)

ஆதாரப் பள்ளி பயிற்சியாளர்
{ மூத்தோர் இளையோர்
இருவர்க்கும் உரியது. }

by
Vasan

Shantha Publishers
Madras-21




*Sole Stockists*
P. T. BELL & Co.,
7, Sunkurama Chetty St, Madras-1
(Near Y. M. C. A. Buildings)

 [Price Rs. 1-75

# முன்னுரை

ஆதாரக் கல்வியின் தத்துவங்களை விளக்குவது இந்நூல். அரசினர் வெளியிட்டுள்ள பாடத் திட்டத்தைத் தழுவி இது விரிவாக எழுதப் பட்டுள்ளது.

சுவையூட்டி ஊக்கவல்ல நல்ல படங்கள் பல இந்நூலில் அரும்பாடு பட்டுச் சேர்க்கப்பட்டுள்ளன. அது தான் இதன் தனிச்சிறப்பாகும்.

ஆசிரியப் பயிற்சிபெறும் பயிற்சியாளர்க்கும், பிற ஆசிரியர்கட்கும் இது மிக்க பயன் தரும்.

எங்களது நூல்களுக்கு இதுகாறும் ஆதரவு காட்டியதுபோல் இந்நூலுக்கும் பேராதரவு அளிப்பீர்கள் என நம்புகிறோம்.

குற்றம் குறைகளை எடுத்துக் காட்டினால் மிக்க நன்றியுடையவர்களாயிருப்போம்

சென்னை
சுதந்திரத் திருநாள்
15—8—1959

# பொருளடக்கம்

# 1

# உண்மைக் கல்வி என்ருல் என்ன ?

[உண்மைக் கல்வி என்ருல் என்ன ? கல்விக்கும் எழுத்தறிவிற்கும் உள்ள வேறுபாடு : முழு ஆளுமையின் எழுத்தறிவு (Literacy of the whole personality) என்ற சொற்ருெடரின் பொருள் ]

## கல்வியின் சாதாரணப் பொருள் :

கல்வி என்னும் சொல்லின் சாதாரணப்பொருள் எழுத்தறிவே எனக் கருதப்படுகிறது. அப்படியானல் எழுத்தறிவு என்னும் சொல்லின் பொருளை நன்கு அறிந்து கொள்ளுதல் இன்றியமையாததாகிறது. கடிதம் ஒன்றினைத் தானகவே எழுதவோ அல்லது வந்த கடிதத்தைப் படிக்கவோ போதுமான அறிவை எழுத்தறிவு என்கிருேம். அது போன்று ஓர் எளிய கதையை அல்லது எளிய முறையில் எழுதப்பட்டுள்ள செய்தித்தாளிலுள்ள முக்கிய செய்திகளைப் பாடின்றிப் படிக்கும் திறனை எழுத்தறிவு என்கிருேம். சிறுவர் சிறுமிகட்கு வாசிக்கவும் எழுதவும் கணக்குகள் போடவும் கற்பிக்கப் படுவதைத்தான் ஆரம்பக்கல்வி என்கிருேம். ஆரம்பக் கல்வியின் நோக்கமும் நிரந்தரமான எழுத்தறிவு எனக் கூறப்பட்டது. இவ்வாறு **கல்வி** என்னும் சொல்லுக்குப் புத்தகம் படிக்கும் அறிவு என்றும், **கல்வி கற்றவன்** என்பதற்குத் தமிழ், வரலாறு, பூகோளம், கணிதம், விஞ்ஞானம், கொஞ்சம் ஆங்கிலம் முதலிய பல்வேறு பாடங்களில் சில நூல்களைப் படித்தவன் என்றும், பொருள் சாதாரணமாகக் கொள்ளப் படுகிறது.

இது ‘கல்வி’யின் முழுப்பொருள் ஆகவே ஆகாது. அதனல்தான் ஆரம்பக் கல்வித் திட்டத்தின் நோக்கத்திலும் முறைகளிலும் 1942-ல் பல மாறுதல்களைப் புகுத்தினர்.

**கல்வி என்றால் என்ன ?**

கல்வியின் முழு இலக்கணத்தை அறிந்துகொள்ள அதைப்பற்றி விவரமாய் ஆராய்வோம். கல்வி என்பது பரந்த, ஆழ்ந்த பொருள் உள்ளது. வெறும் ஏட்டு அறிவை மட்டும் அது குறிப்பது அன்று. கல்வியுள் அறிவு, திறன்கள், பழக்க வழக்கங்கள், மனப்பான்மை ஆகிய நான்கு உறுப்புகளும் அடங்கும்.

பிறரையே சார்ந்தும், என்ன செய்வது எப்படி நடந்துகொள்வது என்று ஒன்றுமே தெரியாத குழந்தையை தற்சார்புள்ள நல்ல மனிதனாக, ஒளிபெற்ற நற்குடியாக, பிறருடன் ஒத்து, முன்னிலும் சிறந்த, முன்னிலும் முழுதான, முன்னிலும் வளமுள்ள வாழ்வு வாழக் கற்பிக்கும் முயற்சியே கல்வியாகும். கல்வி பள்ளிக்கூடத்தில் மட்டும் நடப்பது ஒன்றன்று. கல்வி வீட்டிலும் நடைபெறுகிறது. உண்மையைக் கூறிடில் பள்ளியை விட வீடுகளில் தான் கல்வி அதிகம் நிகழ்கிறது, என்று கல்வி வல்லுநர்கள் கூறுகிறார்கள். பள்ளியில் நேர்முகமான கல்வி பயிற்றல் நடைபெறுகிறது. பிற இடங்களில் மறைமுகமான கல்வி நடக்கிறது. அதுதான் வேறுபாடு. மறைமுகக் கல்வி வன்மையுடையது. ஆனால் பழைய கல்வியும் பழைய கல்வி முறைகளும் தற்காலத்தில் போதா.

சுருக்கமாக, ஆதாரக் கல்வியை ஐந்து Hகளின் (5H'S) கல்வியாகும் என ஹன்ஸா மேத்தா (Hansa Mehta) என்பவர் ஓர் ஆதாரக் கல்வி நூலின் முன்னுரையில் எழுதியுள்ளார். அந்த 5 H'S என்ற சூத்திரத்தின் விளக்கம் பின் வருமாறு :—

1. Head=(அறிவு அம்சம்) (தலையிலுள்ள) மூளை வேலைகளில் பயிற்றல்; அதாவது செய்திகளையும் உண்மைகளையும் கற்பித்தல்.

2. Heart=(உணர்ச்சி அம்சம்) இதயத்தைப் பயிற்றல் அதாவது உணர்ச்சிகளைப் பயிற்றல்;

பற்றுகளை ஏற்படுத்துதல் (Sentiments) மனப் பான்மைகளையும் ஏற்படுத்துதல் (Attitudes)

3. Hand=(முயற்சி அம்சம்) கையைப் பயிற்றல்; இதில் காலும் சேர்ந்துள்ளது. அதாவது கைத் திறன், கால்திறன், மெய்த்திறன் ஆகிய வற்றைக் குறிக்கிறது. இதில் பொருள் உற் பத்தி அம்சமும் விளையாட்டு, உடலோம்பல் முத லிய பயிற்சிகளும் உள்ளடங்கும்.

4. Health=உடல் நலம் பற்றியவற்றில் பயிற்சி அளித்தல். (மன நலத்திற்கு உடல் நலம் அடிப் படை)

5. Habit=மேலே சொன்ன நான்கிலும் வேலை களை எளிதாக்கப் பொருத்தமான பழக்கங்களை ஏற்படுத்தல்.

ஆதாரக் கல்வியை 5 Rகளைப் (5R'S) பயிற்றும் முயற்சி என்றும் சொல்லலாம் :—

அந்த 5R'S ஆவன :—

1. Reading. (வாசித்தல்)
2. WRiting. (எழுதுதல்)
3. ARithmetic. (கணிதம்)
4. Relationship. (சம்பந்தம்)-(தொடர்பு)
5. Rights and Responsibilities (கடமைகளும் பொறுப்புகளும்)

**கல்வி கற்பிப்பதன் நோக்கங்களிற் சில :**

1. பிழைப்பிற்கு வழி. (தொழில், உத்தியோகம்)
2. அறிவு வளர்ச்சி.
3. சமூகத்திறமை.
4. ஓய்வு நேரத்தைப் பயன் படுத்துதல்.

5. வாழ்க்கைகுத் தயாரித்தல்.
6. முழு வாழ்க்கை. (Complete Living)

என்ற சிலவற்றைக் கூறலாம். ஒவ்வொன்றையும் சற்று விளக்குவோம்.

**பிழைப்பிற்கு வழி :**

பெரும்பான்மையான பெற்றோர் தம் மக்களுக்குக் கல்வி கற்பிப்பதின் நோக்கமே இதுதான். குறிப்பிட்ட ஓர் எல்லைவரை குழந்தைகள் கல்வி பயிலவேண்டும். பின்பு நல்ல தொழிலிலோ உத்தியோகத்திலோ வாழ்வு நடத்தவேண்டும். அதன் வாயிலாக நல்ல வருவாய் ஈட்ட வேண்டும். இது ஒரு நல்ல நோக்கம். பாராட்டுதற் குரிய நோக்கம். ஏனெனில் இந்த நோக்கத்தின் வாயி லாகத் தனி மனிதனும் முன்னேறுகிறான். சமூகமும் முன் னேறுகிறது. ஒருவன் பிறருக்குச் சுமையாயிருப்ப தில்லை. எனினும் இந்த நோக்கம் முழுமை இல்லாதது.

பொருளீட்டல் நன்றே. " திரை கடலோடியும் திரவி யம் தேடு " என்பது நல்ல முதுமொழிதான். ஆனால் உலக வாழ்வில் பொருளீட்டலோடு வேறு சிலவும் முக்கிய மானவை. வாழ்க்கை என்பது ஜீவனத்தை (தொழில், உத்தியோகம்) விடப் பரந்தது. பிறருடன் நன்கு பழக வும், நல்லதை ரசிக்கவும், ஓய்வு நேரத்தை நன்கு பய னுறக் கழித்து முழு வாழ்வு வாழவும் கல்வி கற்பிக்கவேண் டும். எனவே இந்நோக்கத்தை ரூ. அ. பை. நோக்கம் என் றும் வயிற்றைக் கழுவும் நோக்கம் (Bread and Butter Aim) என்றும் குறை கூறுகிறார்கள். மிகக் குறுகலான நோக்கம் என்கிறார்கள். கல்வியின் நோக்கம் இன்னும் விரிவாயிருக்கவேண்டும் என்கிறார்கள்.

**அறிவு வளர்ச்சி :**

கல்வி வாயிலாகப் பிள்ளைகளுக்குப் பல்வேறு செய்திகளைக் கற்பிக்க எண்ணுகிறோம். பரந்த, நிறைந்த, ஆழ்ந்த அறிவு அளித்தல் அவசியம் என எண்ணுகிறோம்.

பிள்ளைகளுடைய பின்—வாழ்வில் அவ்வறிவு பயன்பட்டாலும் பயன்படாவிட்டாலும் அவ்வறிவினை அளிக்கவேண்டும் என எண்ணுகிறோம். எத்தனைச் செய்திகளை ஒரு மாணவன் அறிந்திருக்கிறானோ அத்தனைக்கு அத்தனை அவன் சிறந்து வாழக்கூடும், என எண்ணுகிறோம். சுருங்கக் கூறிடில் அறிவே தெய்வம், அறிவே எல்லாம் என அறை கூவுகிறது இந்த நோக்கம்.

கூர்ந்து ஆராய்ந்தால், இந்நோக்கம் முதற் கூறிய நோக்கத்திற்கு நேர்மாறானது என எளிதில் காணலாம். அது லௌகீக வாழ்வினை உயர்த்துகிறது. அதாவது அது பொன், பணம், பூமி, பதவி ஆகியவற்றை நாடுகிறது; போற்றுகிறது. ஆனால் இது அறிவுக்களஞ்சியம் எனப் பெயர் பெற்று, வெற்று அறிவு உடைமை மகிமையில் மகிழ்கிறது.

வெற்று அறிவு பயன் படாது. எந்த அறிவு வாழ்க்கையில், தொழிலில், சமூகத்தில் பயன்படுகிறதோ அதுவே ஆற்றலுடைத்து என்பர் அறிஞர். Mere knowledge is not power. Knowledge put in use is power.

எனவே, மனத்தில் தேவைக்கு விஞ்சின அறிவைப் புகுத்துவதால் தீங்கே விளைவிக்கும். அறிவு ஒரு வெறும் அணியாகத் திகழ்வதில் பயன் ஒன்றுமில்லை. ஆகவே இந்த நோக்கமும் குறுகலானது. அறிவு வளர்ச்சி இன்றியமையாததுதான். ஆனால் வாழ்க்கைப் போராட்டத்தில் வெற்றிபெற அதோடு பிறவும் தேவைப்படுகின்றன. ஆதலால் கல்வியின் நோக்கம் வெற்று அறிவு வளர்ச்சியை விட விரிவாயிருக்க வேண்டும்.

தவிர இந்த நோக்கத்தை நடைமுறையில் நடத்தும் போது வேறொரு தீங்கும் எழுந்து வளர்ந்து விட்டது. பிள்ளைகளின் மனங்களைக் கொள்கலங்களாக எண்ணி, ஆசிரியர்கள் அறிவை எவ்வாற்றானும் திணிக்க முற்பட்டனர். அது நாளிது வரை நீடித்து வருகிறது. பொருள்

புரிந்து கொள்ளாமலே நெட்டுருப்பு போடுவது இதன் வழி வந்த விளைவே என்கிறார்கள்.

**சமூகத்திறமை :**

விஞ்ஞான வளர்ச்சியின் காரணமாய், சமூகம் மிக விரைவில் மிகச் சிக்கலாய் வளர்ந்துள்ளது. பல்வேறு சமூகப் புரட்சிகள் ஏற்பட்டுள்ளன. தற்காலத்தில் ஜனநாயக ஆட்சியே (Democracy) எங்கும் வேண்டப்படுகிறது. முடியாட்சி உள்ள ஒரு சில நாடுகளிலும் அதனதன் அரசனோ அரசியோ ஓர் அலங்காரப் பொம்மையாகவும் சம்பிரதாயச் சடங்குக்குரிய ஒரு சின்னமாகவும் பல்வேறு போக்குள்ள சக்திகளை இணைத்து ஒரு முகப்படுத்தும் பரம்பரை ஆற்றலாகவும் (Unifying and Cementing Force) கருதப்படுகிறார்கள்.

எனவே ஜனநாயக ஆட்சி நிலவும் சமுதாயத்தில் நன்கு வாழத் தக்க சமூகத்திறமையில் போதுமான பயிற்சி அளிப்பதே கல்வியின் சிறப்பான நோக்கமாயிருக்க வேண்டும் என்று அறைகூவப்படுகிறது. ஆம்; இது உண்மையே; இது ஒரு நல்ல நோக்கமாகும்.

இது ஒரு புது நோக்கம். வன்மையான நோக்கமும் கூட. எனினும் இதுவும் கல்வியின் முழு நோக்கமாகாது. சமூகத்திறமையுடன் தனி நபர் வளர்ச்சியும் இந்நோக்கத்தில் தக்க இடம் பெறவில்லை என்பதே இந்நோக்கத்திலுள்ள குறையாகும்.

**வாழ்க்கைக்குத் தயாரித்தல் :**

இதன்படி பிள்ளைகள் தம் பின்-வாழ்க்கையில் என்ன வாழ்க்கை வாழப்போகிறார்களோ, அதற்குத் தயாரித்தலே கல்வியின் நோக்கமாயிருக்கவேண்டும், இது நல்ல நோக்கமே ஆயினும் இதில் இரு இடர்ப்பாடுகள் உள்ளன.

அவர்கள் எத்தகைய வாழ்க்கை நடத்தப்போகிறார் கள் என்று நமக்கு முன் கூட்டியே தெரியாது. அந்த வாழ்க்கை, உள்ளவற்றுள் எல்லாம் மிகச் சிறந்தது என் பதை நாம் தெரிந்து கொள்ளவேண்டும். எந்த வாழ்க்கை யையும் அவ்வப்போது மாற்றி மேம்பாடுறச் செய்து கொள்ளலாம் அல்லவா? தவிர, இந்நோக்கமும் முழுமை இல்லாதது. பின் வாழ்க்கைக்குத் தயாரித்தல் மட்டும் போதாது. தற்கால வாழ்க்கையை முற்றிலும் பயனுற வாழக் கற்பிக்கவேண்டும், என எடுத்துக் கூறப்படு கின்றது.

முழு வாழ்க்கை :

வாழ்க்கை பொருளீட்டல் மட்டுமன்று. அறிவு திரட்டு வது மட்டுமன்று. வாழ்க்கையில் தற்காப்பு, இல்லம், இல் லறவாழ்க்கை சமூகம், நட்பு, பகை, வழக்கு, தொழில், ஓய்வு நேரம், அரசியல், சமயம் எனப்பல்வேறு துறை கள் உள்ளன. ஒவ்வொன்றிலும் பல் வேறு சந்தர்ப்பங் களில் தக்கபடி நடந்துகொள்ளப் பள்ளியிலேயே பயிற்ற வேண்டும் என்பதை வலியுறுத்துகிறது, இந்த நோக்கம்.

முழுவாழ்க்கை வாழ விரும்பும் ஒருவனுக்கு நோயற்ற வாழ்வு வாழத் தெரியவேண்டும். நோயுற்றகாலை முத லுதவி அளிக்கத் தெரியவேண்டும். நற்குடியாக வாழத் தெரியவேண்டும். நாணயமாகத் தொழில் புரிந்து பண மீட்டத் தெரியவேண்டும். பிள்ளைகளைச் சீராக வளர்க்கத் தெரியவேண்டும். நண்பரோடு சகஜமாகப் பழகத்தெரிய வேண்டும். பகைவரை நீதி வாயிலாக அடக்கத்தெரிய வேண்டும். ஓய்வு நேரங்களில் பயனுள்ள வேலைகளில் ஈடுபடத் தெரியவேண்டும். கலைகளைச் சுவைக்கத் தெரிய வேண்டும். இவ்வாறு எல்லாத் துறைகளிலும் அடிப்படை உறுப்புகளைக் கல்வி கற்பிக்கவேண்டும் எனக் கூறுகிறது இந்த நோக்கம். இந்நோக்கமானது வாழ்க்கையின் உறுப்புகளனைத்தையும் தழுவவேண்டும், என்று வற்புறுத்

துவதால் முழுவாழ்க்கை நோக்கம் என இது பெயர் பெற்றுள்ளது.

ஆம் ; இது நல்ல நோக்கமே ; பல்வேறு நோக்கங்களின் சிறந்த உறுப்புகள் இதனுள் அடங்கியுள்ளன. எனினும் முழுவாழ்க்கையின் சிற்றெல்லை வரம்பு யாது எனத் திட்டவட்டமாகக் கூறமுடியாது. இருந்தபோதிலும் இந்நோக்கம் காட்டும் பரப்பு குறிக்கற்பாலது.

முடிவு :

மேற்கூறிய நோக்கங்களுள் ஒரு நோக்கமும் முழுதானதன்று. எனினும் ஒவ்வொரு நோக்கத்திலும் ஓரிரண்டு நல்லுறுப்புகள் இல்லாமலில்லை எனவும் கண்டோம். உண்மையான கல்வியில் எல்லாக் குறைபாடுகளும் நீங்கி நல்லுறுப்புகள் அனைத்தும் இடம் பெற வேண்டும். கல்வி என்பது விஷயத்தைத் திணிப்பதன்று. கல்வி என்பது மலர்ச்சி ; வளர்ச்சி : பயிற்சி. பின் வாழ்க்கையில் பற்பல பொறுப்புகளை ஏற்க நேரிடும். அவற்றை ஏற்று, சமாளித்து, வெற்றிகரமாக நடத்தி முடிக்க அளிக்கப்படும் பயிற்சியே கல்வி ஆகும்.

உண்மைக் கல்வி என்றால் என்ன ?

மேற்கூறியவற்றிலிருந்து இவ்வினாவிற்குத் திட்டவட்டமான விடை கூறுவது எளிதன்று என அறியலாம். காலத்திற்குக் காலம் கல்வியின் விளக்கம் மாறிக்கொண்டே வந்துள்ளது.

ஒவ்வொரு சிறுவனிடமும் மூன்று பகுதிகள் உள்ளன. அவையாவன :—1. உடல், 2. உள்ளம். 3. ஆன்மா (ஒழுக்கம்). இம்மூன்று பகுதிகளும் நன்கு இணைந்துள்ளவை. பிரிக்க முடியாதவை. எடுத்துக்காட்டாக, ஒரு மாணவன் உடல் நோயுற்றிருந்தால் அவன் கல்வி கற்பதரிது. ஒழுக்கமுடன் நடந்துகொள்வதும்கூட அப்போது

அரிதாகும். சிறுவனுக்குக் கல்வி கற்பிக்குங்கால் இம் மூன்றினையும் கருத வேண்டும். ஒவ்வொன்றுக்கும் சம அந்தஸ்து அளிக்க வேண்டும். ஒன்றினுக்கு உயர்வு கொடுத்து மற்றிரண்டினையும் மறந்தால் காலப்போக்கில் ஊறு வருவது திண்ணம். ஒரு சிறுவனுடைய உள்ளத்தை மட்டும் (அதாவது அறிவை) வளர்த்தால் காலப்போக்கில் அவன் அறிவுள்ளவனாக ஆகக்கூடும். ஆனால், அவன் உடல்நலம் குறைந்தவனாகவோ அல்லது ஒழுக்கக்கேடு மிகுந்தவனாகவோ இருக்கலாம். எனவே மேற்சொன்ன மூன்றினையும் சம அளவில் வளர்க்கவேண்டும்.

சில காலத்தில் சில நாடுகளில் சமூகம் உடல் வளர்ச்சிக்குமட்டுமே உயர்வு கொடுத்திருந்தது. (எடுத்துக் காட்டாக கிரீஸ் நாட்டில் மற்போர், உடலோம்புதல், இராணுவப் பயிற்சி, பந்தயங்கள், கடல்நீச்சு, சிங்கத்துடனும் எருதுடனும் போரிடுதல் போன்றவை சிறப்பிடம் பெற்றிருந்தன.)

சில நாடுகளில் தற்காலத்தில் மன வளர்ச்சிக்கு (அதாவது அறிவு மேம்பாட்டுக்கு) அளவிற்கு விஞ்சிய உயர்வு கொடுக்கப்பட்டுள்ளது. விந்தை விந்தையான விஞ்ஞானக் கண்டுபிடித்தல்களினால் பரந்த ஒரு நகரத்தையே ஒரு நொடியில் அழிக்கும் நாசக்கருவிகள் உண்டாக்கப்பட்டு அழகான பெரிய நகரங்கள் பாழாக்கப்பட்டன. போரோடு யாதொரு தொடர்புமில்லாத, குற்றமும் புரியாத நகரமாந்தர் செத்து மடிந்தனர். எஞ்சி நின்றவர் கொடிய நோய்வாய்க்குட்பட்டு, நடைப்பிணமாய் நாளிதுவரை வாழ்ந்து வருகின்றனர். அளவுக்கு மிஞ்சிய அறிவு முதிர்ச்சியின் விளைவு இது!! அறிவை அழிவு வேலைகளின் பயன்படுத்திவிட்டனர். !!

பல்லாயிரம் ஆண்டுகளாக, ஆன்ம உயர்வே, உண்மை உயர்வு ; உலகாயத உயர்வு எல்லாம் பொய் ; என்னும் குறிக்கோள் கொண்டு வாழ்வு நடத்தினர், நம்

இந்திய மக்கள். பகைவனுக்கருளும் பண்பு, அநியாயம் எண்ணாத இதயம், போரிடும்போதும் நீதி தவறாத நெறி, உடல் பொருள் ஆவி ஆகிய அத்தனையையும் தியாகம் செய்யும் தீரம், பட்டம், பதவி, பணம், புகழ் முதலியவற்றைப் பொருட்படுத்தாத பெருவாழ்வு, எளிய வாழ்க்கையும் தூயசிந்தனையும் கொண்ட உயர் இலக்கு, பற்றற்ற சேவை, வெற்றியில் துறவு, ஆகிய எண்ணிறந்த நற்பண்புகளுடன் திகழ்ந்த நம்நாடு, அறிவுப் பகுதிக்கும் உடற்பகுதிக்கும் போதிய கவனம் அளிக்காத குறைபாட்டால் அந்நியர் படையெடுப்புக்குட்சிக்கி, அடிமைப்பட்டு, அல்லலுற்று, ஆக்கம் இழந்தது நாம் நன்கறிந்ததே.

மேற்கூறிய உண்மைகளிலிருந்து உடல், உள்ளம். ஆன்மா ஆகிய முப்பபுண்களும் ஒருங்கே ஒரு சேர, சம விரைவுடன் முன்னேற வேண்டும். மூன்று புரவிகள் பூட்டிய இரதம் சீராக முன்னேற வேண்டுமானால் மூன்றும் சம வேகத்துடன் ஓடவேண்டும், அல்லவா? அதைப் போலவேதான் கல்வியிலும்கூட. இந்த உண்மையைக் கீழ்க்கண்ட படங்கள் நன்கு விளக்கும்.



படம் 5 *சீரான கல்வியைக் காட்டுகிறது.*

**உண்மைக் கல்விக்கு காந்திஜி கூறும் இலக்கணம்:**

ஒவ்வொரு குழந்தையினுடைய உடல், உள்ளம், ஆன்மா ஆகிய மூன்று உறுப்புகளிலிருந்தும் மிகச் சிறந்த பண்புகளை நன்கு வளரச் செய்யும் முயற்சியே உண்மைக் கல்வியாகும்.

உண்மைக் கல்வியைப்பற்றி காந்திஜியின் ஆங்கில விளக்கத்தை கீழே அப்படியே காணவும்.

"By Education, I mean all-round drawing out of child and man-body, mind and spirit (Harijan 31-7-1937 .

True education is that which draws out and stimulates, the spiritual, intellectual and physical faculties of the child (Harijan 11-9-1937)

Education must draw the whole man out of the boy and girl and no education could be good that does not make useful citizens, whole men, of boys and girls (The year Book of Education 1940 and 41).

What constitutes the whole man-of-course his personality. It is the function of education, therefore, to bring about a harmonious development of the four aspects of human personality, namely body, heart, mind and spirit. So we have education of the body, of the heart, of the mind and of the spirit. (Patel's Educational Philosophy of Mahatma Gandhi-page 18)

True Education does not consist in Literary Training but, in character-building. My reading of Emerson, Ruskin, Mazzini and the *Upanishads* confirms such a belief.

The aim of education should be to develop to the full the potentialities of every child at school, in accord always with the general good of the community of which he is a member (The Board of Education in England).

**உண்மைக் கல்விக்கு வழி :**

உண்மைக் கல்விக்கு விளக்கம் கூறுவதோடு மட்டும் நின்று விடாமல் காந்திஜி உண்மைக் கல்விக்கு வழியும் கூறியுள்ளார். அது அவரே முப்பது ஆண்டுகள் சோதனைகள் பல, பல இடங்களில் நடத்திக் கண்டுபிடித்த வழியாகும். அவ்வழியின் வாயிலாக நம் நாட்டுக்கேற்ற நல்லதோர் கல்வி முறையை வகுக்க வித்திட்டுள்ளார். பட்டறிவின் வாயிலாகக் கண்டுபிடித்த அந்தக் கல்வி முறைக்குத் தான் ஆதாரக் கல்வி எனப்பெயர். அதற்கு அடிப்படைக் கல்வி, புதுக் கல்வி, நயீ தாலீம் எனவும் பெயர்களுண்டு (நயீ =புது ; தாலீம் : கல்வி ; நயீ தாலீம்=புதுக்கல்வி)

அந்த ஆதாரக் கல்வியின் தோற்றுவாய், வரலாறு முதலியவற்றை அடுத்த பகுதியில் விவரமாய்க் காணலாம்.

இவ்வாறு, காந்திஜி அவர்கள் நாட்டிற்கு விடுதலை வாங்கித் தந்து நாட்டுத் தந்தை எனப் பெயர் பெற்றது போல் நாட்டுக்கேற்ற நற்கல்வியான ஆதார கல்விக்கும் தந்தையாக விளங்குகிறார்.

உண்மைக் கல்வியின் இலக்கணப்படி ஒவ்வொரு சிறுவன் சிறுமியும் பின் கண்டுள்ளவற்றைப் பெற்றிருக்க வேண்டும்.

நல்ல உடல் — (ஆரோக்கியமுள்ள, சுறுசுறுப்பான வலிபொருந்திய.)

நல்ல உள்ளம் — (இது இதயத்தையும் சேர்த்து) (எதிர்பாராத எந்நிலையிலும் சமாளிக்கவல்ல மதிநுட்பம், விழிப்புடைமை, விஞ்ஞானக் கண் உடைமை)

நல்ல ஆன்மா — தந்நலமற்ற தொண்டு, இன்னு செய்யாமையிலும் உண்மையிலும் முழு நம்பிக்கை பற்றற்ற எளிய வாழ்வு.

உண்மைக் கல்வி கற்றவன் சமூக முன்னேற்றத்திற்கும் பாடுபடுவான் என்பது மேற்கூறிய விளக்கத்திலிருந்து சொல்லாமலே விளங்கும்.

## எழுத்தறிவுக்கும் கல்விக்குமுள்ள வேறுபாடு :

ஒவ்வொரு குழந்தையினுடைய உடல், உள்ளம், ஆன்மா ஆகிய மூன்றிலிருந்தும் மிகச்சிறந்த பண்புகளை நன்கு மலரச்செய்யும் முயற்சியையே கல்வி என்று சற்று முன்பு கண்டோம்.

சாதாரணமாக எழுதவும் படிக்கவும் தெரிந்த ஒரு நிலையே எழுத்தறிவு எனவும் கண்டோம். இவ்விரண்டிலிருந்தும் கல்விக்கும் எழுத்தறிவிற்கு முள்ள வேறுபாட்டினை அறிவது அரிதாகாது. எழுத்தறிவு என்பது கல்வியின் முடிவுமன்று தொடக்கமுமன்று. ஆண்களுக்கும் பெண்களுக்கும் கல்வி பயிற்றும் பலவேறு வழிகளில் எழுத்தறிவும் ஒரு வழி ; சாதனம் ; அவ்வளவுதான். எழுத்தறிவு என்பது மட்டும் ஒருக்காலும் கல்வி ஆகாது.

ஒரு சிற்றூரில் ஒரு குடியானவன் இருக்கிறான். அவன் நாணயமாய் உழைத்துக் குடித்தனம் நடத்துகிறான். அவனுக்கு உலக அறிவு நிறைய உண்டு. தன் கடமைகளை அவன் நன்கறிந்தவன். தன் பெற்றோர், மனைவி, மக்கள்

ஆகியவர் பால் எவ்வாறு நடந்துகொள்ளவேண்டுமென்று நன்கறிந்தவன். நீதிக்குக் கட்டுப்பட்டவன். பழிபாவம் அஞ்சுபவன். மகிழ்ச்சியுடன் வாழ்பவன். போதுமென்ற மனத்துடன் வாழ்பவன். ஆனால் தன் பெயரை எழுதத் தெரியாதவன். நடைமுறையிலுள்ள ஏட்டுக் கல்விப்பள்ளிகளில் பயிலாதவன். வாழக்கற்றவன்; ஆனால் எழுதவும் படிக்கவும் கல்லாதவன். அவனுக்கு மேலே சொன்ன கல்வி அதாவது அத்தகைய எழுத்தறிவுக்கல்வி எவ்வகையில் பயன்படக்கூடும்? அவனது மகிழ்ச்சியைப் பெருக்க அக்கல்வி சிறிதேனும் உதவுமா? எனக் காந்திஜி வினவுகிறார். கூர்ந்து நோக்கிடில் அக்கல்வியால் அவனுக்கு யாதொரு பயனும் கிட்டாது. ஆனால் மாறாக, அந்தக் கல்வி அவனுக்குத் தீங்கு விளைவிக்கக்கூடும். தன்னூரையும் தன் தொழிலையும் வெறுக்குமாறு அது ஒரு வேலை செய்யக்கூடும். எனவே குறுகிய குறிக்கோள் கொண்ட எழுத்தறிவு வேறு; பரந்த நோக்குக்கொண்ட கல்வி வேறு.

## முழு ஆளுமையின் எழுத்தறிவு (Literacy of the whole personality) என்ற சொற்றொடரின் பொருள் :

மேலே குறித்துள்ள ஆங்கிலச் சொற்றொடரில் எழுத்தறிவு என்னும் பொருள் கொண்ட Literacy என்ற ஆங்கிலச் சொல் உருவகத்தில் நகைச் சுவையோடு உபயோகிக்கப் பட்டுள்ளது என்பதை முதலில் அறிந்துகொள்ள வேண்டும். சாதாரணமாக ஓர் ஆளின் எழுத்தறிவு (Literacy of the Person) என்று தான் குறிப்பிடுவது வழக்கம். Personality என்ற சொல்லுக்கு ஆளுமை என்று பொருள். ஆளுமை என்பது மன நூலில் கையாளப்படும் ஒரு புதுச் சொல். அது ஓர் ஆளின் (person) பண்புகளனைத்தையும் குறிக்கும் பண்புச் சொல்லாகும். ஆள்+மை=ஆளுமை ஆகும் (எடுத்துக் காட்டாக, தாய் + மை = தாய்மை, ஆண் + மை = ஆண்மை, பெண் + மை = பெண்மை, குழந்தை + மை = குழந்தைமை, பேதை+மை=பேதைமை என்பதுபோல்)

ஆளுமை என்ற பண்புக்கு எழுத்தறிவு என்ற Literacy ஏது ? எனவே, அச்சொற்றொடருக்குப் பொருள் கூற முயலுமுன் அது உபயோகிக்கப்பட்டிருக்கும் அந்தப் பகுதியை அப்படியே கீழே தருகிறோம். அப்பகுதி ஸகீர் ஹுஸெயின் கமிட்டியின் அறிக்கையில் வருகிறது. மன நூல் நோக்குகொண்டு ஆதாரக் கல்வியின் அடிப்படைத் தத்துவங்களை ஆராய்ந்தாலும் அது நன்கமைந்துள்ளது என்று எடுத்துக் காட்டுங்கால், மேற்சொன்ன சொற்றொடர் வந்துள்ளது.

Psychologically, it is desirable, because it relieves the child from the tyranny of a purely academic and theoretical instruction against which its active nature is always making a healthy protest. It balances the intellectual and practical elements of experience, and may be made an instrument of educating the body and the mind in co-ordination. The child acquires not the superficial literacy which implies, often without warrant, a capacity to read the printed page, but the far more important capacity of using hand and intelligence for some constructive purpose. This, if we may be permitted to use the expression, "is the LITERACY OF THE WHOLE PERSONALITY,"

உண்மைக் கல்விக்கு வழி கூறுங்கால் புத்தகங்களுக்குப் பதிலாக, பயனுள்ள ஓர் ஆதாரத் தொழிலைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும். அத்தொழிலைக் கற்பிக்குங்கால் தாய்மொழி, வரலாறு, விஞ்ஞானம், பூகோளம், சமூகப் பாடங்கள், உடற்பயிற்சி கலை ஆகிய பாடங்கள் அனைத்தையும் அதனோடு இயைபு படுத்தியே கற்பிக்க

வேண்டும். எனக் காந்தி அடிகள் யோசனை கூறியுள்ளார் அல்லவா ?

அவ்வாறு தொழில் ஊடகமாக (Medium) வைத்துக் கொண்டு இணைத்துக் கற்பிக்குங்கால், உடல், உள்ளம், ஆன்மா ஆகிய மூன்றும் பயிற்சி பெறுகின்றன. கை, கால்கள், உடலுறுப்புகளனைத்திற்கும் வேலை ஏற்படுகிறது. மனம் சிந்திக்கிறது. வேலை செய்யும்போது பல சிக்கல் கள் நேர்முகமாக எழுகின்றன. அவற்றை மனம் சிந்தித் துச் சிந்தித்து விடை காண முயலுவதால் மனப்பயிற்சி ஏற்படுகிறது. தனித்தும் வேறு சிலருடன் கூடியும் தொழில் செய்யும்போது, ஒழுக்கம், சமூகப் பண்புகள் ஆன்மப் பண்புகள் வளர ஏதுக்கள் எழுகின்றன. இவ் வாறு தொழில் மூலம் கல்வியானது மனத்தையும், உடலை யும் இணைத்து முழு மனித வளர்ச்சிக்கு உதவுகிறது. பெரு இலக்கியத்தைச் சுவைக்க, அச்சிட்ட பக்கத் தைப் படிக்கும் எழுத்தறிவு தொடக்க நிலையாய் அமைவது போல், முழு மனிதனின் பல்வேறு பண்புகளை எளிதில் மலரத் தொடங்கச்செய்யும் இந்த தொழில் மூலம் கல்வி யை முழு ஆளுமையின் எழுத்தறிவு, அதாவது ஆளுமைப் பயிற்சியின் தொடக்க நிலை, என்று சுவைபடக் கூறுகிறார். இத்தகைய “ புது சொற்றொடரை உண்டாக்க நான் அனு மதிக்கப்பட்டால் ” என்று அவரே எழுதியுள்ளதை கவனிக்கவும்.

---

# 1-a

## ஆதாரக் கல்வி தோன்றிய வரலாறு

### 1904 - காந்திஜியின் சிந்தை கவர்ந்த நூல் :

காந்திஜி தென் ஆப்பிரிக்காவில் வாழ்ந்து வந்த போது அவருடைய வெள்ளைக்கார நண்பர் **போலக்** என்பார் ஒருவர் ஓர் ஆங்கிலப் புத்தகத்தை அவருக்குக் கொடுத்தார். அதன் பெயர் "Unto this Last". அதனை எழுதியவர் **ஜான் ரஸ்கின்** என்னும் ஆங்கிலப் பெரியார். ஒரே மூச்சில் காந்தி அதனைப் படித்து முடித்தார். அதில் இருந்த கருத்துக்கள் அவர் சிந்தையைக் கவர்ந்தன. அந்நூல் அவரது வாழ்க்கையில் ஒரு திருப்பத்தை ஏற்படுத்தியது. பின்வரும் மூன்று முக்கிய கருத்துக்களை அதிலிருந்து காந்தி பெற்றார் :—

1. சமூக நலனில் தனிப்பட்டவரின் நலன் உள்ளடங்கும்.

2. வேலையில் அதாவது உழைப்பில் உயர்வு, தாழ்வு கிடையாது. வழக்கறிஞரின் வேலையும் நாவிதனின் வேலையும் ஒரே மதிப்புள்ளதுதான். ஏனென்றால் இருவரும் தொழில் நடத்தி, தொழிலிலிருந்து பணம் ஈட்ட வேண்டியவரே.

3. உழைத்து வாழ்வதே உயர்ந்த வாழ்வு : நிலத்தை உழுது வாழ்வதோ அல்லது ஒரு குடிசைத் தொழில் செய்து வாழ்வதோ சிறந்தது ஆகும்.

அந்நூலிலுள்ள கருத்துக்களை நடை முறையில் சோதித்துப் பார்க்க காந்திஜி உடனே உறுதி செய்து கொண்டார்.

ஆதாரக் கல்வித் திட்டத்தில் மிகப் புரட்சிகரமான அம்சம் காந்திஜி தன்னிறைவுக் கொள்கைக்கு அழுத்தம்

கொடுத்தது ஆகும். அக் கருத்தினை காந்திஜி, ரஸ்கினது மேற்குறித்த நூலிலிருந்து தான் அறிந்துகொண்டார்



ரஸ்கின்

என, அவருடைய செயலாளரான மகாதேவ தேசாய் எழுதியிருக்கிறார். காந்திஜி வற்புறுத்திய தன்னிறைவு



டால்ஸ்டாய்

கொள்கைக்கும், ரஸ்கின் அவர்கள் குறித்துள்ள தன்னிறைவுக் கொள்கைக்கும் வேறுபாடுண்டு. எனினும்

முன்னவரது கொள்கைக்கு வித்து, பின்னவரது நூலே ஆகும் என மகாதேவ தேசாய் கூறியுள்ளார்.

தான் கற்றறிந்த அக் கருத்துக்களைத் தொகுத்து குஜராத்தி மொழியில் '**ஸர்வோதயம்**' என்னும் பெயரோடு காந்திஜி நூல் ஒன்றினை வெளியிட்டுள்ளார். அது பல்வேறு மொழிகளிலும் மொழி பெயர்க்கப் பட்டுள்ளது.

தன் சிந்தை கவர்ந்த பேரறிஞர் மூவர் எனக் காந்திஜியே குறிப்பிட்டிருக்கிருர். அவர்கள் **ராய் சந்த் பாய், ஜான் ரஸ்கின், கவுண்ட் லியோ டால்ஸ்டாய்** என்பவர்கள் ஆவர். ராய்சந்த்பாய் காந்திஜியின் சம காலத்தவர்; அவர் ஒரு கவி; ஒரு பேரறிஞர்; ஒழுக்கசீலர். அஹிம்சை பற்றிய மூலக் கருத்துக்களை அவரிடமிருந்துதான் காந்திஜி கற்ருர்.

டால்ஸ்டாய் என்பவர் ரஷ்யப் பேரறிஞர். அவர் எழுதிய "The kingdom of God is within you" என்ற நூல் காந்திஜியின் மனத்தில் அன்பு பற்றிய தெளிவான வித்து இட்டது. ஏதாவது ஒரு கைத்தொழில் வாயிலாகக் கல்வி கற்பிக்கப்பட வேண்டும்; உடலுழைப்பில்லாத கல்வி பயன்படாது என்ற கருத்தினையும் இவரிடமிருந்து தான் பெற்றதாகக் காந்திஜி கூறியுள்ளார்.

**1904-ன்பிற்பகுதி-ஃபீனிக்ஸ் குடியேற்றத்தில் சோதனை- ஆதாரக் கல்வி உதயமான இடம் :**

தென் ஆப்பிரிக்காவில் வாழும் இந்தியர்களின் நலன்களுக்காகத் தொண்டு செய்யும் பொருட்டு காந்திஜி தன் கூட்டாளிகளுடன் அங்குச் சிலகாலம் தங்க நேரிட்டது. 'இந்திய அபிப்பிராயம்' (Indian Opinion) என்ற ஆங்கில ஏடு ஒன்றினையும் அங்கு அவர் நடத்தி வந்தார்.

டர்பன் என்பது தென் ஆப்பிரிக்காவில் ஓர் பெரிய நகரம். அதன் அருகில் ஃபீனிக்ஸ் என்பது ஒரு சிற்றூர்.

அது ஒரு புகை வண்டி நிலையமும் கூட. ஃபீனிக்ஸ் என்னு மிடத்திலிருந்து $2\frac{1}{2}$ கல் தொலைவிலும், டர்பன் நகரி லிருந்து 14 கல் தொலைவிலுமுள்ள ஓரிடத்தில் காந்திஜி யும் அவரது கூட்டாளிகளும் குடியேறினர்கள். அதுதான் ஃபீனிக்ஸ் குடியேற்றம் ஆகும். அது 20 ஏக்கர் பரப்புள் ளது. காந்திஜி அங்கு வாழ்ந்து வந்ததன் காரணமாக அது சரித்திரப் புகழ்பெற்றுவிட்டது.

அங்கு அவர்கள் அனைவரும் தூய சிந்தனையுடன் கூடிய எளிய வாழ்வு வாழ உறுதி செய்துகொண்டனர். தூய்மை, நாவடக்கம் (உணவு பற்றியது), தாமே ஏற்றுக் கொண்ட ஏழைமை, உடலுழைப்புடன் கூடிய வேலையில் ஈடுபடுதல், உடற்பயிற்சி, அச்சமின்மை, சுய-உதவி, சகிப்பு ஆகிய பண்புகள் நோன்பாகப் பின்பற்றப்பட்டன. அங்கு ஏட்டுக் கல்வியை விட ஒழுக்க மேம்பாட்டிற்கே உயர்வு கொடுத்தனர்.

கல்விபற்றிய தம் கருத்துக்களை அங்குதான் சோதிக் கத் தொடங்கினர். குடியிருப்பில் வாழ்ந்தவர்களின் குழந் தைகள், சுமார் முப்பதின்மர், அங்குக் காந்தியின் குறிக் கோளின்படி கல்வி கற்பிக்கப்பட்டனர். பள்ளிப் படிப்பு மூன்று மணி நேரம்; விவசாய வேலை இரண்டு மணி நேரம்; பத்திரிகை அச்சகத்தில் இரண்டு மணி நேரம் வேலை; சௌகரியப்பட்டால், இரவில் கொஞ்சநேரம் பாடம் படிப்பார்கள். இதுதான் அவர்களது அன்றாட நடைமுறை வேலைகள்.

பகல் முழுவதும் உடலுழைப்பிலும், படிப்பிலும் குழந்தைகள் ஈடுபட்டிருந்ததன் காரணமாக, அவர்களது சிந்தையும், நடத்தையும் தூய்மையாகவே இருந்தன. புத்தகப் படிப்பு அதிகமில்லாத குறையை இது ஒருவாறு ஈடு செய்தது. விசேஷ சம்பவம், பெரிய மனிதர்களின் வரலாறு ஆகியவைபற்றித் தோட்டத்திலும், அடுக்களை யிலும் வேலை செய்யும்போதே காந்திஜி குழந்தைகளுடன்

உரையாடினார். இவ்வாறு அறிவோடு உடலுழைப்பையும் சேர்த்துக் கற்பிக்க முயன்றார்.

ஆசிரம வாழ்க்கை, தனித்தனியான படிப்பும் உடலுழைப்பும்; எளிய வாழ்க்கை; யதார்த்த வாழ்க்கையுடன் தொடர்பு, ஆகியவை அங்குச் சோதிக்கப்பட்டன.

தன்னுடைய சோதனைகள் பற்றியும், கல்விபற்றிய கருத்துக்கள் பற்றியும், பின்னர், 1908-ல் "ஹிந்த் ஸ்வராஜ்" என்னும் நூலில் காந்திஜி விரிவாக எழுதியுள்ளார்.

## 1911 - டால்ஸ்டாய் பண்ணை : புதுச் சோதனைகள்:

1911-ல் ஸத்தியாக்கிரஹிகள் தங்கள் குடும்பத்தினருடன் தங்கி சமய வாழ்வு வாழ அதாவது ஒரு வகையான ஆசிரம வாழ்வு வாழ வேண்டுவதன் அவசியத்தைக் காந்தி அறிந்தார். 'ஹெர்மான் காலன்பாக்' என்ற ஜெர்மானிய நண்பரின் உதவியுடன் தென் ஆப்பிரிக்காவில் டிரான்ஸ்வாலில் ஓர் ஆசிரமத்தை காந்தி நிறுவினார். முன்னமேயே கூறிய கௌண்ட் லியோ டால்ஸ்டாய் என்ற பேரறிஞரின் பால் அவர் கொண்டிருந்த மதிப்பின் காரணமாக அவர் பெயரை அப்பண்ணைக்குச் சூட்டினார். எனவே அது டால்ஸ்டாய் பண்ணை ஆயிற்று. அங்குச் சமய மணம் வீசிற்று. தூய்மையும் சுறு சுறுப்பும் போட்டியிட்டன. இந்துக்களும், முஸ்லீம்களும், கிறிஸ்தவர்களும், பாரசீயர்களும் அங்கு வாழ்ந்தனர். தத்தம் சமயக் கோட்பாடுகளையே அவர்கள் கடைப்பிடித்தனர். பிற சமயத்தாருக்கு யாதொரு அவமதிப்பும் சிந்திக்காது தத்தம் வழியில் ஆத்ம முன்னேற்றம் அடைய முயன்று வந்தனர்.

தமது கல்விக் கருத்துக்களைச் சோதிக்க ஒப்பற்ற ஆய்வுக் கூடமாக, காந்திஜி அப்பண்ணையை அமைத்துக் கொண்டார். ஆசிரமத்தில் வாழ்ந்தவர்களின் குழந்தைகளுக்குக்கல்வி கற்பிக்கும் பொறுப்பைக் காந்தியே ஏற்றுக் கொண்டார்.



காலன்பாக்குடன் ஆசிரம வாழ்க்கை

அவர் கூறுகிறார் "இலட்சிய நிலைகளில் பிள்ளைகளுக்கு உண்மைக் கல்வி புகட்ட, தகப்பன்மார்களால் மட்டுமே முடியும். வேற்றூரின் உதவி மிகக் குறைந்த அளவில் இருந்தால் போதும். எனவே, டால்ஸ்டாய் பண்ணை வாழ் குழந்தைகளுக்குத் தந்தையின் இடத்தை நான் ஏற்றுக்கல்வி கற்பிக்கும் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டேன்''.



டால்ஸ்டாய் பண்ணை

இதயத்தைப் பயிற்றுவது, ஒழுக்கத்தை வளர்ப்பது ஆகிய இரண்டும் அங்கு முதலிடம் பெற்றன. அடிப்படையில் ஒழுக்கத்தை நன்கு வளர்த்து விட்டால் பிள்ளைகளே மற்றெல்லாவற்றையும் கற்றுவிடக் கூடும் எனக் காந்தி எண்ணினர். எனினும், புத்தகக் கல்வியும், உடற் பயிற்சியும் அங்கு கைவிடப்படவில்லை. காலன்பாக், பரக்ஜீ தேசாய், காந்தி ஆகிய மூவரும் பிள்ளைகளுக்கு வகுப்பு நடத்தினர்கள். அங்கு வேலைக்காரர்கள் கிடையாது. சமையல் வேலை முதல் சாய்க்கடைத் துப்புரவு செய்யும் வேலை வரை குடும்பவேலைகளனைத்தையும் பிள்ளைகளும், ஆசிரம வாசிகளுமே செய்ய வேண்டியிருந்தது. எனவே

குழந்தைகளே உடல் உழைப்பு வேலைகளனைத்திலும் ஈடுபட்டனர். அதன் வாயிலாக அவர்களுக்கு இயற்கையான உடற்பயிற்சி கிட்டியது.

குழந்தைகளுடைய வேலை பின்வருமாறு:—செடி, கொடி, மரங்களைப் பராமரித்தல், குழிகள் வெட்டுதல், விறகு வெட்டிக் கொணர்தல் முதலியன. தனிப்பட்ட விளையாட்டோ, ஆட்டமோ அங்கு இல்லை. அங்கு தேவைப்படவும் இல்லை. இவ்வாறு கல்வியோடு உடலுழைப்பினையும் இணைத்தார் காந்தி.

பின்னர் காந்திஜி வெறும் உழைப்பிற்குப் பதிலாக ஒரு தொழிலைப் புகுத்திச் சோதிக்க ஆரமபித்தார். காலன் பாக் என்ற நண்பரை அருகிலுள்ள டிராப்பிஸ்ட் பாதிரியார் மடத்திற்கனுப்பினர். அது கத்தோலிக்கரின் மடமாகும். அங்கிருந்த பாதிரிமார்களும், பள்ளிப் பிள்ளைகளும் ஐந்து மணி நேர உடலுழைப்பு வேலையில் தினசரி ஈடுபட்டனர். அவ்வேலை வாயிலாக ஓரளவிற்குத் தன்னிறைவு பெறும் குறிக்கோளுடன் வேலை செய்தனர். அங்குள்ள ஒவ்வொருவரும் உழைப்பின் உயர்வை நன்கறிந்திருந்தனர். பற்பல கைத்தொழில்கள் அங்குப் பிள்ளைகளுக்குக் கற்பிக்கப்பட்டன. பள்ளி வாழ்க்கையில் அவை முக்கியமானதோர் இடம் பெற்றிருந்தன என்பது குறிக்கற்பாலது.

அங்கிருந்து காலன்பாக் செருப்பு தைக்கும் தொழிலைக் கற்று வந்தார். அவருக்கு ஏற்கெனவே தச்சு வேலை தெரியும். எனவே டாலஸ்டாய் பண்ணையில் ஒரு தொழில் கற்பிக்க ஏற்பாடாயிற்று. நாளொன்றுக்கு 8 மணி நேர வேலை என்றும் உறுதி செய்து கொண்டார்கள்.

புத்தகப்படிப்பிற்கு இரண்டு மணி நேரம் ஒதுக்கப்பட்டது. ஆனல் தொழிலுக்கு அதிக நேரம் அளிக்கப்பட்டது. அங்கு நடந்த தொழில்கள் குழி வெட்டுதல், சமைத்தல், மலஜலசுத்தி, செருப்பு தைத்தல், எளிய தச்சு

வேலை, சிற்றுண் வேலை முதலியவையாகும். அங்குப் படித்த குழந்தைகளின் வயது ஆறிலிருந்து பதினறுக்குள் இருந்தது. தொழில் புரிவதன் வாயிலாகக் குழந்தைகளை முழு வளர்ச்சி அடையச்செய்வதே கற்பித்தலின் முதன்மையான நோக்கமாயிருந்து வந்தது. ஒவ்வொரு தொழிலிலும் ஆசிரியரும் பெரியோர்களும் கூடவே வேலை செய்து வந்ததால் அலுவல்கள் எல்லாவற்றையும் குழந்தைகள் விளையாட்டாகவே கருதினர். இவ்வாறு பண்ணையில் உடற்பயிற்சியோடு தொழிற் பயிற்சியும் நடந்து வந்தது. ஆனல் தொழிலை மையமாக வைத்துக் கல்வி கற்பிப்பதோ அல்லது தொழில் வாயிலாகத் தன்னிறைவு அடைவது என்ற கொள்கைகளோ காந்திஜிக்கு அந்நிலையில் தோன்றவில்லை.

காந்தி புத்தகப் படிப்புக்கு மூன்று பாட வேளைகள் அளித்தார். ஆசிரமத்தில் ஹிந்தி, தமிழ், குஜராத்தி, உருது ஆகியவை கற்பிக்கப்பட்டன. எல்லாக் குழந்தைகளும் அவரவர் தாய் மொழியிலேயே கற்றனர். ஆங்கிலமும் கற்பிக்கப்பட்டது.குஜராத்திக் குழந்தைகளுக்கு மட்டும் சிறிது அளவிற்கு வடமொழி கற்பிக்கப்பட்டது. குழந்தைகள் அனைவருக்கும் எளிய வரலாறு, பூகோளம் கணிதம் ஆகியவையும் கற்பிக்கப்பட்டன. பள்ளியில் புத்தகங்கள் அவ்வளவாகப் பயன்படுத்தப் படவில்லை. பாடப் புத்தகமில்லாத குறை அங்கு காந்திஜிக்கு எழவே இல்லை. பிள்ளைகளுக்கு அவர்களது ஆசிரியர்களே பாடப்புத்தகங்களாகும் என்பது அவரது துணிபு. படிப்பது என்பது பாட்டாயும், பிறர் சொல்லக் கேட்பது என்பது இன்பமாயும் அவர்களுக்கு இருந்தது என்று காந்திஜி கண்டார். ஆகவேதான் பேசும்போது, கூடியவரை பிள்ளைகளுக்குச் சலிப்புத் தட்டாதவாறு தன்னைத் தற்காத்துக்கொண்டார். போதனையினல் தூண்டப்பட்ட பிள்ளைகள் காந்திஜிக்கு வினவிடுத்தனர். பிள்ளைகளின் அவ்வினக்களிலிருந்து அவர்களது உட்கொள்ளும் ஆற்றலை ஒருவாறு மதிப்பிட முடிந்தது எனக் காந்திஜி தன் சுய-சரிதத்தில், எழுதியுள்ளார்.

பண்ணை வாழ் குழந்தைகளுக்குத் தத்தம் சமயத்தின் அடிப்படைக் கருத்துக்கள் பற்றியும், தத்தம் வேத புத்தகங்களிலுள்ள பொது அறிவு பற்றியும் ஒரு சிறிதளவாவது தெரிந்திருக்க வேண்டுமென்று காந்தி எண்ணினுர். எனவே அவற்றைக் குழந்தைகளுக்குக் கற்பிக்க முயன்ருர்.

" கற்றதனுலாய பயனென் கொல் வாலறிவன்
நற்ருள் தொழஅர் எனின் ''

என்னும் வள்ளுவர் வாக்கிற்கிணங்க, கடவுளைப் பற்றி அறிய முயலாததோர் கல்வித் திட்டத்தை அவர் கல்வியாகவே கருதவில்லை. மேற்சொன்ன சமயப் பயிற்சிக்குக் காந்திஜி கையாண்ட வழி இதுதான். " ஆசிரியர் மனம் மொழி, செயல் ஆகியவற்றில் தூய்மையாய் இருத்தல் வேண்டும் ; ஒழுக்க சீலராய் இருத்தல் வேண்டும்; பள்ளிப் பிள்ளைகளுக்கு அவர் ஒரு நிரந்தர எடுத்துக் காட்டாக நடந்துகொள்ள வேண்டும்.''

பண்ணைப்பள்ளியில் இன்ன செய்யாமையின் (அஹிம்சையின்) ஏற்றத்தைத் தெளிவாகக் கண்டார். அடித்தல், கிள்ளுதல், உதைத்தல் போன்ற உடல் தண்டனைகளை அவர் முற்றிலும் எதிர்த்தார். பள்ளி வாழ்க்கையில் ஒன்றிரண்டு நடத்தைக் கோளாறுகள் ஏற்படாமல் இல்லை. அவற்றையெல்லாம் அன்பினுலேயே அவர் சரிப்படுத்தினுர்.

ஒரு சமயம், நடத்தையில் தவறிய மாணவனை முன் கோபத்தினுல் கழியாலடித்து விட்டார். ஆனுல் அது ஓர் ஆத்திரமும் அவசரமும் ஆன செய்கை என்பதை அவர் உணர்ந்ததும் அதற்காகப் பலகாலம் மனம் வருந்தினுர். பின்னர் ஒரு சமயம் நெறி தவறிய வேருெரு மாணவனைத் திருத்த உபவாசம் மேற்கொண்டார்.

தவறிய மாணவர்களைத் திருத்த அவர் பின்பற்றிய கொள்கைகளைப் பின்வருமாறு கூறலாம்:-சிறைச் சாலைத் தலைவன் போல் அவர் சீறுவதில்லை; நடத்தை தவறியவர்

களுக்கு நயமாக, நன்னெறிகள் காட்டி, சிறந்த முறையில் அவற்றிற்கு இணங்கச் செய்து அவர்களது ஆற்றல்களை ஆரோக்கியமான முறையில் மடைமாற்றித் திருத்த முயல்வதே அவரது முக்கிய நோக்கமாகும். அடக்கு முறை, திட்டுதல், நீதி நவிலுதல், 'செய்ய வேண்டாம்' 'செய்யக் கூடாது' என்று கட்டளையிடுதல் போன்ற எதிர்மறையான முறைகளை அவர் கையாளவில்லை. பிள்ளைகளின் மனத்தில் அச்சத்தையூட்டும் எந்த முறையையும் அவர் கையாள மறுத்தார். அன்பு, அனுதாபம், ஆதரவு, அவர்களது அல்லலை அறிதல்ஆகிய மூல மந்திரங்களின் வாயிலாகவே அவர்களைத் திருத்த எண்ணினர். பிள்ளைகளின் தவருன நடத்தைக்கு ஆசிரியரும் ஓரளவுக்குப் பொறுப்பானவர் என்ற தீவிரக்கொள்கையுடையவர் காந்தி. அதன் காரணமாக ஒரு சமயம், ஏழு நாள் தொடர்ந்த உபவாசத்திற்கும் அதையொட்டி 4 மாத காலத்திற்கு ஒரு வேளை உணவே உட்கொள்ளும் சுய தண்டனைக்கும் அவர் தன்னை உள்ளாக்கிக் கொண்டார். இவ்வாறு டால்ஸ்டாய் பண்ணை சோதனை வாயிலாகக் காந்தி கண்ட உண்மைகள் பின் வருமாறு:—ஆசிரம வாசத்தின் உயர்வு, உழைப்பின் உயர்வு, தன்னிறைவு தத்துவத்தின் அவசியம், தண்டனை பற்றிய குறிப்புகள், பாடப்புத்தகம் பற்றிய கருத்துக்கள், சமய போதனை பற்றிய கருத்துக்கள், தாய்மொழி வாயிலாகப் போதனை போன்றவை ஆகும்.

**சாந்தி நிகேதன வாசம்:**

1914-இவ்வாண்டில் காந்தி இந்தியா திரும்பினர். இந்தியாவில் ஆங்காங்குள்ள சில கல்விநிலையங்களை அவர் பார்வையிட்டார். பள்ளிகளில் நடந்து வந்த கல்வித் திட்டம் சேதம் மிகுந்ததென்று, ஏன் தீங்கிழைப்பதும் கூட என்றும், அவர் கண்டார். கல்கத்தாவிற்கு அருகில் உள்ள சாந்திநிகேதன் ஆசிரம கலாசாலையில் காந்தி தன் கூட்டாளிகளுடன் தங்க நேர்ந்தது. அக்கலாசாலையை வங்கக்கவி **ரவீந்திரநாத் தாகூர்** நிறுவி நடத்திவந்தார்.

அங்கு, காந்திக்கும் அவரது நண்பர்களுக்கும் ஒரு தனி இடம் அளிக்கப்பட்டது. ஃபீனிக்ஸ் குடியேற்றத்திலேயே நன்கு பழக்கப்பட்ட ஆசிரம வாழ்க்கை முறையில் காந்தி குழுவினர் சாந்தி நிகேதனில் வாழ்க்கை நடத்தினர். அது சாந்திநிகேதன் ஆசிரம வாசிகளைப் பிரமிக்கச் செய்தது. காந்தி அங்குள்ள ஒவ்வொருவருடனும் உரையாடினர், தத்தம் வேலைகளைத் தாமே செய்வதன் பெருமையையும், உயர்வையும் ஒவ்வொருவரையும் உணரச் செய்தார். அதன் விளைவாகச் சாந்திநிகேதன் ஆசிரமத்தில் புரட்சிகரமான மாறுதல்கள் நிகழவாரம்பித்தன. காய்கறிகள் வெட்டுதல், தானியங்களைத் துப்புரவு செய்தல், அறைகளையும் சுற்றுப்புறங்களையும் சுத்தம் செய்தல் ஆகிய எல்லாக் குடும்ப வேலைகளிலும் கல்வி பயில வந்த கனவான்களின் குமாரர்கள் ஈடுபட்டக் காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. தாகூரே பிரமித்தார். அவர் சொன்னர் “ இந்தச் சோதனையில் தான் நம் நாட்டு விடுதலையின் திறவுகோல் உள்ளது ”.

காந்திஜியின் சாந்தி நிகேதன வாசம் தற்காலிகமானதே எனினும் அவரது சொற்பகால ஆசிரம நறுமண வாழ்க்கை சாந்தி நிகேதன வாசிகளைப் பெரிதும் கவர்ந்தது.

## 1915 : சபர்மதி சத்தியாகிரஹ ஆசிரமச் சோதனைகள்:

ஃபீனிக்ஸ் குடியேற்ற மாதிரியில் இந்தியாவிலே ஆசிரமம் ஒன்றினை நிறுவ காந்திஜி உறுதி பூண்டிருந்தார். அதன்படி, 1915-ல் ஆமதாபாத் நகரில் ஒரு பங்களாவில் ஓர் ஆசிரமத்தை நிறுவினர். பின்னர் அதனை (சுமார் 4 கல் தொலைவில்), சபர்மதி நதியின் கரையில் உள்ள ஓர் இடத்திற்கு 1917-ல் மாற்றினர். ஆசிரமத்தோடு ஒரு பள்ளியும் இணைக்கப்பட்டது. அங்கு ஆசிரம வாசிகளின் குழந்தைகளுக்கும், கல்வி பயிலாத முதியோருக்கும் கல்வி கற்பிக்க ஏற்பாடு செய்யப்பட்டது. புத்தகப் படிப்

புடன் கூட நூல் நூற்பதும், தச்சு வேலையும் முக்கிய கைத்தொழில்களாகக் கற்பிக்கப்பட்டன. கைத்தொழில் களைப் பிள்ளைகள், முதியோர்கள் ஆகிய இருதரத்தாரும் கற்றனர். ஆசிரமத்தில் வேலையாட்கள் அமர்த்தப்பட வில்லை. ஆசிரம வேலைகளனைத்தையும் பிள்ளைகளும், பெரியோர்களுமே செய்தனர். சத்தியாகிரஹ ஆசிரமம்



ஆமதாபாத் ஆசிரமம் 1915

மற்றவர் அனைவரும் பின்பற்ற வேண்டிய ஓர் ஆதரிச ஆசிரமமாகத் திகழ வேண்டுமென்று காந்திஜி அல்லும் பகலும் பாடுப்பட்டார். பள்ளியில் கற்பிக்க வேண்டிய பாடங்கள், கற்பிக்கும் முறைகள் ஆகியவை குறித்து ஆசிரம வாசிகளிடையே காரசாரமான விவாதங்கள் நடத் தினர். ஆசிரம வாசிகளிடையே கருத்து வேற்றுமைகள் சில இருக்கத்தான் இருந்தன. ஆசிரமம், ஆசிரமப் பள்ளி ஆகிய இருவகை நிறுவனங்களையும் நடத்தவேண்டி யிருந்ததால்தான் ஆட்சி விஷயங்களில் வேறுபாடுகள்



சபர்மதி ஆசிரமம் 1917

எழுந்தன. இந்த ‘ஆன்ம வேறுபாடுகளிலிலிருந்துதான் வர்தாத்திட்டம் என்ற ஆதாரக் கல்வித்திட்டம் உருவாகி யது’ என்று காந்திஜியே எழுதியுள்ளார். கிராமியக் கைத்தொழில்கள் தேசீயமுக்கியத்வம் பெற்றவை என்றும் அவற்றின் வளர்ச்சிக்குப் பள்ளிகளின் வாயிலாகக் கல்வி நிபுணர்களின் கண்காணிப்பில் ஏற்பாடு செய்ய வேண்டும் என்றும் காந்திஜி ஒரு முடிவுக்கு வந்தார்.



தொழுகை இடம் (சபர்மதி ஆசிரமம்)

1932-ல் ஏரவாடா சிறைச்சாலையில் வாழ்ந்து வந்த காலை தன்னுடைய கல்விச் சிந்தனைகளைத் திருத்தி அமைத்து வெளியிட்டார். அவரது கருத்துக்கள் ‘சத்யா கிருஹ ஆசிரம்னே இதிஹாஸ்’ என்னும் நூலில் வெளி வந்தன.

ஆசிரமத்தில் சம்பிரதாய முறையில் கல்வி கற்பிக்கப் படவில்லை. ஆனால் கல்வியில் நூற்புத் தொழில்கள் கற் பிக்கப்பட வேண்டுமென்றும், அந்தத் தொழில் மைய

இடத்தைப் பெறவேண்டு மென்றும், கல்வி பெரும் பாலும் தன்னிறைவு பெற்றதாயிருக்க வேண்டும் என்றும், மேலும் கல்வி கிராமிய வாழ்க்கையுடனும் பண்பாட்டுட-னும் தொடர்பு பெற்றிருக்க வேண்டு மென்று அனைவரும் ஒத்துக் கொண்டனர்.

சாதாரணப் பள்ளிகளில் கொடுக்கப்படும் கல்வி, வாழ்க்கைக்குப் பயனற்றது என்றும், ஒவ்வொரு மாணவ னும் உண்மையில் தனக்குத்தானே ஆசிரியர் என்றும், பட்டறிவே ஒரு பெரிய பள்ளி என்றும், ஒவ்வொருவருக் கும் விடா முயற்சி, தன்னம்பிக்கை ஆகியவையே முக்கிய மென்றும் காந்தி கண்டார். அதன்படி சபர்மதி சத்யா கிரஹ ஆசிரமவேலைகள் செவ்வையாக நடந்து வந்தன என்று காந்திஜி எழுதியுள்ளார். ஒவ்வொரு துறைக்கும் ஒரு தனிப் பள்ளி இருந்ததென்று எடுத்துக் காட்டியுள் ளார்.

நூற்புத் தொழிலின் கல்விப்பயனையும் பொருளாதாரப் பயன்களையும் காந்திஜி சபர்மதி ஆசிரமத்தில் நன்கு கண்டறிந்தார். ஆமதாபாத் நகரில் பல பஞ்சாலைகள் உள்ளன என்று உங்களுக்குத் தெரிந்திருக்கும். தொடக்க நிலையில், அந்த ஆலைகளிலிருந்து பஞ்சுப்பட்டைகள் வாங்கி வந்து தக்கிளியால் நூற்றுப் பின்பு, அந்நூலை நெய்து துணியாக்கி வந்தனர். காலப்போக்கில் தமது அடிப்படைக் குறிக்கோள்களுக் கிணங்க, பஞ்சுப்பட்டை களையும் ஆசிரம வாசிகளே தயாரித்துக் கொள்ள வேண்டு வதன் அவசியத்தை அறிந்து அவ்வாறே செய்யத் தொடங்கினர். அக்காலத்தில் அவ்வாறு செய்துகொள்ளத் தகுந்த கருவிகள் கிடையா. கொட்டைநீக்க, பட்டை போட, விரைவாய் நூல் நூற்கக் கருவிகள் இல்லை. ஆங்கிலேயர் இந்நாட்டுக்கு வந்து பருத்தி ஆலைகள் நிறுவு வதற்குமுன்பு இந்தியாவில் நூற்புத்தொழில் சம்பந்தமான பல்வேறு எளிய கருவிகள் இருந்தன. ஆனால் ஆலைகள் ஏற்பட்ட பின்னர் அவை மறைந்தொழிந்தன. ஆங்கி

லேயரும் கங்கணம் கட்டிக்கொண்டு நூற்பு, நெசவுத் தொழிலை அடியோடு அழிக்க முயன்று ஒருவாறு வெற்றியும் பெற்றனர். எனவேதான் காந்திஜிக்கு, சரியான நூற்புக் கருவிகள் கிடைக்கவில்லை. விடாமுயற்சியால் பரோடா ராஜ்ஜியத்தில் பீஜபூர் என்னும் சிற்றூரில் பழையகால சர்க்கா(ராட்டை)ஒன்று கண்டுபிடிக்கப்பட்டது. அதிலிருந்து பல எளிய சர்க்காக்கள் உருவாயின. செங்குத்து நிலையிலுள்ள சர்க்கா படுக்கை நிலைக்கு மாறிற்று. அங்குமிங்கும் செல்லுங்கால் எடுத்துச் செல்லக்கூடிய ராட்டைகள் உருவாயின. உழவன் ராட்டை, இரட்டை நூற்பு இராட்டை, கைமணை, பட்டை போடும் மணை, துனுயி மணை போன்ற நூற்புக்கருவிகள் பல உருப்பெற்றன.

ஆசிரமத்தில் பருத்திச் செடி வளர்ப்பது முதல் துணி நெய்தல் வரையிலுள்ள அலுவல்கள் அனைத்தும் நடைமுறைக்கு வந்தன. தாமே நூல் நூற்றுக் கைத்தறிகளில் தாமே நெய்த துணிக்குக் **கதர்** என்ற புதுப்பெயர் அளிக்கப்பட்டது. கதர் உடுப்பது கட்டுப்பாடு, கண்ணியம் கடமை, தியாகம், நாட்டுப்பற்று, விடுதலை வேட்கை ஆகியவற்றிற்கு அறிகுறியான சின்னம்என்பது உறுதியாயிற்று. ராட்டை விடுதலையின் சின்னம்; நாட்டு நல் வாழ்வின்சின்னம் என்று அனைவரும் அறியும்படி செய்யக் காந்தி பாடுபட்ட கதை நன்கறிந்ததே.

சபர்மதிப் பள்ளியிலும் ஆசிரமத்திலும் நூற்புவேலை வாயிலாக ஒருவகை தந்நிறைவும் எய்தப் பெற்றது. நூற்புத் தொழில் வாயிலாக ஒருவாறு கல்வி கற்பிக்கவும் முயலப்பட்டது.

## 1915—1937 :

இவ்வாண்டுகளில் காந்திஜி இந்திய அரசியலில் புகுந்து தீவிரமாய் உழைத்ததன் காரணமாய் கல்விச் சோதனைகளுக்கு மும்முரமான கவனம் செலுத்த நேரமில்லாமல் போயிற்று. எனினும் சபர்மதி ஆசிரமத்தில்

மேலே விவரித்தவாறு ஒருவாருன கல்விச் சோதனைகள் நடந்தவாறிருந்தன. கல்விக்குத் தொண்டைவிட அர சியல் ஈடுபாடுகளில் காந்திஜியின் ஆலோசனையும் தலைமை யும் தேவைப்பட்டிருந்த போதிலும் காந்திஜி நாட்டின் முன்னேற்றம், நலம், பொருளாதாரம் ஆகிய அனைத்தும் கல்வியில் தான் உள்ளது என நன்கு அறிந்தவராதலால், கல்வியைப் பற்றி அவர் ஒரு கணமும் மறந்து விடவில்லை; நாட்டுக்குகந்த நற்கல்வி முறைபற்றி அவர் மனம் ஆராய்ந்தவாறே தானிருந்தது.

சமயம் ஏற்பட்ட போதெல்லாம் கல்விபற்றி உருவாகித் தெளிந்துவரும் கருத்துக்களைச் சொற்பொழிவு கள் வாயிலாகவோ, பத்திரிகைக் கட்டுரைகள் வாயிலாக வோ, பேட்டிகள் வாயிலாகவோ (Interview) நாட்டு மக்களுக்குத் தெரிவிக்காம விருந்ததில்லை. அவற்றுள் சில:-

**1920—**

மகத்தான கல்விச் சோதனையாக, காந்தி 1920-ல் குஜராத் வித்யாபீடத்தை ஏற்படுத்தினர். "ஸா வித்யா யா விமுக்தயே" என்பதே அவர் அதற்கு அளித்த கோஷம். "எது விடுவிக்கிறதோ, அது தான் கல்வி" என்பது அதன் பொருள். அத்தகைய வித்தியாபீடங்கள் பல் மாகாணங்களில் உருவாயின. உண்மை யான தேசீயக் கல்வித்திட்டம் ஒன்றினை உருவாக்க அவை முயன்றன. ஆனல் ஆட்சியிலிருந்த ஆங்கிலேயர் அவற்றை அழிக்க முயன்றனர். எனவே அவை தம் நோக்கத்தில் வெற்றிபெறவில்லை. எனினும் நாட்டுக் கேற்ற கல்வித் திட்டத்தை உருவாக்கும் முயற்சியான தீ அணையவேயில்லை.

**1921—**

2-2-1921 தேதியிட்ட யங் இந்தியா (Young India) என்ற பத்திரிகையில் நூற்புத் தொழிலைப் பற்றிப் பின்வருமாறு காந்தி எழுதியுள்ளார் :—நூற்பின் பெருமை

என்னவென்ருல், நம்பத்தகாத வகையில் அது எளிதா ணது ; சுலபமாகக் கற்றுக்கொள்ளக் கூடியது ; மலிவானது; ஒவ்வொரு கிராமத்திலும் ஏற்றுக்கொள்ளக் கூடியது.

**1921—**

15-5-1921 தேதியிட்ட யங்க் இந்தியா (Young India) என்ற பத்திரிகையில் "பள்ளிகளில் நூற்புத் தொழிலை நுழைக்க, கீழ்க்கண்ட முக்கிய நிபந்தனைகள் கவனம் பெற வேண்டும் :- கல்விக்கான செலவை ஓரளவு சரிக்கட்ட வேண்டும், குழந்தைகளுடைய உடலை யும், மனத்தையும் பயிற்ற வேண்டும், குழந்தைகள் தற்சார்பு உள்ளவர்களாகவும், தன்னம்பிக்கை உள்ளவர் களாகவும் ஆகவேண்டும்." என அவர் எழுதிப்புள்ளார்.

**1921—**

1-9-1921 தேதியிட்ட ஹரிஜன் இதழில் தேசியக் கல்வியைப் பற்றி காந்திஜி தன் கருத்துக்களைத் தெளிவாகவும் அழுத்தந் திருத்தமாகவும் வெளியிட்டார்.

தற்காலக் கல்வி முறையிலுள்ள குறைகளை அங்கு அவர் மிக அழகாக எடுத்துக் காட்டியுள்ளார் :—

1. அக்கல்வித்திட்டம் அயல்நாட்டுப் பண்பாட்டின் அடிப்படையில் அமைக்கப் பெற்றுள்ளது. நம் பழம்பெரும் நாட்டின் பண்பாடு அறவே புறக் கணிக்கப் பட்டுள்ளது.

2. மூளையைப் (அதாவது அறிவை) பயிற்றுவதை மட்டும் அது மேற்கொண்டுள்ளது. இதயத்தை யோ (Heart), கையையோ (Hand) பயிற்ற அது ஏற்பாடு செய்யவில்லை.

3. வேற்றுமொழியின் ஊடகமாகக் கல்வி பயிற்றப் படுகிறது.

அவர் அங்கு எடுத்துக் காட்டியுள்ள குறைபாடுகளில் வேறு சில பின்வருமாறு:—

தொடக்கத்திலிருந்தே கல்வி புத்தக மையமா யுள்ளது. யதார்த்த வாழ்க்கையோடு கல்வி தொடர்பு கொள்ளவில்லை. படிப்பு அதிகமாக அதிகமாக ஒரு மாணவன் தன் இல்லத்தையும், பெற்றோரையும், பிறந்த கிராமத்தையும், நாட்டுப் பண்பாட்டையும் வெறுக்கத் தொடங்குகிறான். உடல் உழைப்பை வெறுக்கத் தொடங்கு கிறான். கல்விச் செலவும் மிகுதி. அனைவரும் படிக்க முடிவ தில்லை. ஆக்க ஆலோசனையாக காந்தி கூறினார்:—கைத் தொழில் ஒன்றினைப் பள்ளியில் கற்றுக்கொடுத்தால், அத னால் வருமானம் வரும். கல்விச் செலவை ஓரளவுக்கு ஈடு செய்யலாம். தவிர, மாணவர்களனைவரும் தன்னம்பிக்கை பெறுவார்கள். இவ்வாறு கைத்தொழிலால் இரட்டை நலம் உண்டு.

**1928**—6-9-1928 தேதியிட்ட ஹரிஜன் ஏட்டில் "கல்வி யில் அஹிம்ஸை" என்னும் பொருள் பற்றி காந்தி எழுதியுள்ளார்.

**1931**— காந்திஜி இங்கிலாந்திலுள்ள லண்டன்மா நகருக்குச் சென்றிருந்தார். அங்கு (Teachers' World) 'ஆசிரியர்களின் உலகம்' என்ற பத்திரிகைக்கு பேட்டி அளித்தார். கல்வி பற்றிய தம் கருத்துக்களை அதன் நிருபருக்குக் கூறினார். அப்பத்திரிகை வாயிலாக அவரது பேட்டி விவரம் இங்கிலாந்து முழுவதற்கும் வெளியிடப்பட்டது.

**1936**— 21-11-1936 தேதியிட்ட ஹரிஜன் பத்திரிகை யில் **பால்கல்வி** பற்றி (Sex Education) தமது அரிய, அனுபவக் கருத்துக்களை வெளியிட்டார்.

**1937**— இந்தியக் கல்வி-உலகில் சரித்திரப் புகழ் வாய்ந் தது. காந்திஜியின் கருத்துக்கள் முதிர்ந்து ஒழுங்

கான கோவையுள்ள ஓர் அமைப்பாகப் பழுத்தன. சுமார் நாற்பதாண்டுச் சோதனைகளால் "முழுக்கல்வி, ஏதாவது ஒரு கைத்தொழில் வாயிலாகத்தான் கற்பிக்கப்பட வேண்டும்" என்ற திடமான முடிவிற்கு வந்து விட்டார். தொழிலை ஓர் அதிகப்படியான பாடமாகக் கற்பிப்பதில் பயன் யாதொன்றுமில்லை என நன்கு கண்டார். செய்யும் கைத்தொழில் வாயிலாக, கல்விக்கானசெலவில் ஓரளவைச் சரிக்கட்ட வேண்டுவதை முக்கியமாகக் கொள்ளவேண்டு மென்ற அசைக்கமுடியாத, புரட்சிகரமான முடிவிற்கு வந்தார்.

அரசியல் அலுவல்களை முன்னிட்டு இந்தியாவின் பல பாகங்களுக்குக் காந்திஜி சுற்றுப் பிரயாணம் செல்ல நேர்ந்தது. கல்வித் திட்டத்தில் உள்ள குறைபாடுகளை யும், அவற்றினால் விளைந்த சமூகச் சீர் கேடுகளையும் காந்தி கண்டார். சமூகத்தில் ஊழல்கள் மலிந்திருந்தன. எங்கு பார்த்தாலும் சுரண்டல் (அரசியல் சுரண்டல், பொருளாதாரச் சுரண்டல். சமூகச் சுரண்டல், சமயச் சுரண்டல்) அவற்றின் விளைவாய் அன்பும் தொண்டும் அறவே மறக்கப்பட்டன. வெறுப்பு, பொறாமை, தன் முன்னேற்றம், சுயநலம் தலைவிரித்துத் தாண்டவம் ஆடின. அதனால் சமூகத்தில் பிளவு ஏற்பட்டது. பொரு ளுடையார், பொருளில்லார் (Haves and have-nots) வசதியுள்ள சிறுபான்மையோர், வசதி இழந்த பெரும் பான்மையோர் (Classes and masses) என்றவையே அப்பிளவுகளாகும்.

இச் சமூகக் கேடுகளைக் கண்ட காந்தி மனம் உருகி, சமூக முன்னேற்றத்திற்காக நிர்மாணத் திட்டம் ஒன்றைத் தீட்டினார். அதன் வாயிலாக அனைவருக்கும் நலம் கொடுக்கும் சர்வோதயச் சமுதாயம் என்ற புதியதோர் சமுதாயத்தைப் படைக்க முயன்றார். அந்நிர்மாணத் திட்டத்திலுள்ள தொழில்கள் பின் வருமாறு :—

## நிர்மாணத் திட்டம்

"கதர் அபிவிருத்தியும் கைத்தொழில் வளர்ச்சியும்
மத ஒற்றுமையும் மாதர் முன்னேற்றமும்
மதியினை மயக்கும் மதுவினை விலக்கலும்
புதுமுறைக் கல்வியும் பொது ஜனக் கல்வியும்
நம் தாய்மொழியும் இந்திய மொழியும்
ஊர்ச் சுகாதாரமும் உடல் சுகாதாரமும்
ஹரிஜன சேவையும் சரி சம உடைமையும்
வையம் வாழும் வகை செய்யும் உழவர்
குஷ்டம் என்னும் கொடு நோய் கொண்டோர்
மலைவாழ் குடிகள் மாணவர் தம்மொடு
தொழில் செயும் மக்கள் துயரம்தீர்த்தலும்
ஆகவிப்பதிணெண் அரும்பணி வாயிலாய்
சர்வோதய நற்சமுதாயத்தினை
நிர்மாணம் செய்ய நித்தமும் உழைப்போம்"

காந்தி வாழ்ந்திருந்த காலத்தில் நிர்மாணத் திட்டங்களில் பதினெட்டு உருப்படிகள் இருந்தன. இப்பொழுது அவை இருபத்து இரண்டாக உயர்ந்துள்ளன. அந் நான்கும் கீழே தரப்பட்டுள்ளன. 19. பசு பாதுகாப்பு. 20. அகதிகளுக்குதவி. 21. இயற்கை வைத்தியம் 22. சர்வ மத சமரசம்.

இவ்வாறு கல்வித் திட்டத்தின் வாயிலாக வகுப்பு பேதமற்ற, வர்க்க பேதமற்ற ஒரு சர்வோதயச் சமுதாயத்தைப படைக்க எண்ணினுர். அச்சமுதாயத்தில் ஒருவரையொருவா சுரண்ட முயலவே மாட்டார். அனைவரும் கூட்டுறவாக வேலை செய்வார்கள். தனிப் பட்டவனும், சமூகமும் ஒன்றையொன்று பாதிக்காமல் அச் சமுதாயத்தில் முன்னேற முடியும்.

### 31-7-1937 ஆதாரக் கல்வியின் அருணோதயம்:

—இத் தேதியிட்ட ஹரிஜன் பத்திரிகை இதழில் ஆதாரக் கல்வியைப் பற்றி காந்தி எழுதினுர். "ஒரு

குழந்தை, கல்வியைத் தொடங்கும் தறுவாயிலிருந்தே உபயோகமுள்ள ஒரு கைத் தொழிலின் வாயிலாகவே கற்றுக் கொடுப்பேன். அந்த நொடியிலிருந்து அது பொருளை உற்பத்தி செய்ய உதவுவேன். இப்பேர்ப்பட்ட கல்வி முறையின் வாயிலாகத்தான் குழந்தையின் மனமும், ஆன்மாவும் உயர்ந்த பட்ச வளர்ச்சி அடையுமென நான் உறுதியாய் நம்புகிறேன். தற்போது உள்ளது போலக் கைத்தொழிலை இயந்திர ரீதியாகவோ, ஏனோதானோவென்றோ கற்பிக்கக் கூடாது. கைத்தொழிலின் ஒவ்வொரு சிறு நுட்பத்தைப்பற்றி ஏன் எப்படி என்றவையெல்லாம் குழந்தைகளுக்குக் கற்பிப்பேன். நம்பிக்கையில்லாமல் நான் இந்தக் கட்டுரையை வரையவில்லை. ஏனென்றால் எனக்கு இந்த விஷயத்தில் போதிய அனுபவம் உண்டு. தொண்டர்களுக்கு, எங்கெல்லாம் நூற்பு கற்பிக்கப் படுகிறதோ அங்கெல்லாம் ஏறக்குறைய இதே போன்ற முறை தான் பின்பற்றப்படுகிறது. செருப்பு தைக்கும் தொழிலும், நூற்பும் நானே இம்முறையில்தான் கற்பித்து நற்பலன்களை அடைந்துள்ளேன்."

இந்தியாவில் உள்ள பல்வேறு கல்வி நிபுணர்கள் இக் கட்டுரையைப் படித்தனர். அவர்களிற் பலர் பழைய சம்பிரதாய முறையில் கல்வி கற்ற நிபுணர்கள். எனவே, காந்தியின் புரட்சிகரமான யோசனைகள் அவர்களுக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. ஆதலால் அவர்கள் காரசாரமாக இக் கொள்கைகளை எதிர்த்துப் பத்திரிகைகளில் கண்டனம் எழுதினர்கள். சிலர் காந்திஜிக்கே நேராகக் கடிதம் எழுதினர்கள்.

மேற்சொன்ன கண்டனங்களோடு கூடவே நாட்டுக் கல்வியில் சிந்தை செலுத்திய நல் அன்பர்களிடம் இருந்து புகழுரைகளும், பாராட்டுக் கடிதங்களும் வராமலில்லை. எதிர்ப்பாளர்களின் கண்டனங்களை எல்லாம் காந்தி கவனத்துடன் படித்தார். அவற்றிற்குத் தக்க பதில் அளித்தார்.

இது இவ்வாறு நிற்க, ஓர் ஒளி விளக்கைக் குன்றின் மேலிட்ட பாங்குபோல், காந்தியின் தீர்க்கதரிசனக் கருத்துக்களை அனைவருக்கும் அறிமுகப்படுத்தி பொது மக்களின் எண்ணத்தை அறிய பொன்னான வாய்ப்பு ஒன்று தன்னாலேயே வந்தது. 1937-ம் ஆண்டு அக்டோபர் திங்களில் வர்தா நகரில் உள்ள மார்வாரி உயர்தர பள்ளிக்கூடத்தின (நவ பாரத வித்யாலயம்) வெள்ளி விழா நடக்கவிருந்தது. அதுபொழுது கல்வி மகாநாடு ஒன்றினையும் கூட்ட அப் பள்ளியின் செயலாளரான ஸ்ரீ நாராயணன் அகர்வால் என்பவர் முனைந்தார் அவர் காந்தி அன்பர். ஆதலின் அவர் காந்திஜியை அண்டி, வெள்ளி விழாக் கல்வி மாநாட்டுக்குத் தலைமை தாங்க இசைவு பெற்றார்

22, 23 10-1937—இவ்விரண்டு நாட்களிலும் மேற்சொன்ன கல்வி மாநாடு வர்தா நகரில் கூடியது. அதற்கு இந்தியாவின் நாற்புறங்களில் இருந்தும் தனிப்பட்ட அழைப்பின் பேரில் கல்வி நிபுணர்களில் பலர் வந்திருந்தனர்.

மாநாடு இரண்டு நாட்கள் நடந்தது. காந்திஜியின் சிறப்புரை 22-10-37 அன்று நிகழ்ந்தது. சிறப்புரைக்குப் பின்னர் கல்வி அன்பர்கள் காந்திஜியின் கருத்துக்களைப் பற்றி மனம் விட்டு விவாதித்தனர். இரண்டாம் நாளும் விவாதங்கள் நடந்தன. அன்றைய தலைவர் டாக்டர் ஸாகிர் ஹுசெயின் ஆவார். விவாதங்களின் முடிவாய் வந்த நான்கு தீர்மானங்களை அவர் மாநாட்டுப் பிரதிநிதிகள் முன் சமர்ப்பித்தார். அவர் கூறினர்:—"இவற்றை நன்கு ஆராயுங்கள். அச்சமோ ஆசாபாசமோ இன்றி உங்களது ஐயங்களையும், கண்டனங்களையும் சொல்லுங்கள். காந்திஜியால் தெரிவிக்கப்பட்ட கருத்துக்கள் என்பதற்காக நீங்கள் யாதொன்றையும் ஏற்க வேண்டாம். உங்கள் கருத்துக்கள் எதிர்மாருக இருந்தபோதிலும் நான் அவற்றைக் கேட்க விரும்புகிறேன். மாநாட்டுப் பிரதிநிதிகளும் கேட்க விரும்புகிறார்கள்"

கொண்டு வந்த பிரேரேபணை மீது விவாதம் நடந்தது. கண்டனங்களுக்கு விடை கூறப்பட்டன. இறுதியில் பிரேரேபணைகள் ஓட்டுக்கு விடப்பட்டன. K. T. ஷா என்ற பேராசிரியர் மட்டும் தன்னிறைவுக் கொள்கையை எதிர்த்தார். மற்றபடி எல்லாம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டன. தீர்மானங்களாவன :—

1. இந்நாட்டிலுள்ள எல்லாக் குழந்தைகளுக்கும் 7 ஆண்டுகளுக்கு இலவசக் கட்டாயக் கல்வி அளிக்க வேண்டும்.

2. தாய் மொழி வாயிலாகவே கற்பிக்க வேண்டும்.

3. ஏழாண்டுக் காலம் முழுவதிலும் கல்வி கற்பிக்கும் முறையானது உற்பத்தி தரும் பயனுள்ள ஒரு தொழில் வாயிலாகவே நடைபெற வேண்டும். குழந்தையின் எல்லா ஆற்றல்களும் அந்த ஆதாரத் தொழில் வாயிலாகவே கூடிய மட்டும் இணைக்கப்பட்டு கற்பிக்கப்பட வேண்டும். ஆதாரத் தொழிலைத் தேர்ந்தெடுக்குங்கால் குழந்தை வாழ் சூழ் நிலையைக் கவனித்து அதற்கொத்தவாறு தேர்ந்து எடுக்க வேண்டும்.

4. இந்தக் கல்வி முறை ஆசிரியர்களுடைய சம்பளத்தை ஈடு செய்வதாக நாளடைவில் மலர வேண்டும்.

உடனடியாக ஸாகிர் ஹுசெயின் தலைமையில் ஒரு கமிட்டி நிறுவப்பட்டது. அதில் கல்வித் துறையில் அனுபவம் பெற்ற பேரறிஞர்கள் உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். மேற்சொன்ன தீர்மானங்களின் பேரில் ஓர் அறிக்கை தயாரிப்பதும் பள்ளிக்கு உதவுமாறு பாடத்திட்டம்ஒன்று தீட்டுவதும் கமிட்டியின் வேலை என்று முடிவு செய்யப்பட்டது. ஒரு திங்களுக்குள் அக் கமிட்டி அறிக்கையைச் சமர்ப்பிக்க வேண்டுமென்றும் நாள் குறிக்கப்பட்டது. அக் கமிட்டியின் உறுப்பினர்களிற் சிலர் :—

அரியநாயகம், விநோபாபாவே, க்வாஜா குலாம் ஸையிடீன், காகா சாகேப் கலேல்கர், கிஷோரி லால் மஷ்ரூவாலா, ஜே. ஸி. குமரப்பா, கிருஷ்ணதாஸ் ஜாஜூ, ஸ்ரீமதி ஆஷாதேவி.



அரியநாயகம்

டிஸம்பர் 1937 — ஸாகிர்ஹுஸெயின் கமிட்டியின் முதல் அறிக்கை வெளிவந்தது. இந்தியாவில் உள்ள கல்வி அன்பர்கள் அனைவரும் அதனைக் கூர்ந்து படித்து, கண்டனங்களையும், பாராட்டுக்களையும் தெரிவித்தனர். அறிக்கையோடு முதல் ஏழு வகுப்புகளுக்கான பாடத்திட்டம் ஒன்றும் இணைக்கப்பட்டிருந்தது.

**பிப்ரவரி 1938**—இத் திங்களில் ஹரிபுராவில் காங்கிரஸ் மகாநாடு நடந்தது. அதில் ஆதாரக் கல்வி சம்பந்த மான தீர்மானங்கள் நிறைவேறின. அது ஜாகிர் ஹுசெயின் கமிட்டித் தீர்மானங்களின் முதல் மூன்றை




ஹிந்துஸ்தானி தாலீமீ சங்கம்

மட்டும் நிறைவேற்றின. தன்னிறைவுத் தத்துவம் பற்றிய

நான்காவது தீர்மானம் காங்கிரஸ் மகா சபையில் எடுத்துக் கொள்ளப்படவில்லை.

### ஏப்ரல் 1938—இரண்டாம் அறிக்கை

மேற்சொன்ன கமிட்டியின் இரண்டாவது அறிக்கை வெளி வந்தது. முதல் அறிக்கையிலுள்ள சில குறை பாடுகள் நீங்கப்பட்டன. அன்பர்களின் ஐயங்களுக்குச் சில விளக்கங்கள் இதில் சேர்க்கப்பட்டன.

### ஏப்ரல் 1938—ஹிந்துஸ்தானீ தாலீமீ சங்கம் உதயம்:

காங்கிரஸ் தீர்மானத்தின் விளைவாக அகில இந்திய கல்விச் சங்கம் (ஹிந்துஸ்தானீ தாலீமீ சங்) ஒன்று நிறுவப் பட்டது. அச்சங்கத்திற்குத் தலைவர் ஸாகிர் ஹுசெயின். செயலாளர்-அரியநாயகம். சங்கம் "காந்திஜியின் யோசனை யோடு உடனடி நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். தேசியக் கல்வித்திட்டம் ஒன்று வகுக்க வேண்டும். அதனை மாகாணக் கல்வித்துறை அமைச்சர்களுக்கும், தனிப்பட்ட முறைக் கல்வித் தொண்டர்களுக்கும் சிபாரிசு செய்ய வேண்டும்" எனக் காங்கிரஸ் மாநாடு கட்டளையிட்டது.

மேற்சொன்ன சங்கம் வர்தா நகருக்கருகில் உள்ள சேவாகிராம் என்னும் சிற்றூரில் துவக்கப்பட்டது. ஓர் ஆதாரப் பள்ளியும், ஆசிரியர் பயிற்சிப் பள்ளியும் தொடங்கப்பட்டன. ஒருவகைப் பாடத்திட்டம் வகுக்கப் பட்டது. சோதனைகளும் தொடங்கப் பட்டன. நாளிது வரை இச்சங்கமே ஆதாரப் பள்ளிகளுக்கும், ஆதாரப் பயிற்சிப் பள்ளிகளுக்கும் பிற தொண்டர்களுக்கும் வழி காட்டி வருகிறது. ஆண்டுதோறும் வெவ்வேறு இடங் களில் அகில இந்திய அடிப்படையில் இச்சங்கம் மாநாடு கூட்டுகிறது. இம் மாநாடுகளில் ஆதாரக் கல்வித் தொண்டில ஈடுபட்டிருக்கும் தொண்டர்களையும், மத்திய, இராஜ்ய அரசினர் கல்வித்துறைப் பிரதிநிதிகளையும் கூட்டு கிறது. ஆங்காங்கு எழும் சிக்கல்கள் பற்றி மாநாடு ஆலோசனைகள் கூறுகிறது. இதுவரை அகில இந்திய

**ஆதாரக் கல்வி மாநாடுகள் நடந்த இடமும், ஆண்டும் கீழே தரப்பட்டுள்ளன:—**

| எண். | ஆண்டும் மாதமும். | | நடந்த இடமும் ராஜ்யமும். |
|---|---|---|---|
| 1. | அக்டோபர் | 1939 | பூனா—பம்பாய் மாகாணம் |
| 2. | ஏப்ரல் | 1941 | ஜாமியா நகர்—டில்லிக்கருகில் |
| 3. | ஜனவரி | 1945 | சேவா கிராமம்—மத்தியப் பிரதேசம் |
| 4. | ஏப்ரல் | 1948 | பிக்ரம்—பீஹார் மாகாணம் |
| 5. | மே | 1949 | பெரியநாயக்கன் பாளையம், கோவை ஜில்லா, மதருஸ் மாகாணம் |
| 6. | ஏப்ரல் | 1950 | அங்குல்—ஒரிஸா மாகாணம் |
| 7. | ,, | 1951 | ஸேவாகிராமம்—மத்தியப் பிரதேசம் |
| 8. | ,, | 1952 | ,, |
| 9. | நவம்பர் | 1953 | டிட்டாபர்—அஸ்ஸாம் மாகாணம் |
| 10. | நவம்பர் | 1954 | ஸனேஸ்ரா—சௌராஷ்டிரா |
| 11. | மே | 1956 | காஞ்சீபுரம்—சென்னை |
| 12. | மே | 1958 | டுர்க்கி—பீஹார் |
| 13. | ஏப்ரல் | 1959 | ராஜ்புரா—பஞ்சாப் |

**ஜனவரி 1945**—ஆதாரக் கல்விக்குப் புதுவிளக்கம் கூறினார் காந்தி. "வாழ்க்கைக்கான கல்வி: வாழ்க்கை முழுவதும் கல்வி" என புதுத் தொடர் ஒன்று உண்டாயிற்று. வயதுவந்தோர் கல்வி நிலையும், பூர்வ ஆதாரக் கல்வி நிலையும் சேர்க்கப்பட்டன. ஆதாரக் கல்வி அளிக்க வேண்டிய காலம் ஏழாண்டு காலமாக வர்தா மாநாட்டில் தீர்மானிக்கப் பட்டது அல்லவா? அது இவ்வாண்டில் எட்டாண்டுக் காலமாக உயர்த்தப்பட்டது.

தவிர மேலே சொல்லப்பட்ட 7 வகுப்பு பாடத் திட்டத்தை அனுபவத்தையொட்டித் திருத்தி அமைக்க முடிவு செய்யப்பட்டது.

**1947 ஜனவரி— 1945-ல்** முடிவு செய்தபடி I முதல் V வகுப்புகளுக்குத் திருத்தப்பட்ட பாடத்திட்டம் வெளியிடப்பட்டது.

**14-12-1947**—ஆதாரக்கல்வி பற்றி காந்தி கடைசி முறையாகப் பேசினர். அன்று இன்ன செய்யாமை, உண்மை ஆகிய இரண்டு அடிப்படைக் கொள்கைகளேயும் தொண்டர்கள் மறக்கவேகூடாது என்று நினைவுறுத்தினர்.

**30-1-1948**—காந்திஜி அமரரானர்.

**1950—I** முதல் VIII வகுப்புகளுக்குரிய திருத்தப்பட்ட பாடத்திட்டம் வெளிவந்தது. நம் சென்னை அரசாங்கம் அதை அப்படியே ஏற்று நம் ராஜ்ஜிய ஆதாரப் பள்ளிகளுக்கு அளித்துள்ளது. ஆனல் ஒரு மாறுதல் உண்டு. ஹிந்துஸ்தானீ தாலீமீ சங்கத்தாரின் மேற்சொன்ன பாடத்திட்டத்தில் ஆங்கிலம் சேர்க்கப்படவில்லை. ஆனல் நமது சென்னை ராஜ்யத்திலுள்ள ஆதாரப் பள்ளிகளில் VI வகுப்பிலிருந்து ஆங்கிலம் கற்பிக்கப்பட்டுவர அனுமதி உண்டு. சாதாரண ஆரம்பப் பள்ளியில் VI - VIII-க்குக் குறிக்கப்பட்டுள்ள ஆங்கிலப் பாடத்திட்டம் பின்பற்றப் படுகிறது.

**நாடெங்கும் ஆதாரக் கல்வி பரவுதல்:**

முன் சொன்னபடி 1938-ல் ஸேவா கிராமத்தில் இந்துஸ்தானி தாலீமீ ஸங்கமும் முதல் ஆதாரப் பள்ளியும் முதல் ஆசிரியர் பயிற்சிப் பள்ளியும் ஏற்படுத்தப்பட்டன.

ஸாகிர் ஹுசெயின் கமிட்டியின் அறிக்கையோடு I முதல் VII கிரேடுகளுக்கான பாடத்திட்டமும் இணைக்கப்பட்டிருந்தது. அதற்கு அனுபவப் பிற்புலம் யாதொன்றும் இல்லை. எனவே, அது கற்பனையிலிருந்தது வடித்தெடுத்ததோர் திட்டமாகவே இருந்தது. ஆதலால் அதில் பல குறைபாடுகள் இல்லாமல் இல்லை. எனினும் முதல் ஆதார நிறுவனங்கள் அந்தப் பாடத் திட்டத்தைத் தான்

பின்பற்றின. அனுபவம் பெறப் பெற, பாடத் திட்டமும் மாற்றி யமைக்கப்பட்டது.

அந்த ஆசிரியப் பயிற்சிப் பள்ளியில் பயின்ற தொண்டர்கள், ஆதாரக் கல்வியின் அடிப்படைக் கொள்கைகளை ஆதாரக் கல்வியின் தாயகத்திலேயே,மூலகர்த்தாக்களிடமே பயின்று தத்தம் ராஜ்ஜியங்களுக்குத் திரும்பி ஆதாரப் பள்ளிகள் திறந்து கற்பிக்கலாயினர். ராஜ்ஜியங்களில் ஆதாரக் கல்வி முறையில் இயங்கும் ஆசிரியர் பயிற்சிப் பள்ளிகளும் திறக்கப்பட்டன. 1937 - முதல் 1939 - வரை காங்கிரஸ் கட்சியினர் ஆட்சி பீடத்திலிருந்ததால், ஆதாரக் கல்வி நாடெங்கும் எளிதில் பரவியது, இரண்டாவது உலக யுத்தத்தின் காரணமாக, காங்கிரஸ் அமைச்சர்கள் 1939-ல் பதவியிலிந்து விலக நேரிட்டது. அதன் பயனாய் ராஜ்ஜியங்களில் (பீஹாரைத் தவிர) ஆதாரக் கல்வியின் வளர்ச்சி தடைப்பட்டது. எனினும் ஹிந்துஸ்தானீ தாலீமீ சங்கம் மட்டும் (அது அரசினர் சார்பற்ற தனி நிறுவனமாதலால்) ஆதரவற்ற சூழ்நிலையில் அடக்கமாகத் தொண்டாற்றி வந்தது,

1945-க்குப் பின்னர் மீண்டும் காங்கிரஸ் கட்சியினர் பதவியேற்றனர். ஆதாரக் கல்வியும் ராஜ்ஜியங்களில் புத்துயிர் பெற்றது. 15-8-1947 அன்று நாடு விடுதலை அடைந்தது அல்லவா? அதன் விளைவால் ஆதாரக்கல்வி அனுகூலமான திருப்பம் பெற்று மிக விரைவாய் வளர ஆரம்பித்து நாடெங்கும் பரவியுள்ளது.

ஆசிரியப் பயிற்சிப் பள்ளிகள் ஆதாரக் கல்வி முறையில் மாற்றப்பட்டு வருகின்றன. நமது ராஜ்ஜியத்தில் ஒரு சிலவற்றைத் தவிர மற்றெல்லா ஆசிரியப் பயிற்சிப் பள்ளிகளும் அவ்வாறுமாற்றப்பட்டு நன்கு தொண்டாற்றி வருகின்றன.

அவ்வாறே ராஜ்ஜியத்திலுள்ள ஆரம்பப் பள்ளிகள் எல்லாம் ஆதாரப் பள்ளிகளாக மாற்றத் திட்ட

மிடப்பட்டிருக்கிறது. அத்திட்டத்தின் அடிப்படையில் மாவட்டம் தோறும் மாற்றப்பட்ட ஆதாரப் பள்ளிகளும், புதிதாகத் திறக்கப்படும் ஆதாரப் பள்ளிகளும் ஆண்டுக்கு ஆண்டு அதிகரித்து வருகின்றன.

உயர் ஆதாரப் பள்ளிகள் இரண்டு தே. கல்லுப்பட்டியிலும் (மதுரை மாவட்டத்தில்), வேதாரணியத்திலும் (தஞ்சை மாவட்டத்தில்) தோன்றியுள்ளன.

பட்டதாரிகளைப் பயிற்றத் தனிக் கல்லூரி ஒன்றும் ஒரத்தநாட்டில் அண்மையில் திறக்கப்பட்டுள்ளது.

டில்லியில் ஆதாரக் கல்வி ஆராய்ச்சிக் கழகம் ஒன்றும் நிறுவப்பட்டுத் தொண்டாற்றி வருகிறது.

இத்திட்டம் பற்றிய சோதனைகள் வர்தாவில் முதன் முதலில் தொடங்கப்பட்டதால் அதற்கு 'வர்தாத் திட்டம்' என்றும் பெயர் கிடைத்தது. இதற்கு ஆதாரக் கல்வி என்றும் பெயர். அதுவே தற்போதுள்ள பெயர். ஆதாரம் என்ற அடைமொழிக்குக் காரணம் பின் வருமாறு :—

1; முதல் முதல் அளிக்கப்படும் கல்வி இதுதான். காலத்தை யொட்டி நோக்கினாலும் இது முந்தியது.

2. கல்வியின் உயர்நிலைகள் சீரான வளர்ச்சி பெற இது இன்றியமையாததாம்.

3. இன்று ஏடு தூக்கும் குழந்தைகள் நாளைப் பீடுடன் வாழப் போகும் பிரஜைகள் ஆவர். அந்த முதியோர் சமூக வாழ்விற்கு இது தயாரிக்கிறது.

ஆதாரக் கல்வி பிறந்து வளர்ந்த வலாறு இது. வரப்போகும் அத்தியாயங்களில் இதன் அடிப்படைக் கொள்கைகளை இன்னும் நுட்பமாகக் கவனிப்போம்.

# 2

# வாழ்க்கைக்கான கல்வி

[ "வாழ்க்கைக்காக வாழ்க்கை வாயிலாகக் கல்வி" என்ற கூற்றின் கருத்து, வாழ்க்கையில் வெவ்வேறு பருவங்களுக்கேற்ற வெவ்வேறு கல்வி நிலைகள் (பூர்வ ஆதாரக் கல்வி, ஆதாரக் கல்வி, உயர்-ஆதாரக் கல்வி, வயது வந்தோர் கல்வி.]

**வாழ்க்கைக்கான கல்வி—காந்திஜியின் புது விளக்கம்.**

1938 முதல் 1944 வரை அமுலிலிருந்த ஆதாரக் கல்வித் திட்டத்தின்படி, 7 முதல் 14 வரை வயதுள்ள குழந்தைகளுக்குக் கல்வி அளிக்கும் விஷயத்தில் மட்டுமே சிந்தை செலுத்தப்பட்டு வந்தது. 1939-ல் இரண்டாம் உலக யுத்தம் தொடங்கியது. இந்தியப் பொது மக்களின் விருப்பத்திற்கு மாருக, இந்தியாவை அந்த யுத்தத்தில் இறங்கச் செய்தனர் ஆட்சியில் இருந்த ஆங்கிலேயர். அதன் காரணமாக காங்கிரஸ் அமைச்சர்கள் தம் பதவியை விட்டு விலகினர்; இதன் விளைவாய் ஆதாரக் கல்வியின் வளர்ச்சி தடை பெற்றது. பல ராஜ்ஜியங்களில் அத் திட்டம் கைவிடப்பட்டது. பல தலைவர்கள் சிறையிடப் பட்டனர். ஆதாரக் கல்வித் தந்தை காந்தியும் சிறையில் அடைபட்டார். 1945-ல் தான் அவரை வெளியே விட்டார்கள்.

காந்திஜி சிறையிலிருந்தபொழுதும் ஆதாரக் கல்வியைப் பற்றி எண்ணியவாறே இருந்தார். அவருடைய உள்ளத்தில் அதைப்பற்றிய புதுக் கருத்துக்கள் அங்குத் தான் தோன்றின. சிறையை விட்டு வெளி வந்ததும் அவர் சொன்னர்;—

" சிறையில் வாழ்ந்த காலத்திலும் புதுக் கல்விபற்றித் தீவிரமாய் யோசித்துக்கொண்டிருந்தேன். என் மனத்தில் அலைகள் மோதிக்கொண்டிருந்தன. தற்கால சாதனைகளைக் குறித்துப் பேசிவிட்டு நாம் வாளாவிருத்தல் கூடாது. குழந்தைகளின் இல்லங்களுக்கும் நாம் கல்வியை எடுத்

துச் செல்லவேண்டும். அதாவது குழந்தைகளின் பெற்றோர்களுக்கும் நாம் கல்வி கற்பித்தாகவேண்டும். ஆதாரக் கல்வி, வாழ்க்கைக் கல்வி, வாழ்க்கைக்கான கல்வி ஆகவேண்டும்''.

வாழ்க்கைக்கான கல்வி ஆழமான பொருள் உடையது. வாழ்க்கையின் கால அளவை மட்டும் அது குறிக்கவில்லை.

ஆதாரக் கல்வி பற்றிய இந்தப் புது விளக்கம் மிகவும் புரட்சிகரமானது. ஆதாரக் கல்வியின் வரலாற்றிலேயே இது ஒரு புது அத்தியாயத்தை ஏற்படுத்தியது எனலாம்.

1945-ல் சேவா கிராமத்தில் தொண்டர் கூட்டத்தில் காந்திஜி பேசும்போது வாழ்க்கைக்கான கல்வியைப் பற்றி மேலும் விளக்கிச் சொன்னர் :—

"ஆதாரக் கல்வி என்பது ஒரு படகு போன்றது. அது இதுகாறும் பாதுகாப்பான ஒரு துறைமுகத்திலிருந்தது. அதாவது அதன் இயக்கம் குறுகிய அளவில் நடந்துவந்தது. இனி அது அலை மோதும் அகன்ற ஆழியில் வெளிப் போதல் அவசியம்.

பரந்த கடலில் படகுகளுக்கு வழிகாட்டி துருவ நட்சத்திரம் ஆவதுபோல நம் ஆதாரக் கல்விப் படகுக்கு "கிராமக் கைத்தொழில்" என்பதே வழிகாட்டியாகும். நம்முடைய வேலைக்களத்தின் அகலம் பெரிதாகவேண்டும். 7 முதல் 14 வயது வரை உள்ள குழந்தைகளுக்குக் கல்வி அளிக்கும் விஷயத்தோடு மட்டும் நிற்கக்கூடாது. ஆதாரக் கல்வியானது கருவில் குழவி உருவாகும் நாள் முதல் கடைசி மரண காலம் வரை பரந்திருக்கிறது. எனவே நம் வேலை கடுமையாகிவிட்டது."

நுணுகி நோக்கிடில், வாழ்க்கைக்கான கல்வி என்பதற்கு வாழ்க்கை வாயிலாகக் கல்வி என்பது பொருள்படும். கல்வி என்பது வாழ்க்கை முழுவதையும் தழுவி நிற்கிறது.

வாழ்க்கையில் நிகழும் எப்பேர்ப்பட்ட சிறு நுட்பமாயினும் கல்விக்குள் வாராமல் இருக்காது. எனவே கல்வி வாழ்க்கையோடு சமமாகப் பரந்து நிகழ்வதாகும். எடுத்துக் காட்டாக, துப்புரவு, சுகாதாரம், குடிமைப் பயிற்சி, வேலை யும் வழிபாடும், விளையாட்டும், கிளர்ச்சியூட்டும் ஆக்க வேலைகளும்—ஆகிய இவை அனைத்தும் பாடத் திட்டத் தில் காணப்படும். தனித்தனி பாடங்கள் அல்ல. நற் பண்புகளையெல்லாம் ஒருமித்துச் சீராக வளர்க்கவல்ல உறு வழிகளாகும். வாழ்க்கையில் பின்னிப் பிணைந்து கிடக்கும் வழி முறைகள் ஆகும்.

## வாழ்க்கை வாயிலாகக் கல்வி :

நீந்தக் கற்க வேண்டுமாயின் ஒருவன் நீரில் இறங்கித் தான் கற்க முடியும். மோட்டார் ஓட்ட வேண்டுமானால் மோட்டார் ஓட்டும் வேலையில் ஈடுபட்டுத் தான் கற்க முடி யும். நூல்களின் வாயிலாகவோ, சொற்பொழிவுகளின் வாயிலாகவோ கற்க முடியாது. "எதை நாம் செய் கிறோமோ அதைத் தான் நாம் கற்கிறோம்" என்று சொல்லுகிறது ஓர் ஆங்கில அனுபவக் கூற்று. (We learn what we do). எனவே, உடல் நலத்தைப் பற்றிச் சிறுவர்கள் கற்க வேண்டுமானாலும், குடிமைப் பயிற்சியைப் பற்றிக் கற்க வேண்டுமானாலும், வேறு எதைக் கற்க வேண்டுமானாலும் யதார்த்த வாழ்க்கை நிலை யில் உள்ளவை போன்ற வாய்ப்புகளில் ஈடுபட்டுக் கற்பதே சிறந்த வழியாகும். பள்ளிகளிலும் போதனை அந்த முறை யிலேயே நடப்பது தான் பொருத்தமுடையது. எனவே, தான் ஆதாரப் பள்ளியில் தொழில் உற்பத்தியில் ஈடு படுவதையும், வேறு யதார்த்தமான செயல்கள் செய்வதின் வாயிலாகப் பிள்ளைகள் கற்பதையும் வற்புறுத்துகிறார்கள். சுருங்கக் கூறின் வாழ்க்கை வாயிலாகக் கல்வி கற்பிக்கிறார் கள். எடுத்துக் காட்டாக, பொங்கல் விழாவைப் பற்றிப் பாடவாயிலாகக் கற்பிக்காமல் பொங்கல் விழாவைப் பள்ளி யில் கொண்டாடி அதன் வாயிலாகக் கற்பிக்கிறார்கள்.

## வாழ்க்கையில் வெவ்வேறு படிகளுக்கேற்றக் கல்வி நிலைகள் :

முன்பு கூறிய இலக்கணப்படி, ஆதாரக் கல்வி முழு வெற்றி அளிக்க அதைக் குழந்தைகளின் பெற்றோர் களுக்கு முதன் முதலில் அளிக்க வேண்டும். ஆதாரக் கல்விக்கு வற்றாத வளமுள்ள ஊற்று, சமூகத்தில் தான் உண்டாக வேண்டும். எனவே, ஆதாரக் கல்வியின் முதல் நிலை, வயது வந்தோர் கல்வியாகும். ஆதாரக் கல்வியை வயது வந்தோர் கல்வியிலிருந்து தான் தொடங்க வேண்டு மென்று காந்திஜி வற்புறுத்தி உள்ளார்.

## புதுக் கல்வியின் ஐந்து நிலைகள் :

1. வயது வந்தோர் கல்வி (சமூகத்திலுள்ள படிப் பறிவு இல்லாதவர்களுக்கு).

2. பூர்வ ஆதாரக் கல்வி (பாலர் கல்வி) ($2\frac{1}{2}$—6 வயதுக்கு உட்பட்டவர்களுக்கு).

3. ஆதாரக் கல்வி (6—14 வயதுட்பட்டவற்கு).

4. உயர்தரக் கல்வி (14—17 வயது உட்பட்டவர்களுக்கு).

5. கல்லூரிக் கல்வி.

குறிப்பு : சாதாரணமாக நாம் ஆதாரக் கல்வி என்று சொல்லும்போது மூன்றும் நிலையை மட்டுமே குறிக் கிறோம். ஆனால் மேற்கூறிய ஐந்து நிலைகளுக்கும் சேர்த்து ஆதாரக் கல்வி என்று கூறுவது வழக்கமாய் இருந்து வருகிறது. இதை நாம் நன்கறிந்து கொள்ளு வது நல்லது. இனி ஒவ்வொரு நிலையையும் தனித்தனி யாகக் கவனிப்போம்.

## வயது வந்தோர் கல்வி :

படிப்பேயில்லாதவர்களையும், பள்ளியில் ஒன்றிரண்டு வகுப்புகள் படித்துவிட்டுப் படிப்பிற்கே முழுக்குப் போட்ட

வர்களேயும் கைதூக்க இந்த நிலே ஏற்படுத்தப்பட்டுள்ளது. சமூகத்தில் உள்ள ஒவ்வொருவரும் மகிழ்ச்சியுள்ள, ஆரோக்கியமான, தூய்மையான, தன்னம்பிக்கையுள்ள வாழ்வு வாழப் பயிலவேண்டும். அதாவது அவர் முழு வாழ்வு வாழவேண்டும். அதன் வாயிலாகச் சமூகத்தில் மகிழ்ச்சியும், சுறுசுறுப்பும் ஏற்பட்டு அது மேம்பாடுற வேண்டும். இதுதான் வயது வந்தோர் கல்வியின் அடிப்படை நோக்கம் ஆகும்.

காந்திஜி கூறுகிருர்: "வாழ்க்கை வாழும் கலேயைக் கற்பிப்பதே வயது வந்தோர் கல்வியாகும். எவன் ஒருவன் வாழ்க்கை வாழும் கலேயில் திறமை பெற்றுவிட்டானே அவன் முழு வாழ்க்கை வாழக் கற்றவனுகிருன்."

கிராமத்திலுள்ளவர்களுக்கு இலக்கியமும், இலக்கணமும், பூகோளமும், வரலாறும், விஞ்ஞானமும் நூல்கள் வாயிலாகக் கற்பிக்க முயலுவது, வயது வந்தோருக்குக் கல்வி கற்பிக்கும் முறை ஆகாது. அம் முறை எப்பயனும் அளிக்காது. தனிப்பட்ட முறையிலும், கூடி வாழ்வதிலும் கிராமத்தில் முழு வாழ்வு வாழவும், தன் கடமைகளேயும் உரிமைகளேயும் நன்கறிந்து தொண்டாற்றவும், ஒளி பெற்ற நற்குடியாய் வாழவும் அக் கல்வி உதவவேண்டும். தன் தொழிலில் மேம்பாடுற அது உதவவேண்டும். பெற்ரேரின் பொறுப்புகளே உணரவும் குழந்தைகளேச் செவ்வையாய் வளர்க்கவும் உதவவேண்டும். ஓய்வு நேரத்தைப் பயனுறும் முறையில் கழிக்கவும் உதவவேண்டும். நோயற்று வாழும் முறைகளேக் கற்றுக் கொடுக்கவேண்டும். நல்லதை ரசிக்கக் கற்றுக்கொடுக்கவேண்டும். அவரவர் மதக் கோட்பாடுகளின் அடிப்படைகளே அறியவேண்டும். நாட்டு நடப்புச் சேதிகளே நன்கறிந்துகொள்ளவேண்டும். நாடு முன்னேற நல்லமைச்சர்கள் செய்துவரும் நல்லுதவிகளேயும் அவற்றைப் பெறும் வழிகளேயும் அறியவேண்டும்.

**பூர்வ ஆதாரக் கல்வி :**

இதற்குப் பாலர் கல்வி என்றும் பெயர். குழந்தை தாயினே விட்டுப் பிரிந்து, பள்ளிக்கு நடந்து வரக்கூடிய

$2\frac{1}{2}$-வயது முதல் 6-வயது வரை உள்ள குழந்தைகட்கு இக் கல்வி அளிக்கப்படும். கல்விப் பயிற்சி வீட்டிலிருந்து பள்ளிக்கு விஸ்தரிக்கப்படுகிறது என இந்த முயற்சியைக் கூறலாம்.

சுருங்கக் கூறில் பூர்வ ஆதாரக் கல்வி பள்ளியிலும் இல்லத்திலும், சமூகத்திலும் கூட்டு முயற்சியால் நடப்ப தொன்ருகும்.

இங்கு கவனிக்கப்படுவன - உடற்பயிற்சி, உடல் நலம், உடல் துப்புரவு, சுற்றுப்புறத் துப்புரவு, சுய உதவி, சமூகப் பயிற்சி, வேலையிலும், விளையாட்டிலும் ஆக்கச் செயல்கள், பேச்சுப்பயிற்சி, எண் அறிவு, இயற்கையை ஆராய்தல், கலை, இசை ஆகியவன ஆகும். நற்பழக்கங் களை ஏற்படுத்துவதே இந்த நிலையின் அடிப்படை நோக் கம் பூர்வ ஆதாரப் பள்ளியின் வாயிலாகச் சிசுக்களுக்குக் கிட்டுபவை ;—

(i) ஆரோக்கியமுள்ள திறந்தவெளி வாழ்க்கை (ii) அன்பு ; ஆதரவு ; அமைதி நிறைந்த அரிய சூழ்நிலை (iii) விளையாட்டு வேலை, ஓய்வு ஆகிய மூன்றும் சீராய் அமைந்த திட்டம் (iv) விடுதலையுடன் விருப்பப்படிச் சுற்றும் நிலையி லிருந்து கட்டுப்பாடுடன் கூடிய ஒரு சூழ்நிலைக்கு இயற் கையான மாறுதல்.

ஒரு குவளைக் கஞ்சி அல்லது பால் நடுப்பகலில் குழந்தைகளுக்குக் கொடுப்பார்கள். குழந்தைகளே அதைப் பங்கிட்டுக் கொடுக்கப் பயிற்றுவார்கள்.

## ஆதாரக் கல்வி (6—14)

இந்த நிலை முக்கியமானது. இதுவே நடுமையமாக உள்ளதென்பதையும் கவனிக்கலாம். இந்த நிலைக்குரிய கல்விபற்றிய தத்துவங்களைப்பற்றி விவரமாக விளக்குவதே இந்த நூலின் நோக்கம் ஆகும்.

**நோக்கம் :—**

1949 - ல் பெரிய நாயக்கன் பாளையத்தில் நடந்த அகில இந்திய ஆதாரக்கல்வி மகாநாடு ஆதாரக்கல்வியின் நோக்கங்களைப் பின்வருமாறு நிர்ணயித்துள்ளது.

1. இந்தியாவில் உள்ள எல்லாப் பையன்களும், பெண்களும் ஒரு புதிய சமுதாயத்தின் குடிகளாக வளர வேண்டும். அந்தச் சமுதாயம் புதுக்கல்வி எதிர்நோக்கும் கூட்டுறவு அடிப்படையில் அமைந்திருக்கும். அங்கு போட்டியும் சுரண்டலுமிரா. அப்பேர்ப்பட்ட சமுதாயத்தி லுள்ள கடமைகளையும், பொறுப்புகளையும் அவர்கள் நன் கறிந்து செயலாற்றவேண்டும்.

2. ஒவ்வொரு பிள்ளையின் ஆற்றல்கள் அனைத்தும் ஒழுங்கான முறையில் ஒன்றுக்கொன்று முரண்பாடின்றி ஒருமித்து வளர்ச்சி பெறுமாறு ஆசிரியர்கள் போதிய வாய்ப்புகளை அமைக்கவேண்டும். அவற்றின் வாயிலாகப் பிள்ளைகள் உடல்நலம் சிறந்தவராயும் தன்னம்பிக்கை நிறைந்தவராயும், பண்பாடு அறிந்தவராயும் வளரவேண் டும். ஒவ்வொருவரும் அப்புதுச் சமுதாய வாழ்க்கையின் சமூக அறவழி கோட்பாடுகளைத் தெளிவாய் உணர்த்திருத் தல் வேண்டும்.

**நடை முறைகள் :**

பயனுள்ள உற்பத்தி தரும் ஓர் ஆதாரத் தொழில் வாயிலாக உடல், உள்ள, ஆன்மப் பண்புகள் அத்தனை யும் சீரான வளர்ச்சி பெற வகை செய்யப்பட்டுள்ளது.

அவ்வாறு தொழில் செய்யுங்கால் எழும் பிரச்சினை களை யொட்டி அறிவு விஷயங்கள் எல்லாம் இணைத்துக் கற்பிக்கப்படும். ஓரளவு தன்னிறைவுத் தத்துவம் வற் புறுத்தப்படும். தாய்மொழி வாயிலாகவே பயிற்சிதரப் படும். பாடப்புத்தகங்களைக் கற்பிக்காமல் செயல்கள் வாயி லாகக் கற்பிக்கப்படும்.

**கற்பிக்கப் படுவன :**

1. ஆரோக்கியமான வாழ்க்கைக்கான பயிற்சி
2. தன்னம்பிக்கைப் பயிற்சி
3. பயனுள்ள உற்பத்தித் தொழில் பயிற்சி
4. குடிமைப் பயிற்சி
5. கலைப் பயிற்சி

—ஆகிய ஐம்பெரும் வேலைத் திட்டங்களின் வாயிலாக

1. துப்புரவும், உடல் நலமும்
2. ஆதாரத்தொழில்—பிற உபதொழில்கள்
3. பொது விஞ்ஞானம்
4. சமூகப் பயிற்சியும், சமூகப் பாடங்களும்
5. தாய்மொழி
6. கணிதம்
7. ஆக்கக் கலைகளும், கிளர்ச்சி யூட்டும் கலைகளும்
8. இந்தி (VI, VII, VIII வகுப்புகளுக்கு மட்டும்)
9. ஆங்கிலம்(VI, VII, VIII வகுப்புகளுக்கு மட்டும்)

ஆகியவற்றைப் பிள்ளைகள் கற்கிருர்கள். ஒவ்வொரு செய்லிலிருந்தும் அறிவு மட்டுமன்றி, பழக்கவழக்கங்கள், திறமைகள், மனப்பான்மைகள் ஆகியவற்றையும் கற்பிக்கத் திட்டமிடப்பட்ருக்கிறது.

மத்திய அரசாங்கத்தைச் சேர்ந்த எஃப். ஜி. ஸையிடீன் அவர்களால் தயாரிக்கப்பட்டதும், மத்திய அரசினரால் அங்கீகரிக்கப்பட்டதும், சென்னை மாநிலப் பொதுக் கல்வி இயக்குநர் அவர்கள் உத்தரவு எண் R. C. 1174. M. 1/55, தேதி 29—7—55 வாயிலாக அனைவர்க்கும் அறிவிக்கப்பட்டதுமான 'ஆதாரக் கல்வியின் அடிப்படைக் கருத்து' என்ற சுற்றறிக்கையின் பிழிவைக் கீழே தந்துள்ளோம். (Concept of Basic Education):

1. ஆதாரக் கல்வி வாழ்க்கைக்கான கல்வி; வாழ்க்கை வாயிலாகக் கற்பிக்கப்படும் கல்வியாகும்; வாழ்க்கை முழுவதற்குமான கல்வியுமாகும்.
2. தந்நிறைவுத் தத்துவம், அதன் உரைகல்லாகும்.
3. ஆதாரத்தொழில் மூலம் குழந்தையின் முழு ஆளுமையும் வளர்ப்பதே நோக்கமாகும்.
4. இத்திட்டத்தில் அறிவு வளர்ச்சியுடன் கைத்திறன் வளர்ச்சிக்கும் சிறந்த ஏற்பாடு உள்ளது.
5. இத்திட்டம் அறிவின் ஒருமைப்பாட்டை அறிவுறுத்துகிறது. (Integration of knowledge)
6. அறிவு பெறுவதற்குப் புத்தகப்படிப்பு மட்டுமே ஒரே வழி என்ற வழி வழி வந்துள்ள கருத்தை மாற்றுகிறது.
7. பள்ளியையும், சமூகத்தையும் ஒருமித்துக் கூட்டுறவாகத் தொண்டு புரிய அமைத்தல் (Integration of School and Community)
8. நகர்ப் புறங்களுக்கும் ஆதாரக்கல்வி ஏற்றது.

அண்மையில் இது ஒரு சிறு நூலாக அரசினரால் வெளியிடப்பட்டுள்ளது. அந்த மூல நூலேயே படித்தல் அவசியமாகும்.

**உயர் ஆதாரக் கல்வி (14—17)**

குமரப் பருவத்திற்குரித்தான கல்வி நிலே இது. 6-14 வயதுக்குரிய ஆதாரக்கல்வி நிலேயை **தன்னிறைவிற்கான** கல்வி என்று கூறுவோமானல், உயர் ஆதாரக் கல்வியை **தன்னிறைவு வாயிலாகக் கல்வி,** எனக் கூறுமாறு திட்டமிட வேண்டும்.

ஆதாரக் கல்வி நிலேயில் மாணவர்கள் பள்ளியிலேயே தங்கவேண்டும் என்ற கட்டாயம் இல்லே. ஏனெனில் அந்த நிலேயில் ஏராளமான குழந்தைகள் இருப்பதால் தற்போதைய பொருளாதார நிலேயில் அது இயலாத

காரியம். ஆனால், உயர் நிலைக்கல்வி பயிலும் மாணவர் கள் ஒரு சமூகமாகப் பள்ளியில் தங்குவது அவசியம். அச் சமூகத்தின் செலவினை முழுவதிலும் ஈடுகட்ட உதவும் பல்வேறு தொழில்களில் ஒன்றிரண்டை மாணவர் கள் தேர்ந்து எடுத்துக்கொண்டு கல்வி பயில வேண்டும். அந்தத்தொழிலைச் செய்யுங்கால் இணைந்துவரும் அறி வினை, கோவையாயும், ஆழமாயும், நுட்பமாயும் கற்க வேண்டும். இக் கல்வி முடிந்து வெளியேறியவுடன் தேவைப்பட்டால் வாழ்க்கையில் வெற்றிகரமாக ஈடுபடு வதற்குத் தகுதியுள்ளவர்களாக வேண்டும். வாழ்க்கையில் முதல்தேவைகளான உணவு, உடை, உறைவிடம் ஆகிய மூன்றினுள் உள்ளடங்கும் உற்பத்தித் தொழில்களில் ஒன்றிரண்டின் வாயிலாகப் போதிய வருவாய் ஈட்டவல்ல பயிற்சி பெற்றிருக்க வேண்டும்.

இக் கல்வி பயிலுங்கால் ஆகும் செலவினை ஒவ்வொரு வரும் கற்கும் தொழில் வாயிலாகத் தானாகவே ஈடுபட வேண்டும். பிறரிடமிருந்து யாதொரு பண உதவி எதிர் பாராத தற்சார்புள்ளதா யிருக்கவேண்டும். போதனை தாய்மொழியில் இருக்கும். விசேஷ மதி நுட்பம் உள்ள வர்கள் கல்லூரியில் சிறப்புப் பயிற்சிக் கேகலாம்.

கல்லுப்பட்டி, காந்தி கிராமம், ஆகிய இரண்டு ஊர் களிலும் மேற்சொன்ன முறையில் உயர் ஆதாரக் கல்விப் பள்ளிகள் நடந்து வருகின்றன. அவற்றில் ஆண்கள் மட்டும் பயிலுகின்றனர்.

வேதாரணியம் என்னும் ஊரில் பெண்களுக்குமட்டும் ஓர் உயர் ஆதாரப்பள்ளி உள்ளது.

**பல்கலைக் கழக நிலை :**

இது இன்றும் சோதனை நிலையிலுள்ளது. இந்தி யாவில் அங்குமிங்கும் ஒரு சில கிராமக் கல்லூரிகள் மட்டுமே, இதனடிப் படையில் திறக்கப்பட்டுள்ளன.

அறிவு அறிவிற்காகவே என்பதுதான், (Knowledge for Knowledge Sake) சாதாரணமாகக் கல்லூரிகளின் அடிப்படை நோக்கம். வழிவழி வரும் அந்த மரபை நிறைவேற்றுவதோடு, வாழ்க்கைக்கான, வாழ்க்கை வாயிலாகக் கல்வி என்ற ஆதாரக்கல்வியின் கொள்கை இதிலும் ஊடுருவி நிற்க வேண்டும் என்பது ஹிந்துஸ்தானி தாலீமீ சங்கத்தாரின் விருப்பம். அத்தகைய மதிநுட்பம் மக்கள் சமுதாயத்திற்கு பெரிய அளவில் பயன் பட வேண்டும் என்பதே அவர்களது அவா. பல்கலைக் கழக நிலைக்கல்வி மக்களை விட்டு விலகி நிற்பது ஆதார கல்வித் திட்டத்திற்கு ஒவ்வாது.

மதுரை மாவட்டத்திலுள்ள காந்தி கிராமத்திலும், கோயமுத்தூர் மாவட்டத்தில் பெரியநாயக்கன் பாளையத்திலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண வித்தியாலயத்திலும் இத்தகைய கிராமக் கல்லூரிகள் திறக்கப்பட்டுள்ளன.

# 3

## வேலை வாயிலாகக் கல்வி

[வேலை வாயிலாகக் கல்வி என்ற தத்துவம்; அதன் மனநூல் அடிப்படை; அது வெற்றி பெறுவதற்கான கூறுகள்; இந்தியாவிலும் பிற நாடுகளிலும் 'வேலை வாயிலாகக் கல்வி' பற்றிய சோதனைகள்]

வேலை வாயிலாகக்கல்வி என்பதற்கு தொழில் வாயிலாகக் கல்வி, உழைப்பு வாயிலாகக் கல்வி என்று பொருள். புத்தகம் வாயிலாகமட்டுமே கல்வி கற்பிக்க முடியுமென்ற தப்பெண்ணம் தற்காலத்தில் நிலைத்து வேரூன்றி விட்டது. கல்வியின் வரலாற்றினைக் கூர்ந்து நோக்கிடில், பழங்காலம் முதல் உழைப்பின் வாயிலாகத் தான் மனிதன் அறிவைப் பெற்றுவந்துள்ளான் எனத் தெரியவருகிறது. உழைப்பின் வாயிலாகத்தான் பழக்க வழக்கங்களையும், திறமைகளையும், மனப்பான்மைகளையும், கூடிவாழும் பண்புகளையும் கற்றுன் எனத் தெரிய வருகிறது.

> "ஆள்வினையும் ஆழ்ந்த அறிவும் என விரண்டின்
> நீள்வினையால் நீளும் குடி"

என வள்ளுவர் கூறியிருப்பதை நினைவுறுத்திக்கொள்வது நன்று. தொழிலால் அறிவு வளரவேண்டும். அவ்வறிவினுல் தொழில் முன்னிலும் மேம்பாடுறவேண்டும். இரண்டும் ஒன்றையொன்று வளப்படுத்திக்கொண்டால் குடி உயரும்.

பயிர்த் தொழிலைச் செய்ய வேண்டு மென்ருல் ஒருவன் என்னென்ன செய்யவேண்டும் எனச்சற்று நினைவுறுத்திக்கொள்வோம். முதலில் நிலத்தைப் பண படுத்திக் கொள்ள வேண்டும். அதாவது உழுது தயார் செய்துகொள்ள வேண்டும். அதனுல் அவனுக்கு உடலுழைப்பு அவசியமாகிறது. காற்றிலும், வெட்டவெளியிலும், வெயிலிலும் கரடுமுரடான இடங்களிலும் வேலை

செய்ய வேண்டியிருக்கிறது. அதனுல் உடலுறுதி ஏற்படு கிறது. பொறுக்கு விதைகளைத் தேர்ந்தெடுத்துப் பட்டம் பார்த்து விதை விதைத்து ஒழுங்காய் நீர்பாய்ச்ச வேண்டி யிருக்கிறது. இவ்வாறு, சுமார் ஆறு திங்கள் காலம், களை எடுத்தல் முதல் அறுவடைவரைப் பல்வேறு வகைகளில் பாடுபட்டு உழைக்க வேண்டியிருக்கிறது. பயிரில் நோய் விழுந்தால் கவனித்துக் காலத்தில் ஆவன செய்ய வேண்டியிருக்கிறது. சிலகாலம் இயற்கையுடன் போராட வேண்டியிருக்கிறது. இவ்வாறு விடாத உடலுழைப்புடன் பொறுமை, விடாமுயற்சி, விழிப்புடைமை, சுறுசுறுப்பு, மதிநுட்பம், காலம், பொருள். இடம் அறிந்து கடமை ஆற்றல், முதலிய நற்பண்புகளைக் கைப்பிடிக்க வேண்டி யிருக்கிறது. இறுதியில் மகிழ்ச்சியுறுகிருன். கழனியில் தனித்தும் கூடியும் பல்வேறு சந்தர்ப்பங்களில் வேலை செய்யவேண்டியிருக்கிறது. அதன் வாயிலாகப் பல சமூகப் பண்புகளை அறிகிருன். இவற்றைத் தவிர, ஒருவன் மதி நுட்பம் வாய்த்தவனுயும், விளைச்சலைப் பெருக்க விழைபவ னுயும் இருந்தால் ஒவ்வொரு நுட்பத்தையும் விஞ்ஞானக் கண்கொண்டு நோக்குவான். நவீன ஆராய்ச்சிகளைப் பற்றி படிப்பான்; கேட்பான்; நேரில் போய்ப்பார்த்து அனுபவக் குறிப்புக்கள் பெற்று வருவான். தன்கழனியில் அவற்றைச் சோதித்து முன்னேறுவான். இவ்வாறு அவனது அறிவு வளரும்.

கூடவே ஆன்மப்பண்புகளும் வளரும். வெறும் புத்தக வாயிலாகப் பயிரிடும் தொழிலைப் பற்றிக் கற்பவனுக்கு அனுபவஞானம் இராது. தானுக ஒன்றும் செய்யமுடியாது. மேற்பார்வையிட்டு விமரிசனம் கூறத் திறமையுற்றிருப் பானே யன்றி ஆக்க வேலைகளில் ஊக்கமாக இறங்க மாட்டான்.

எனவே தான் கற்பிக்கத் தொடங்கும் காலத்தி லிருந்தே ஒரு தொழில்வாயிலாகப் பொருள்களை உற்பத்தி செய்யக் கற்பித்தால் சிறுவனது உடல், உள்ளம், ஆன்மா ஆகிய மூவகைப்பண்புகளும் சீராய் வளரும் என்கிருர்கள்.

இதைத்தான் 1904லிருந்தே காந்தி கூறிவந்ததுடன், தாம் எங்கெல்லாம் சோதனைகள் நடாத்தி வந்தாரோ, அங் கெல்லாம் கைப்பிடித்து வெற்றி கண்டு வந்துள்ளார். இதை முன்னரே கூறியுள்ளோம்.

**ஓர் எச்சரிக்கை :**

தொழில்வாயிலாகக்கல்வி என்று கூறும் போது அதே போன்று ஒலிக்கும் சில சொற்றொடர்களின் பொருள்களை அறிந்துகொள்வது அறிவுடைத்து. அவையாவன:—

தொழிலும் கல்வியும்

தொழிற்கல்வி

தொழில் வாயிலாகக் கல்வி.

ஒவ்வொன்றும் வெவ்வேறு அம்சத்திற்கு அழுத்தம் அளிக்கிறது. மூன்றாவதுதான் ஆதாரக்கல்வி ஆகும். அதற் கும் முன்னிரண்டிற்கு முள்ள வேறுபாடுகளை இப்போது விரிவாகக்காண்போம்.

**தொழிலும் கல்வியும் :**

சாதாரண ஆரம்ப, உயர்தர ஆரம்பப்பள்ளிகளில் ஏதாவதொரு கைவேலையினையோ ஒருதொழிலினையோ கற்பிக்கத்திட்டம் ஒன்றுஇருந்து வருகிறது. அதைப்போல் உயர்நிலைப்பள்ளிகளில் 'கைவேலை' (Handicraft) என்று ஏதாவதொரு தொழில் கற்பிக்கப்படுகிறது. சாதாரண ஆசிரியப்பயிற்சி பள்ளிகளிலும் தொழிற் பயிற்சி (Manual Training) என்ற ஒரு பாடம் கற்பிக்கப்படுகிறது. இங் கெல்லாம் தொழில் அதிகப்படியானதொரு பாடமாகக் கற் பிக்கப்படுகிறது. தொழில் கற்பிப்பதன்வாயிலாகப் புலப் பயிற்சி, உற்றுநோக்கும் திறன் முதலிய வற்றிற்கு வாய்ப்பு அமைப்பதே தொழிலைச் சேர்த்துக் கற்பிப்பதன் நோக்க மாகும். இங்கு தொழிலின் பொருளாதார நோக்குக்கு அவ்வளவு அழுத்தம் தருவதில்லை.

## தொழில் கல்வி:—

குறிப்பிட்ட ஒரே தொழிலில் நிபுணத்துவம் எய்துவதற்கும், அதன் வாயிலாக வாழ்க்கை நடத்துவதற்கும் இத் திட்டம் அடிகோலுகிறது. அதாவது ஒரு தொழிலைப் பொருத்தம், திருத்தம், வேகம், கலை ஆகிய நற்பண்புகளுடன் வெற்றிகரமாய்ச் செய்ய இங்குக்கற்பிக்கப்படுகிறது. சித்திரம், கைத்தொழில் பள்ளிகள், சிற்பக்கலைப் பள்ளிகள், தொழிற் பள்ளிகள் (Polytechnics) தையல் கலைப் பள்ளிகள், சமையற் கலைப் பள்ளிகள் முதலியவை இந்த திட்டத்திற்கு எடுத்துக் காட்டுகளாகும், தொழில்களைச் சீரிய முறையில் கற்பித்து உற்பத்தியைப் பெருக்குவதே தொழிற் பள்ளியின் தலையாய நோக்கம். சுருங்கக் கூறின் திறமை பெற்ற தொழிலாளிகளை உண்டாக்குவது இத் திட்டத்தின் நோக்கம்.

## தொழில் மூலம் கல்வி

இதுதான் ஆதாரக் கல்வி. தொழில் வாயிலாகவே அனைத்தையும் கற்பிக்க இங்குத் திட்டம் தீட்டப்பட்டுள்ளது. கல்வி நோக்கம் பொருளாதார நோக்கம் ஆகிய இரண்டும் சம அழுத்தம் பெறுகின்றன. ஒளி பெற்ற நற்குடியாக வாழவும், பிறருக்குப் பளுவாகவோ அல்லது ஒட்டுண்ணியாகவோ (Parasite) வாழாது உழைத்து வாழவும் கற்பிக்கிறது இது.

பயனுள்ள உற்பத்தி தரும் ஓர் ஆதாரத் தொழிலைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும். அதன் பல்வேறு பகுதிகளைப் பிள்ளைகளுக்கு விஞ்ஞான ரீதியில் கற்பிக்க வேண்டும். அவ்வாறு கற்பிக்கும்போது பல்வேறு சிக்கல்கள் எழுமல்லவா? அவற்றைத் தீர்க்கப் பிள்ளைகளுடன் விவாதம் நடத்தவேண்டும். அவ்விவாதத்தின் வாயிலாகத் தொழிலோடு இணைந்துவரும் அறிவு, திறமைகள், பழக்க வழக்கங்கள், மனப்பான்மைகள் ஆகியவற்றைக் கற்பிக்க வேண்டும்.

சுருங்கக்கூறின் தொழிலை ஊடகமாகக்கொண்டு (Medium) எல்லாவற்றையும் கற்பிக்கிறோம். இங்குத் தொழில், மைய இடத்தைப் பெறுகிறது.

உழைப்பின் வாயிலாகக் கல்வி என்பது, செய்து செய்து கற்றல் முறையின் ஒரு முதிர்ந்த நிலையாகும். இரண்டுக்குமுள்ள வேறுபாடு இதுதான். செய்து கற்றலை, ஏதாவது ஒரு செயலை எடுத்துக்கொண்டு அதன் வாயிலாகக் கற்பிக்கலாம். ஆனால் தொழில் வாயிலாகக் கல்வியில் பயனுள்ள உற்பத்திதரும் ஒரு தொழிலைத் தேர்ந்து எடுத்து அதன் வாயிலாகக் கல்வி கற்பிக்கவேண்டும்.

### வேலை வாயிலாகக் கல்வி என்ற கொள்கையின் மன நூல் அடிப்படை

மன நூல் நோக்குக் கொண்டு வேலை வாயிலாகக் கல்வி கற்பிக்கும் முறையினை அலசிப் பார்த்தாலும், அது மிகச் சிறந்த முறை என்று நிரூபிக்கலாம்.

குழந்தைகளின் இயல்பு, துரு துரு என்று ஏதாவது வேலையில் ஈடுபட்டுக் கொண்டிருப்பது ஆகும். கல்சிலை போல வகுப்பறையில் அமைதியாய் ஐந்து மணி நேரம் உட்கார்ந்து ஆசிரியர்கள் சொல்லும் அனைத்தையும் கேட்க அவர்களுக்கு விருப்பம் இருப்பது இல்லை. தவிர, தாமே ஒவ்வொன்றையும் எடுத்துப் பார்த்து, ஆட்டி, குலுக்கி, பிரித்து, உடைத்து ஆராய அவாவுறுவது குழந்தைப்பருவ இயல்பு. ஆகவே, வேலை வாயிலாகக் கல்வி என்ற கொள்கை, மேற் குறித்துள்ள நேர்முகப் பட்டறிவுக்கு வாய்ப்புக் கொடுக்கிறது. புத்தகங்கள் வாயிலாகக் கற்கும் அறிவுக்குத் தெளிவு கொடுக்கிறது. கைகளையும் மூளையும் இணைத்துப் பயிற்றுவதற்கு இந்த முறை சிறந்த முறை. இம்முறையின் வாயிலாக, வெறும் அச்சிட்ட ஏட்டைப் படிக்கும் அறிவைப் பெறுவதுடன், பயனுள்ள ஒரு பொருளை உற்பத்தி செய்யக் கற்பிக்கிறோம். இது ஒரு முக்கியமான நற்பயனாகும். சுருங்கக் கூறின் உடல், மனம்,

ஆன்மப் பண்புகள் ஆகிய மூன்றனையும் பயிற்ற இது ஒரு நல்ல முறையாகும்.

மனநூல்படி குழந்தைகளின் முக்கிய தேவைகள் விடுதலை, அன்பு, ஆதரவு, ஈடுபாடு, புதிதாக ஒன்றைத் தாமே படைத்தல் ஆகியவை ஆகும். இவ்வனைத்தும் தொழில் வாயிலாகக் கல்வி கற்பிக்கும் முறையில் எளிதாக, விரைவாக, இயல்பாகக் கிட்டுகின்றன.

## உழைப்பில்லாமல் கல்வி கற்றல் :

உழைப்பில்லாமல் கல்வி கற்றால் ஏற்படும் தீமைகளைப்பற்றி காந்திஜி ஓரிடத்தில் குறிப்பிடுங்கால், எழுதுகிறார். "நம்முடைய கைகளையும், கால்களையும் நன்கு பயன்படுத்தாவிட்டால் நமது மூளை பாழடைந்துவிடும். ஒரு வேளை இயங்கினாலும், அது சாத்தானின் இல்லமாகிவிடக் கூடும்''. டால்ஸ்டாய் என்ற ரஷியப் பேரறிஞரும், அதே படிப்பினையைத்தான் பல கதைகள் வாயிலாக அறிவுறுத்தியிருக்கிறார் எனக் காலஞ்சென்ற மதுசூதனன்தாஸ் என்ற வழக்கறிஞரும் கூறியுள்ளார்.

## ஒருமித்த கல்வி (Integrated all-sided Education)

சிறுவர்களுக்கு முழுக் கல்வி (உண்மைக் கல்வி) அளிக்கப் பயனுள்ள உற்பத்தி தரும், தொழில் வாயிலாகக் கல்வி கற்பிக்கும் முறையே மிகச் சிறந்த கல்வி முறை என எல்லா நவீன கல்வி மனநூல் அறிஞர்களும் ஏகோபித்துக் கூறியுள்ளார்கள்.

## இக்கொள்கை வெற்றி பெறுவதற்கான நிபந்தனைகள்

மேற்கூறியவண்ணம் தொழில் வாயிலாக ஒருமித்த முழுக் கல்வி அளிக்க வேண்டுமென்றால் அது சில முக்கியமான நிபந்தனைகளை நிறைவேற்றியாக வேண்டும்.

1. தேர்ந்தெடுக்கப்பட்ட ஆதாரத் தொழில் கல்வி கற்பிக்க வசதிகள் நிறைந்ததாயிருக்க வேண்டும்.

2. அது மனிதர்களின் முக்கியமான தொழில்களோடும் கவர்ச்சிகளோடும் இயற்கையாய் இயைபுபடுத்தக் கூடிய வளம் நிறைந்திருக்க வேண்டும்.

3. எட்டாண்டுப் பள்ளிக் கலைத்திட்டம் முழுவதிலும் பரந்துவரும் தன்மையுடன் இருக்கவேண்டும்.

4. திறமைவாய்ந்த தொழிலாளிகளை உண்டாக்குவது இத்திட்டத்தின் நோக்கமன்று. மாறாக, தொழில் வாயிலாக இயைபுபடுத்திக் கற்பிப்பதே முதன்மையான நோக்கமாகும்.

5. பொருள் உற்பத்தி வேலையானது பள்ளிக் கலைத் திட்டத்தின் ஒரு பகுதியாக அமைவதுடன் கற்பிக்கும் முறைகளுக்குக் கருத்தூட்டவல்லதாயிருத்தல் வேண்டும்.

6. கூட்டுறவாகச் செயலாற்றுதல், திட்டமிடுதல், 'செய்வன திருந்தச்செய்' மனப்பான்மை, பிறர் தூண்டுதலின்றித் தானே செயலில் ஈடுபடுதல், கல்விகற்றலில் தனிப்பட்ட மாணவன் பொறுப்பு உணர்தல் ஆகிய அம்சங்கள் அழுத்தம் பெறவேண்டும்.

சுருங்கக் கூறிடில், ஒழுங்காகவும் விஞ்ஞான முறையிலும் ஆதாரத்தொழில் நடக்கவேண்டும். அதன் விளைவாக உற்பத்தியான பொருள்கள் செவ்வையாயிருக்க வேண்டும். முழுக் கல்வி நிறைவேற வேண்டும்.

**ஆதாரத் தொழிலாகத் தேர்ந்தெடுக்கப்படத் தேவையான தகுதிகள்:**

ஆதாரத் தொழில் ஒன்றனைத் தேர்ந்தெடுக்க, கீழ்க் கண்டதகுதிகள் தேவை,—

1. கல்விப்பயன் 2. பொருளாதாரப்பயன்

**கல்விப்பயன் :**

அத்தொழில் வாயிலாகப் பாடங்கள் அனைத்தையும் கற்பிக்க வசதி நிறைந்ததாயிருத்தல் வேண்டும். சிறப்பாக

மொழி, பொது விஞ்ஞானம், கணக்கு, சமூகப்பாடங்கள் ஆகியவற்றைக் கற்பிக்க உதவ வேண்டும். சரியான மனப் பான்மைகளை ஏற்படுத்தி வளர்க்க அது உதவ வேண்டும்.

**பொருளாதாரப்பயன் :**

அத்தொழில் வாயிலாக முழுப்பயிற்சி பெற்ற பின்னர், ஒரு வேளை அவசியம் நேர்ந்தால் அத்தொழிலையே பிழைப்பிற்கான தொழிலாகக் கொண்டு, தங்களது உணவுத்தேவைகளையும் பிற அவசியமான தேவைகளை யும் நிறைவேற்றிக் கொள்ளக்கூடிய நிலையில் அத்தொழில் பொருளாதார மதிப்புடையதாய் இருக்கவேண்டும்.

மேற்கூறிய இருபெரு நிபந்தனைகளை நிறைவேற்றக் கூடிய தொழில்களாவன:—

(1) தோட்ட வேலையும் பயிர்த்தொழிலும் (இந்தியா முழுவதற்கும்).

(2) நூற்றலும் நெசவும் ( ,, ,, )

(3) தச்சு வேலையும் கொல்ல வேலையும் (காடுகள் நிறைந்த இடங்களுக்கு மட்டும்)

எது ஆதாரத்தொழிலாயினும் ஒவ்வோர் ஆதாரப் பள்ளியிலும் முதல் ஐந்து வகுப்புகளில் தோட்டவேலையும், நூற்பும் கட்டாயமாகக் கற்பிக்க வேண்டும்.

**ஆதாரத்தொழிலுக்கான நேரம்:**

தொழிலுக்கு ஒதுக்கப்பட்ட நேரத்தில் மூன்றில் இரண்டு பங்கு, ஆதாரத் தொழிலுக்கு ஒதுக்கவேண்டும். (நாளொன்றுக்கு சுமார் 2 மணி நேரத்திற்கு குறையக் கூடாது. குறைந்தால் உற்பத்தி குறையும். அதன் விளைவாய் தன்னிறைவு பாதிக்கப்படும்). பாக்கியுள்ள நேரத்தை உபதொழில்களுக்குப் பயன்படுத்தவேண்டும்.

**வேலை வாயிலாகக் கல்வி பற்றிய சில சோதனைகள்:**

முதலில் இந்தியச் சோதனைகளிற் சிலவற்றைக் காண்போம்.

## குருகுல வாசம் :

பண்டைக்காலத்தில் நம் நாட்டில் ஆங்காங்கு ஆசிரமங்கள் பல நிறுவப்பெற்றிருந்தன. வனங்களிலும் ஒதுக்குப்புறமான அழகான ஆற்றோரங்களிலும் அவை அமைந்திருந்தன. இனிமையும், அமைதியும் நிறைந்த சூழ்நிலை அங்கு நிலவியது. பற்றற்ற முனிவர்கள் அவற்றிற்குத் தலைவர்களாயிருந்தனர். அவர்கள் தாம் ஆசிரியர்கள். அவர்களிடம் கல்விகற்கத் தொலைவான இடங்களிலிருந்து பல இளைஞர்கள் வருவார்கள். இளவரசர்களும் ஏழைச்சிறுவர்களும் அங்கு சேர்ந்தே கல்வி பயின்றனர். அங்கு வந்தவர்கள் அனைவரும் ஆசிரியரைத் தந்தையாக ஏற்றுக்கொண்டவர்கள். எந்தக் குற்றேவலையும் அங்கு எவரும் செய்தாக வேண்டும். ஆசிரியரின் இல்லத்திற்கு, காட்டிலிருந்து விறகு அன்றாடம் திரட்டி வரவேண்டும். நீர் கொண்டுவர வேண்டும். சமையல் வேலைகளிலும் ஈடுபட வேண்டும். பயிற்சிக்காலம் முடியும் வரை தம் வீட்டுக்குப் போகமாட்டார்கள். ஆசிரியருக்குச் சம்பளம் என்ற குறிப்பிட்டதொகை கிடையாது. பயிற்சி முடிந்த பின்னர் அவரவர் தம் நிலைகளுக்கு ஏற்றவாறு குருதக்ஷிணை கொடுப்பது வழக்கம்.

இவ்வாறு, அங்கு உடல் உழைப்பு ஒரு முக்கிய அம்சமாயிருந்தது. ஏற்றத்தாழ்வு யாதொன்றும் கருதாமல் கல்வி கற்று வந்தனர். குருவும் சீடர்களும் சேர்ந்து வாழ்ந்தனர்.

ஏழைக் குசேலரும் துவாரகை அதிபன் கிருஷ்ணனும் அத்தகைய ஓர் ஆச்சிரமத்தில் படித்து வந்தது உங்களுக்குத் தெரிந்திருக்கும்.

நவீனகாலத்தில் ஆங்காங்கு நிறுவப்பட்டுவரும் உணவு விடுதிகள் (Hostels) இந்த குருகுல வாசத்தின் அடிப்படையினைப் பின்பற்ற முயலுகிறது எனக் கூறலாம்.

**சாந்திநிகேதனம், ஸ்ரீ நிகேதனம் இவற்றில் கல்விச் சோதனைகள்:**

கல்கத்தா நகருக் கருகில் சுமார் 100 கல் தொலைவில் போல்பூர் என்ற சிற்றூர் ஒன்று உள்ளது. அதற்கருகில் ஒன்றரைக்கல் தொலைவில் அமைதியான ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்தார், வங்கக்கவிஞர் ரவீந்திரநாதனின் தந்தையார். அதற்குச் சாந்திநிகேதனம் எனப் பெயர் கொடுத்தார். அவர் அங்கு ஆத்ம சோதனைகள் நடத்த, ஆசிரமம் ஒன்றினை நிறுவினர். அங்குத்தான் 1901ல் கவி ரவிந்திரநாத தாகூர் ஒரு பள்ளியை நிறுவினர். அது புரட்சிகரமான போதனை முறைகளைப் பின்பற்றும் ஒரு பள்ளியாகும்.

சம்பிரதாய முறையிலிருந்து வந்த அக்காலத்தைய பள்ளிகளையும், பள்ளியில் நடந்து வந்த கற்பிக்கும் முறைகளையும் கவி வெறுத்தார். இயற்கையோடு தொடர்ந்ததும் பிள்ளைகளின் மகிழ்ச்சியைக் குன்றச்செய்யாததும், சுதந்திரச் சூழ்நிலையில் அமைந்ததும் ஆன பள்ளி ஒன்றினை நிறுவி, தம் உள்ளொளியால் கிடைத்த சில கருத்துக்களைச் சோதிக்க அவர் முயன்றார். அதன் விளைவே 1901-ல் அங்கு ஏற்படுத்திய பள்ளி. தொடக்கத்தில் ஐந்து பிள்ளைகளுடன் அது நிறுவப்பட்டது.

1921-ல் அங்கு **விசுவ பாரதி** என்ற கலாசாலை ஒன்றினையும் நிறுவினர். 6 லிருந்து 18 வரை வயதுள்ள பயிற்சியாளர்கள் அங்கு கல்வி பெற்றனர். ஆண்களும் பெண்களும் சேர்ந்தே அங்கு கல்வி பயின்றனர். மழைக் காலத்தில் தவிர, மற்றக் காலங்களில் வகுப்புகள் சாதாரணமாகத் திறந்த வெளிகளில், மரநிழலில், நடந்தன. சில சமயம் தாழ்வாரங்களிலும் வகுப்புகள் நடந்தன. தேர்வுகளின் கொடுமை அங்கு கிடையாது. படிப்பிற்கு அங்கு இரண்டாம் இடமே கொடுத்தனர். பல்வேறு அறிவு விஷயங்களைப் பிள்ளைகளின் மனத்திற்குள் திணிக்க முயல்வதில்லை. சகோதரர்கள்போல் கூடிவாழ்தல், இசை

பயிலல், ஆசிரியர்களோடு வாழ்ந்து விவாதித்தல், அருகிலுள்ள இடங்களுக்குக் கல்விப் பயணம் போதல், நூல் நிலையத்தில் படித்தல், இயற்கை அழகுகளை ரசித்தல், இலக்கியங்களைப் படிக்கக் கேட்டு ரசித்தல் ஆகியவையே அங்கு அன்றாட வேலைமுறைகளில் சிலவாம். போதனையை விட, கட்டிடங்களை விட, நல்ல சூழ்நிலைக்குத் தாகூர் அங்கு ஏற்றம் கொடுத்தார். கல்வி என்பது ஒரு வகை வாழ்வே (It is a way of Life) என உறுதி பெற்றவர் தாகூர். நற்கலைகள், ஓவியம், நாட்டியம், சிற்பம் ஆகியவற்றை அவரவர் விருப்பப்படி அங்கு கற்க வாய்ப்புகள் அமைக்கப் பட்டுள்ளன. தாகூரின்படி விசுவ பாரதியின் மூன்று நோக்கங்களாவன :—

1. ஒரே தன்மையுள்ள இந்தியப் பண்பாட்டினை எடுத்துக் காட்டும் சிறந்த பல்கலைக் கழகமாக அது திகழ வேண்டும்.

2. கிழக்கத்தைய நாடுகளின் பல்வேறுவகைப் பண்பாட்டினைக் காட்டவல்ல கேந்திரமாயும் அமையவேண்டும்.

3. கிழக்கும் மேற்கும் கூடிச் சந்திக்கும் ஓர் உலகப் பல்கலைக் கழகமாக அது மலரவேண்டும்.

உலக சகோதரத்துவத்திற்கும் உலக ஐக்கியத்திற்கும் விசுவபாரதி வித்திடவேண்டும்.

சாந்திநிகேதனுக்கு அருகில் ஒன்றரைக்கல் தொலைவில் ஒரு சிற்றூரில் தாகூர் ஸ்ரீநிகேதனத்தை நிறுவினர். கிராம மறுமலர்ச்சி வேலைகள் அங்கு நாளிது வரை நடந்துவருகின்றன. அங்கு நடந்துவரும் மறுமலர்ச்சி வேலைகளுள் உடலுழைப்புப் பயிற்சி கொண்ட தொழில்கள் சில குறிக்கற்பாலன.

உலோக வேலை, தச்சு வேலை, மண்பாண்ட வேலை, நெசவு வேலை, விவசாயம், ஆகிய பல தொழில்கள் அங்கு கற்பிக்கப்படுகின்றன.

வேலை வாயிலாகவே எல்லா விஷயங்களும் அங்குக் கற்பிக்கப் படுகின்றன எனச் சொல்லமுடியாது.எனினும், பல்வேறு பயனுள்ள கைத்தொழில்களை நல்ல முறையில் (அதாவது உற்பத்திப் பொருள்கள் விற்கத் தகுதியுள்ள முறையில்) முதன் முதல் பள்ளியில் சோதனை நடத்தியது இங்குத்தான் எனக் கூற வேண்டும்.

**மோகா :**

இது பஞ்சாப்பில் உள்ளது. இங்கு உள்ள பள்ளி களில் விவசாயத்தைக் கற்பித்தனர். காலப்போக்கில் விவசாயத்துடன் இணைந்துவரும் சில தொழில்களிலும் பயிற்சி அளிக்கப்பட்டது. தன்னிறைவுத் தத்துவத்தை ஒரு குறிக்கோளாகக்கொண்டு இப்பள்ளிகள் இயங்க வில்லை. எனினும் விவசாயத்தால் நல்ல வரும்படி கிடைத்தது.

இங்கு ஒரு வகையான தொழில் வாயிலாகக் கல்வி, நடந்தது.

**ஈரோடு :**

இங்கு லண்டன் மிஷின் பயிற்சிப் பள்ளி என்ற ஒரு பயிற்சிப் பள்ளி உள்ளது. இங்கு பிராஜெக்ட் முறை யில் (சுய நோக்க முறை) பள்ளி வேலைகள் நடந்து வரு கின்றன. செயல்கள் வாயிலாகக் கல்வி கற்பிக்கப்பட்டு வருகிறது. இதுவும் ஒரு சோதனைப் பள்ளி.

**சத்தியாகிரஹ ஆசிரமப் பள்ளி, சபர்மதி, ஸேவாகிராமம்:**

இந்த இடங்களில் காந்திஜியாலேயே நடத்தப்பட்டு வந்த கல்விச் சோதனைகளைப்பற்றி முன்னரே கூறப் பட்டுள்ளது. அவையே ஆதாரக்கல்வித் திட்டத்திற்கு அடிகோலின என்றும் அறிந்திருப்பீர்கள்.

**வாலாஜாபாத் இந்துமதபாடசாலை நடத்தும் சோதனைகள்:**

வாலாஜாபாத் என்னும் ஊரிலுள்ள ஒரு மூத்தோர் ஆதாரப் பள்ளியில் கைத்தொழிற் பயிற்சி மாநிலத்திற்கே

எடுத்துக் காட்டாக நடந்துவருகிறது. "அது தென்னாட்டின் 'சாந்திநிகேதனம்' என விளங்குகிறது." பள்ளியும் கைத்தொழிற்சாலையும் ஒரு குருகுலமாய் விளங்குகிறது.

"வாலாஜாபாத் குருகுலத்தைப் பெருமக்கள் பார்வையிடுகிறார்கள். பல துறைகளிலும் சிறந்தவர்கள் இங்கு வருகை புரிகிறார்கள். தொடக்கப் பள்ளிகளும், நடுநிலைப் பள்ளிகளும், உயர் பள்ளிகளும், கல்லூரிகளும், பயிற்சிப் பள்ளிகளும், பயிற்சிக் கல்லூரிகளும் வாலாஜாபாத்திற்கு வருகை புரிந்துகொண்டே யிருக்கின்றன. கற்கும் மாணவர்களும், கற்பிக்கும் ஆசிரியர்களும், கல்விக்கூடங்களை நடத்துபவர்களும் வருகிறார்கள். இந்துமத பாடசாலையில் கல்வி பயிலும் மாணவர்கள் பல மாவட்டங்களையும் சேர்ந்தவர்கள். தமிழ் நாடு மட்டிலுமின்றி வேறிடங்களிலிருந்தும் சிறுவர்கள் இங்கு வந்துள்ளனர். வங்காளம் பம்பாய், கேரளம் முதலிய வேறு மாகாணங்களின் சிறுவர்களும் வந்துள்ளனர். தமிழ் நாட்டிலிருந்து வாணிபம் புரிய மலேயா நாடு சென்றுள்ள பெற்றோர்களின் ஆதரவற்ற குழந்தைகளும் இங்கு வந்துள்ளனர்."

(14-1-1958 தேதியிட்ட "குருகுலம்" - மலர் 11-இதழ் 1 லிருந்து)

"கைத் தொழிலின் பெருமையை உணர்ந்து, அதனால் அடையக்கூடிய நன்மையை ஒரு நாடு பெற வேண்டுமாயின், அந் நாட்டுச் சிறுவர் சிறுமியரிடத்தே வேலை தொடங்கவேண்டும். அவர்கள் கல்வி பயிலும் பள்ளிக்கூடங்களிலும் எண், எழுத்துக் கற்கின்றபோதே கைத்தொழிலிலும் ஊக்கங் கொள்ளப் பயிற்சி தர வேண்டும். தங்கள் கைகளையும் அவற்றின் வழியாக அறிவையும் செம்மையான முறைகளில் பயன் படுத்தினால் சிறுவர்கள் பயனுள்ள குடிமக்களாக வருங்காலத்தில் விளங்குவார்கள் அன்றோ!

வாலாஜாபாத் சென்னைக்கு அண்மையில் செங்கற்பட்டு மாவட்டத்தில் பாலாற்றங்கரையில் அமைந்துள்ள

ஓர் ஊர். அங்குள்ள இந்துமத பாடசாலையில், இன்று 800 சிறுவர் சிறுமியர் கல்வி பயில்கின்றனர். பாடசாலையுடன் ஒரு மாணவர் இல்லமும் அமைத்து, அதில் 650 ஏழைச் சிறுவர் தங்கும் வசதியும், உணவு வசதியும் பெற்று வாழ்ந்து வருகிறார்கள். அம்மாணவர்கள் கைத்தொழிலிலும் பயிற்சி மிகப் பெறுதற்கு ஒரு பெரிய தொழிற்சாலையும், பாடசாலையுடன் அமைத்து அதற்குத் 'திருவள்ளுவர் தொழிற்சாலை" எனப் பெயரிட்டுள்ளனர்.

அங்கு மாணவர்கள் பல தொழில்கள் பழகுதற்கு வசதிகள் இருக்கின்றன. நம் நாட்டின் தொழில்களில் முதன்மையானதாக விளங்கும் நெய்தல் தொழில் இங்குச் சிறப்பாகக் கற்பிக்கப் பெறுகிறது. கெட்டிச் சாயமுள்ள நூலைக்கொண்டு பல நிறங்களிலும் பல அளவுகளிலும் உறுதியான சமக்காளங்களை மாணவர்கள் நெய்கிறார்கள். உணவு கொள்ளுதற்குப் பயன்படும் பந்தி சமக்காளங்களும், பைகள் தைப்பதற்கு உதவியாகக்கூடிய ஒருவகைச் சமக்காளமும் செம்மையாகக் கைத்தறிகளில் நெய்யப் படுகின்றன.

நூல் நூற்றலும் அங்குக் கையாளப்பெறுகின்றது. யாவரும் ஓய்வு நேரத்தைச் செம்மையாகப் பயன்படுத்துதற்கு நன்கு பயன்படும் நூற்றல் தொழிலின் முழு நன்மையையும் அங்குச் சிறுவர்கள் பெறுகிறார்கள். பஞ்சுக்காயை உடைத்து, பஞ்சினின்று கொட்டையை நீக்கி, அதை வில்லால் அடித்து உருட்டிப் பட்டை போட்டு, தக்கிளியாலும், இராட்டையாலும் நூல் நூற்கவும் மாணவர்கள் கற்றிருக்கிறார்கள். நூற்றுக்கணக்கான சிறுவர்கள் வரிசையாக அமர்ந்து கைகளில் தக்கிளி கொண்டு வெள்ளிக்கம்பிகளென நூல் நூற்கின்ற காட்சி நன்றாயிருக்கும்.

தச்சு வேலையும் மாணவர்கள் ஓரளவு பழகிக் கொள்வது நல்லதென அஃதும் கற்றுக்கொடுக்கப்பெறுகிறது. ஒவ்வொருவரும் வாழ்க்கையில் தச்சுத்தொழிலில்

கொஞ்சம் தெரிந்திருந்தால் முட்டின்றி வீட்டுச்செயல்களைப் பார்த்துக்கொள்ளலாம். மரங்களினின்று பலகைகள் அறுக்கவும், இழைக்கவும், பெஞ்சு, நாற்காலி, மேசை முதலியன செய்யவும் அம்மாணவர்களுக்குத் தெரியும். ஒட்டுப் பலகைகளைப் பலவகை உருவங்களாக அறுத்து அவைகளுக்கு உரிய நிறங்களைத் தீட்டி அழகிய பொம்மைகளாகச் செய்து விற்பனைக்குத் தருகிறார்கள். மரத்திலிருந்தும், மாட்டுக் கொம்புகளிலிருந்தும், எலும்பிலிருந்தும் பொத்தான்கள் செய்கிறார்கள். மாட்டுக்கொம்பிலிருந்து பொத்தான்களுடன் கொக்கு, கிளி, யானை, பேழை, பிரம்பு முதலியனவும் செய்து, தங்கள் திறமைகளால் தாம் மகிழ்வதோடு பிறரையும் மகிழ்விக்கிறார்கள்.

இன்றைய உலகில் அச்சுத்தொழில் நாகரிக மக்களின் இன்றியமையாத தேவைகளில் ஒன்றாகிவிட்டது. எனவே, மாணவர்களுக்கு அச்சுக்கோத்தல், அச்சடித்தல், அடித்த காகிதங்களை மடித்தல், மடித்தவைகளை ஒழுங்குற அடுக்கல், அடுக்கியவைகளைத் தைத்துப் புத்தகங்களாகக் கட்டுதல் ஆகியவை சேர்ந்த அச்சுத்தொழிலிலும் மாணவர்களுக்கு அங்குப் பயிற்சி தருகிறார்கள்.

•இவ்வாற்றான் கைத்தொழிலால் மாணவர்களும், மாணவர்களால் மாநிலமும் நலமுறும் வழிகளை வாலாஜாபாத் இந்துமத பாடசாலை கையாண்டு வருகிறது. இந்துமத பாடசாலை இன்றைக்கு 42 ஆண்டுகளுக்கு முன்னர் சிறு அளவில் தோற்றுவிக்கப்பட்டு, சிறிது சிறிதாக வளர்ந்து இன்று தமிழ் நாட்டின் குருகுலமாகவும், தொழில் நிலையமாகவும், விளங்குகிறது.''

("கைத்தொழில் போற்றுக" என்ற தலையங்கத்திலிருந்து குருகுலம் 15-6-1958)

அண்மையில் இந்தப் பள்ளியில்தான் மதுரை மண்டல ஆதாரக்கல்வி மாநாடு (ஃபெப்ருவரி 1959-ல்) நடந்தது.

**ராஜகோபாலாச்சாரியின் கல்வித் திட்டம் :** (ராஜாஜியின் கல்வித்திட்டம்)

1952-54 ஆண்டுகளில் சக்ரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் அவர்கள் சென்னை மாநில முதலமைச்சராக இருந்த காலத்தில் திருத்தப்பட்ட கல்வித்திட்டம் (Modified Scheme) என்ற பெயரால் ஒரு திட்டம் இரண்டு ஆண்டுகள் சோதிக்கப்பட்டன. இது ஆரம்பக் கல்வி நிலைக்குமட்டும் உரித்தானது. இந்திய அரசியல் 45வது ஷரத்தை (அதாவது படிக்க லாயக்குள்ள எல்லாக் குழந்தைகளையும் 1965க்குள் பள்ளியில் சேர்ப்பது) நிறைவேற்றும் நோக்குடன் இம்முறை தொடங்கப்பட்டது.

"மூன்று மணி நேரத்திற்குப் படிப்பு: பாக்கியுள்ள நேரத்திற்கு கிராமக் கைத்தொழில்களில் ஏதாவது ஒன்றைக் கற்றல்" என்பதே இதன் நடைமுறை. மாணவர்களில் ஒரு பகுதியினர் முற்பகலில் படிப்புக் கற்பார்கள், பிற்பகலில் கைத்தொழில் கற்பார்கள். மற்றொரு பகுதியினர் அதே சமயத்தில் முற்பகலில் கைத்தொழிலும் பிற்பகலில் படிப்பும் கற்பார்கள்.

கிராமத் தொழிலாளிகள் தத்தம் பட்டறைகளில் அக் கைத்தொழில்களைக் கற்பிப்பார்கள்.

இதற்கு ஒரு வேளைப்பள்ளி எனப் பெயர்.

அண்மையில் இத்திட்டம் கைவிடப்பட்டது.

**பவனூர் ஆசிரமத்தில் சோதனைகள் :**

சேவாகிராம் அருகிலுள்ள பவனூர் என்னும் ஒரு சிற்றூரில் பூஜ்ய வினோபாஜி ஓர் ஆசிரமத்தை நிறுவியிருந்தார். அங்கே 14—18 வயதுள்ள பிள்ளைகள் 8 மணி நேரம் வேலை செய்து கல்வி பயின்றனர் அங்கு நூற்புத் தொழில் நடந்தது. அவர்களுக்கு வலக்கையாலும், இடக்கையாலும் நூல் நூற்க வினோபாஜி கற்றுக் கொடுத்தார். நூல் உற்பத்தி பெருகவும் அதனால் கூலி வருவாய்

பெருகவும், கைகளை மாற்றி மாற்றி நூற்கக் கற்பித்தார். ஒரே சீரான நூல் நூற்க அவர்களால் இயலவில்லை. அதற்காகச் சிட்டத்தின் எடை, சிட்டத்தின் எண், நூலின் பலம், சமம் ஆகியவை பற்றிக் கற்பிக்க நேர்ந்தது. நூற்கும் போதே பயிற்சியாளர்கள் வம்பளத்தார்கள். அதனுல் வேலைத்திறன், உற்பத்தி, வருவாய் ஆகியவை குறைந்தன. அத் தீங்கினைத் தடுக்க ஒரு மணி நேரம் மௌனமாய் நூற்க வினேபாஜி திட்டமிட்டார். உற்பத்தி பெருகிற்று.

பிறகு 8 மணிக்குப் பதிலாக 7 மணி நேரம் வேலை செய்வித்தார். மீதி உள்ள ஒரு மணி நேரத்தில் பயிற்சியாளர்களுடன் விவாதம் நடத்தினர். அதன் பிறகு அருகிலுள்ள வர்தா ஆற்றில் நீந்துதல், விளையாடுதல், உலாவுதல், கீதையின் ஸ்லோகங்களை நெட்டுருப்போடுதல், பண்டிகைக்கான விடுமுறை நாட்களில் பல விஷயங்களைப் பற்றி எடுத்துச் சொல்லுதல் ஆகியவை நடந்தன. இவ்வாறு அவர்கள் தொழிலைக் கற்று ஊதியம் பெற்றதோடு கல்வியும் பெறத் தொடங்கினர்கள். காலப் போக்கில் பொறுப்பற்ற பிள்ளைகளாய் வந்த அவர்கள் பொறுப்பு வாய்ந்த நற்குடிகளாகிவிட்டனர். தம் குடும்பத்துக்கான துணியைத் தாமே தயாரித்துக் கொள்கிருர்கள். கிராமப் பொதுப் பணிகளில் ஈடுபட்டு நற்தொண்டு புரிகிருர்கள். இவையெல்லாம் பவனர் தொழிற் கூடத்திலிருந்து விளைந்தவையே. வினேபா சிறை செல்ல நேர்ந்ததால் அந்த உழைப்பு அல்லது தொழிற் கூடம் மூடப்பட்டது. அது நீடித்திருக்குமானல் புதிய கல்வியின் வெற்றிகரமான சோதனைக்கு அது ஓர் நல்லெடுத்துக் காட்டாய் அமைந்திருக்கும்.

### இராமகிருஷ்ண மிஷன் பள்ளிகள் :

இராமகிருஷ்ண மிஷன் புரிந்து வரும் சமூகத் தொண்டுகளில் பள்ளிகளை நிறுவி நடத்தும் பணி முக்கியமானதாகும். ஆங்காங்கே ஒரு சில இராமகிருஷ்ண

மிஷன் பள்ளிகள் நடந்து வருகின்றன. சென்னை, பெரிய நாயக்கன் பாளையம், திருப்பளாத்துறை ஆகிய இடங்களில் நடந்து வரும் பள்ளிகள் மிகப் பெயர் போனவை. பாடத் திட்டத்தின்படி கல்வி கற்பிப்பதோடு நின்றுவிடாமல் ஒழுக்க வளர்ச்சி, சமய உணர்வு, தொண்டு மனப்பான்மை, உடல் உழைப்பு, சுய-உதவி, தன்னம்பிக்கை ஆகியவை பிள்ளைகளுக்குப் பயிற்றப் படுகின்றன. சமூகத்தில் ஒருவன் செவ்வையாய் நடந்து கொள்ளும் முறையிலிருந்தே அவன் இராமகிருஷ்ண மிஷன் பள்ளியில் படித்தவனு என வினவும் அளவுக்கு அப் பள்ளிகளில் தரும் பயிற்சி பெயர் பெற்றுள்ளது.

பள்ளிகளிலும், அவற்றைச் சார்ந்த இல்லங்களிலும் உள்ள குடும்ப வேலைகள் அனைத்தும் மாணவர்களே செய்து வருவதால் உடல் உழைப்பிற்கு அங்கு முக்கியம் கொடுக்கிறார்கள் எனச் சொல்லத் தேவையில்லை.

## கல்லூரி மாணவர்களின் உழைப்பு :

உடலுழைப்பும், தொண்டும் கல்லூரிகளில்கூட நுழைந்துவிட்டன. கல்லூரிப்படிப்பு என்றால் சொற்பொழிவுகளைக் கேட்பதே என்று பொருள்படும். கல்லூரி மாணவர்களோ எனில் மனவேலையை உயர்த்தி உடலுழைப்பு வேலையை இழிவாகக் கருதி உல்லாச வாழ்க்கை வாழ்பவர்கள். தன் ஆடைகளைத் துவைப்பதுகூட கேவலமான செயல் எனக் கருதுபவர்கள். அத்தகைய நிலையிலுள்ளவர்கள் கூட உடலுழைப்பின் அவசியம் அறிந்து ஊராருக்கு உடலினால் உழைக்க முன் வந்திருக்கும் மனப்பான்மையை வியக்காமல் இருக்க முடியாது. மருத்துவக் கல்லூரி மாணவர்கள், பொறி இயல் கல்லூரி மாணவர்கள், கலைக் கல்லூரி மாணவர்கள், ஆசிரியக் கல்லூரி மாணவர்கள் ஆகியவர்கள் ஒருவரோடொருவர் போட்டி போட்டுக் கொண்டு விடுமுறை நாட்களில் 1 கல், 2 கல் நீளமுள்ள சாலைகளை அருகிலுள்ளசிற்றூர்களில் அமைத்துள்ளார்கள்.

இந்த உடலுழைப்புச் சோதனை வெற்றிகரமாய் நடந்து வருவதுடன் காட்டுத்தீ பரவுவது போல் எல்லாக் கல்லூரிகளிலும் பரவி வருவது நம் நாட்டின் நலத்திற்கு நல்லதோர் திருப்பமாகும்.

**பிறநாடுகளில் உழைப்பு வாயிலாகக் கல்வி பற்றிய சோதனைகள் :**

18-ம் நூற்றாண்டு முற்பகுதிவரை மேல்நாடுகளில் உள்ள பள்ளிகளில் எல்லாம் 'பாடப் புத்தகங்களைக் கரைத்துக்குடிக்கும்' கல்வியே நடந்து வந்தது. பள்ளிகளில் ஆசிரியர்களின் சர்வாதிகாரம் நடந்து வந்தது. பாட விஷயங்கள் வாழ்க்கையோடும் இயற்கையோடும் தொடர்பு கொண்டிருக்கவில்லை. நேர்முக அனுபவங்களுக்கு இடமே இல்லை. சொற்களின் கொடுங்கோன்மை உச்ச நிலையை அடைந்திருந்தது. பிள்ளைகள் மேம்பாடுறவும் நன்னடத்தைதவருமலிருக்கவும், பரிசும் தண்டனையும் ஊக்கிகளாகக் கையாளப்பட்டன. பிள்ளைகள் அனைவரும் விரைவில் கல்விகற்குமாறு விரட்டப்பட்டனர். விஷயங்கள் பல வலுக் கட்டாயமாகப் பிள்ளைகளின் மனத்தில் திணிக்கப்பட்டன. நோக்கங்கள் என்னவோ சிறந்தவையாயிருந்தன. ஆனல் அவற்றை அடையும் வழி முறைகள்தாம் தவருயிருந்தன. அக்காலத்தவருக்கு, தாம் பின்பற்றும் வழிகள் தவருனவை எனத் தெரியவில்லை. இன்று நமக்குச் சர்வசாதாரணமாகத் தெரிந்த சில மனநூல் உண்மைகள், குறிப்பாகக் கல்வி மனநூல் உண்மைகள், அக்காலத்தில் அவர்களுக்குத் தெரியாது. அப்போது மனநூல் வளரவில்லை.

இந்தத் தீமைகளை ஒழித்துக்கட்ட முதல் முழக்கம் செய்த பெருமை பிரஞ்சுப்பேரறிஞரான 'ரூஸோ' (Rousseau (1712—1778) என்ற பேரறிஞரைச் சாரும். அவர் சமூகப் புரட்சிக்கு வித்திட்டவர். கற்பிக்கும் முறைகளிலும் புரட்சிக்கு வித்திட்டவர். அவர் தன் புரட்சி மிகுந்த கருத்துக்களை எமிலி '(Emile) என்னும் நூலின் வாயிலாக மக்களுக்கு எடுத்துரைத்தார். கல்விகற்பிக்கும் முறைகளைப்

பற்றி அவர் மிக மிகப்புரட்சிகரமான புதுவழிகள் புகன்றுள்ளார். அவருடைய கொள்கைகளை ஒருவாறு சுருக்கிப் பின்வருமாறு கூறலாம்.

"குழந்தையைக் குழந்தையாகக் கருது" சிறிய வடிவமுள்ள முதியோன் எனக் கருதாதே. இயற்கை முறையைப் பின்பற்றி அவனுக்குக் கல்வி கற்பி. இயற்கையில் குழந்தைகள் துருதுரு என்று இருப்பவர்கள். அதையும், இதையும் அறிய ஆவலுள்ளவர்கள். குழந்தைகளைக் கடவுள் ஏன் இவ்வாறு ஆராய்ச்சி ஊக்கத்துடன்கூடிய துடிப்புடன் படைத்துள்ளார், எனச் சிந்தித்துப்பார். "அவர்களது வளர்ச்சிக்கு உதவவே" என விடை வரும். எனவே, காற்றோட்டம் இல்லாததும், நெருக்கடி மிகுந்ததும், போதிய வெளிச்சம் இல்லாததுமான அறைகளில் அவர்களை மணிக்கணக்காய் அமரச்செய்து, கல்விகற்பிப்பது இயற்கைக்கு விரோதமானது. ஆடாமல் அசையாமல் சிலைபோல் வாளாவிருக்கச் செய்து பகல் முழுவதும் சொற்பொழிவு ஆற்றி அவர்களைச் சலிப்புறச் செய்வது இயற்கைக்கு முரண் ஆனது. அவ்வாறு அவர்களை கட்டுப்படுத்தி அமரச் செய்வது உடல் நலத்திற்கும் கேடாகும். ஒரு வேளை மூளைக்குப் பயிற்சி ஏற்பட்டாலும் உடலுக்குப் பயிற்சி ஏற்படாது. உடற்பயிற்சியும் மனப்பயிற்சியும், சேர்ந்ததே உண்மைக் கல்வி ஆகும். உடற்பயிற்சி இல்லாத கல்வி முழுப்பயன் தராது.

எனவே, குழந்தை எப்பொழுதும் புத்தகத்தைக்கட்டி கொண்டு வருந்தி இருப்பதற்கு மாறாக ஒரு வேலைப் பட்டறையில் (Workshop) சுறுசுறுப்பாக வேலைசெய்வானே யாகில், அவனது கைகள் அவனது மனப் பயிற்சிக்கு உதவும்.

அவனது திறமைக்கு ஏற்றவாறுதான் அவன் வளர முடியும். எனவே, விரைவாகச் செய்வதற்கு அவனை எந்தத் துறையிலும் விரட்டாதே.

மலைகளையும் ஆறுகளையும் பற்றிக் கற்பிக்க வேண்டுமானால் அவனைப் பள்ளிக்கு வெளியே அழைத்துச்சென்று அவற்றையெல்லாம் காட்டு. அவனை, ஏதாவதொரு வேலையில் ஈடுபடச்செய். நான்கு பிள்ளைகளோடு பழகும் வாய்ப்புகளை அவனுக்குஅளி. குழந்தையின் முழு வளர்ச்சிக்கு உதவு. பட்டியில் அடுகளை அடைப்பதுபோன்று அவர்களை வகுப்பறையில் அடைத்து வைக்காதே.

என்பதுபோன்ற புரட்சிகரமான கருத்துக்கள் அந் நூலில் இருந்தன. அவை சத்து நிறைந்தவையாயும், உண்மையாயும் இருந்தன. எனவே ஐரோப்பியக் கண்டம் முழுவதிலும், அவரது கருத்துக்களை நடைமுறையில் சோதித்தறிய பல பள்ளிகள் எழுந்தன. நாளடைவில் அமெரிக்கா கண்டத்திற்கும் அந்தச் சோதனைகள் பரவலாயின.

இவ்வாறு குழந்தை மனநூல் ஆராய்ச்சிக்கும், கல்வி கற்பிக்கும் முறைகளை சோதனை செய்யும் எண்ணத்திற்கும் அவர் வித்திட்டார். ஆனால், தாமாகவே யாதொரு பள்ளியையும் அவர் நடத்தவில்லை.

### பெஸ்டலாக்ஸி (Pestalozzi)

(1746—1827) இவர் ரூஸோவின் பரமானந்த சீடர். ஸ்விட்ஜர்லாந்து நாட்டைச் சேர்ந்தவர். சூரிக் என்னுமிடத்தில் ஒரு பள்ளியை ஏற்படுத்தினர். ரூஸோவின் கருத்துக்களின் அடிப்படையில் அங்குப் பிள்ளைகளுக்குக் கற்பித்தார். 'How Gertrude teaches her Children' என்ற நூல் ஒன்றினை அவர் வெளியிட்டுள்ளார். அவரது கருத்துக்களின் சாரமாவது:

கல்வி என்பது உடல், உள்ள, ஆன்மப்பண்புகளின் வளர்ச்சி ஆகும். செயல்கள் செய்வதற்கு உள்ள ஒரு வகைப் பொது ஆவலினாலும், அதனால் ஏற்படும் நேர்முகப் பட்டறிவினாலும், அவ்வளர்ச்சி ஏற்படுகிறது. ஆகையால், பிள்ளைகளைச் செயலில் ஈடுபடுத்த வேண்டும். எனவே

சொற்களுக்குமுன் பொருள்களைக் காட்டு. குழந்தைகள் பொருள்களைத் தொடட்டும், சோதிக்கட்டும். பின்பே கல்வி கற்பிக்கத் தொடங்கு. ஒரு வேலையில் குழந்தையை ஈடுபடுத்துவதன் வாயிலாகவே, அதன் ஆற்றல்கள் அனைத்தும் வளர்ச்சி பெற இயற்கை அன்னை திட்ட மிட்டுள்ளாள். வேலைகளில் ஈடுபடப் பட வளர்ச்சி சிறக் கிறது.

### ஃபிரிபெல் (Forebel)

(1782-1852) இவர் ஜெர்மனி நாட்டைச் சேர்ந்தவர். இவரும் 'ருஸோவின்' சீடர். புதுவகையான பள்ளிகள் நிறுவி, அங்குத் தமது கருத்துக்களைச்சோதித்தார். அவரது சாதனைகளைப் பின்வருமாறு சுருங்கக் கூறலாம்.

குழந்தைகள் துரு துரு வென்றிருப்பதையும், ஏதாவதொரு செயலில் ஈடுபட விரும்புவதையும், விளையாட்டில் மிகவிருப்பமுடனிருப்பதையும் அவர் கூர்ந்து கவனித்தார். அவற்றையே, அடித்தளமாகக் கொண்டு கல்வி கற்பிக்க முயலுவது இயற்கையைப் பின்பற்றிய முறையாகும், எனக் கண்டார். எனவே, புலப்பயிற்சி, ஆக்க வேலையில் ஈடுபடுதல், இயற்கை ஆராய்ச்சி, குழந்தைகளின் தோட்டம், (Kindergarten) ஆகியவை மூலமாக, கல்வி கற்பிக்க ஒரு திட்டத்தை வகுத்தார். அது தான் பெயர்போன Kindergarten முறையாகும். சுமார் ஆறு வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்குக் கல்வி கற்பிக்கும் முயற்சியையே அந்த முறை குறிக்கோளாகக் கொண்டுள்ளது. வேலைகளில் ஈடுபடச் செய்ய, சில கருவி களை அவர் கண்டுபிடித்தார். அவற்றிற்கு 'ஃபிரிபெல்லின் கொடைகள் (Froebel's Gifts)எனப்பெயர். அவற்றைக் கொண்டு பிள்ளைகள் விளையாடும்பொழுது, பலவகை அறிவுகளை, நேர்முக அனுபவமாகப் பெறுகிறார்கள்.

அவரது கருத்துக்கள், நவீனகல்வி மனநூல் அறிஞர் களால் பெரிதும் போற்றப் படுகின்றன. ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும், அனேக 'கிண்டர்கார்டன்' பள்ளிகள்

இயங்கி வருகின்றன. ஆனுல், இந்தியாவில் மட்டும் இம் முறை அதிகமாகப் பரவவில்லை.

**ஹாம்ப்டன் பள்ளிச் சோதனைகள் :**

ஹாம்ப்டன் என்பது, வட அமெரிக்காவிலுள்ள வர்ஜீனியா என்னும் மாகாணத்தின் தலைநகர் ஆகும். அதில் ஜெனரல் ஆர்ம்ஸ்ட்ராங் (General Armstrong) (1839-1895) என்பவர் ஒரு விவசாயப் பள்ளியை நிறுவினுர். இரண்டு ஆண்டில் அது தனி அங்கீகாரம் பெற்ற ஓர் ஒப்பற்ற கலாசாலையாக உயர்ந்தது. உழைப்பின் மூலமே, அங்குக் கல்வி கற்பிக்கப்பட்டது. 25 ஆண்டு காலம் ஆர்ம்ஸ்ட்ராங் தலைமை தாங்கி அக்கலாசாலையை நன்கு நடத்தி வந்நார். அவரது இயக்கம், அமெரிக்காவிலுள்ள எல்லாக் கல்வி நிறுவனங்களையும் ஓரளவுக்கு மாற்றிற்று என்பறு கூறினுல் அது மிகையாகாது.

அவரது சோதனைகளையும், சாதனைகளையும் பற்றி எழுதியுள்ளார். அவரது கல்வி முறையும் நமது ஆதாரக் கல்வி முறையும், கிட்டத்தட்ட ஒருவாறு ஒரே மாதிரியாயுள்ளன. அவர் கருத்துக்களின் சாரத்தைப் பின் வருமாறு கூறலாம்:—

மூளைக்குப் பயிற்சி தருவதைவிட கைகால் மெய், கண் ஆகிய வற்றிற்குப் பயிற்சி தருவது முக்கியமாகும். உழைப்பின் வாயிலாகத் திறமை வளரும்; அறிவு வளரும், நல்லொழுக்கமும், நற்பண்பும் வளரும். கைத்தொழில் நிலையங்கள் ஒழுங்கான முறையில் அமைந்து செயலாற்ற வேண்டும்; உணவுக்கும் உடைக்கும் ஆகும் செலவை தங்கள் உழைப்பின் மூலமாக மாணவர்கள் ஈடுசெய்ய வேண்டும். ஒழுங்கும்;கட்டுப்பாடும் உயர்ந்த தரத்தனவாய் இருத்தல் வேண்டும். உழைக்க விருப்பமில்லாதவர்களை, நீக்க வேண்டும்.

இவ்வாறு உடலுழைப்புக்கு முக்கியம் கொடுத்தது மன்றி, தன்னிறைவுத் தத்துவமுறையையும், அவர் நடை

முறையில் கையாண்டார். உழைப்பின் மூலமாக உடல், உள்ள, ஆன்மப் பண்புகளை வளர்க்க முடியும், அவ்வாறு நடத்த வேண்டும், என்று கூறி அவர் சோதனை மூலமாக நிருபித்துள்ளார். "வாழ்க்கைக்கான கல்வி" என்னும் ஒரு சிறிய நூலையும் அவர் எழுதியுள்ளார். அந்நூலில் தாம் கையாண்ட முறையின் தத்துவங்களைப்பற்றிக் கூறி யுள்ளார். அதனை நீங்கள் கட்டாயம் படித்துச் சுவைத்துப் பயன்பெறவேண்டும்.

**ஸீவிடிஷ் ஸ்லாயிட் (Swedish Sloyd)**

இந்த முறை 1875-ல் சுவிடன் நாட்டில் சோதனை செய்யப்பட்டது. அந்நாட்டில் ஒருவகையான மிருதுத் தன்மையுள்ள மரங்கள் மிகுதி என்று நீங்கள் பூகோளத்தில் படித்திருப்பீர்கள். அதனால், மரவேலை கற்பிப்பதன் மூலம், மாணவர்களுக்கு உடல், உள்ள ஆன்மப் பண்புகளில் வளர்ச்சி அளிக்க முடியும் என்று கருதப்பட்டது. அதற்கான கல்வித் திட்டமொன்று வகுக்கப்பட்டது. அதைத்தான் (Educational Sloyd) என்று கூறுகிறோம். மரவேலையில் திறமைபெறச் செய்வது அம்முறையின்முக்கிய நோக்கமன்று. மரவேலை வாயிலாக, உடல், உள்ள, ஆன்மா, மூன்றினையும் வளர்ப்பதே அதன் முக்கிய நோக்கமாகும். அம்முறை ஒரு காலத்தில் அந்நாட்டில் சீரும் சிறப்புற்று இருந்ததோடு, ஐரோப்பாவிலும், இங்கிலாந்திலும் பரவியிருந்தது.

**குஷன் ஸ்டீனி (Kushen Steinei) :**

இவர் மியூனிக் நகரத்தின் பொதுக் கல்வி அமைப்பாளர் ஆவர். இவரது கருத்துப்படி ஆரம்ப நிலைக்கல்வியில் உடலுழைப்பு வேலை முக்கிய இடத்தைப் பெற வேண்டும் என்பதாகும். உடலுழைப்பு என்று அவர் சொல்லும்போது அவர் ஒரு தொழிலைக் குறிக்கிறார். அவர் சொல்லுகிறார் :—

"தொழிலுக்கான கல்வியானது உடலுழைப்பிற்கு அழுத்தம் தர வேண்டும். தவிர ஒவ்வொரு தொழிலின்

உட்பகுதியையும், கவனமாயும், நாணயமாயும், திருத்தமாயும், செவ்வையாயும் செய்ய வேண்டும்.'' மேற் சொன்னவற்றில் ஆதாரக் கல்வியில் வற்புறுத்தப்படும் தன்னிறைவுத் தத்துவத்தின் சாயல் காணுகிறது.

பாதிரிமார்கள் நடத்திவந்த சோதனைகள் :

ரோமன் கத்தோலிக்க இனத்தைச் சார்ந்த பாதிரிமார்கள் நடத்தி வந்த பள்ளிக்கூடங்களில், உடலுழைப்பை ஒரு மேன்மையான நோன்பாகக் கொண்டிருந்தார்கள். மடத்தை ஒட்டிய தோட்டங்களிலும், விளை நிலங்களிலும், காய்கறிகளையும், தானியங்களையும் அவர்கள் விளைவித்து வந்தார்கள். மடத்திற்குத் தேவையான தச்சுத் தொழில், கட்டிடத் தொழில், செங்கற் சூளை வேலை ஆகியவற்றில் மாணவர்கள் ஈடுபட்டு வந்தனர். தென் ஆப்பிரிக்காவிலிருந்த டிராப்பிஸ்டு (Trappist) மடத்தில் நாளொன்றிற்கு உடலுழைப்பிற்கு ஐந்துமணி நேரம் ஒதுக்கப்பட்டிருந்ததை காலன்பாக் என்ற வெள்ளையர் வாயிலாகக் காந்திஜி கேட்டறிந்து வியந்தது உங்களுக்குத் தெரிந்திருக்கும்.

ஜான் டுயி (1859—1953) John Dewey

இவர் ஒரு வட அமெரிக்கக் கல்வி நிபுணர் ஆவர். இவர் ஒரு பெரும் சமூக வாதி. சிறந்த ஆராய்ச்சிக்காரர். சிகாகோ பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த தொடக்கப் பள்ளியில் அவர் ஆராய்ச்சி நடத்தி வந்தார். கல்வியில் செய்ய வேண்டிய சீர்திருத்தத்தைப்பற்றி இவர் எழுதியும் பேசியும் வந்துள்ளார். இவர் பல ஆராய்ச்சி நூல்கள் எழுதியுள்ளார். "பள்ளியும் சமூகமும்" (School and Society) "பள்ளியில் குடி ஆட்சி" (Democracy and School ஆகிய இரண்டும் மிகப் பெயர் போனவை. அவர் ஓரிடத்தில் சொல்கிறார்:"—

"தையல் வேலை கற்கவேண்டும். துணி நெய்ய வேண்டும். சமையல் புரியக் கற்கவேண்டும். இவற்றை

ஒன்றுக்கொன்று சம்பந்தப்படாத பாடங்களாகக் கற்காமல் வாழ்ந்து கற்கும் முறையில் பயிலவேண்டும்.''

இவ்வாறு குடும்ப வேலைகளிலும், கிராமக் கைத் தொழில் வேலைகளிலும், மாணவர்கள் உழைத்துக் கல்வி கற்குமாறு 'டூயி' அழுத்தம் திருத்தமாய்க் கூறி இருப் பதை நாம் கவனிக்கவேண்டும்.

இளவரசர் 'குரோபாட்கின்' (Prince Kropatkin):

இவர் ஓர் புரட்சி எழுத்தாளர். மூளை வேலை செய் வோர் என்றும், உடலுழைப்பால் வேலை செய்வோர் என்றும் சமூகத்தை இரு பகுதிகளாகப் பிரிப்பதை இவர் வன்மையாகக் கண்டித்தார். தொழில் கல்விக்கு ஏற்றம் கொடுத்த போக்கையும் இவர் கண்டித்தார். இவர் வற்புறுத்தியது ஒருமித்த முழுக்கல்வியாகும். "Education Integrale" இவருடைய கொள்கைப்படி 18—20 வயது நிறைந்து, படிப்பை முடித்துப் பள்ளியை விட்டு ஆண் களும், பெண்களும் விலகும்போது, ஒவ்வொருவருக்கும் செவ்வையான விஞ்ஞான அறிவு இருத்தல் வேண்டும். பரந்த பொது அறிவும், தனிப்பட்டதொரு தொழிலில், சிறப்பான திறனும், ஒவ்வொருவரும் பெற்றிருக்க வேண் டும். அப்படி இருந்தால் தான் உற்பத்தி பெருகி நாடும் உயரும் எனக்கூறியுள்ளார். இவரது முழுக்கல்விக் கருத்து குறிக்கற்பாலது.

ரஷியச் சோதனைகள் :

சோவியத் பொதுக் கல்வியைப்பற்றி ரஷிய வரலாற்று அதிகாரி, 'பின்க் விட்ஸ்ச்' (Pinkwitch) என்பவர் பின் வருமாறு எழுதியுள்ளார் :

"நாட்டின் தற்கால நிலைக்கு சேவகர்களும், குமாஸ்த் தாக்களும் தேவை யில்லை. ஆக்க வேலையில் ஈடுபடு வோரே தேவை. நாட்டின் வளத்தைப் பெருக்குவோரே தேவை. பள்ளியை விட்டு ஒரு மாணவன் விலகு முன்பு,

**மேற்சொன்னபடி நாட்டு வளத்தைப் பெருக்குவது பற்றிய தத்துவங்களையும், அனுபவ முறைகளையும், அறிந்திருக்க வேண்டும். மக்களின் உழைப்பை மையமாக வைத்து ஒரு பள்ளி செயலாற்ற வேண்டும். புதியதொரு சமுதாயத்தை அமைக்க அவர்கள் பாடுபட வேண்டும். பள்ளியானது மெய்யான வாழ்க்கையுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்க வேண்டும். உற்பத்தித் தொழிலுக்கே பள்ளியில் முதலிடம் கொடுக்க வேண்டும்.**

மேற்சொன்ன சோவியத் கல்வி முறையானது காந்தி அவர்கள் வகுத்துத் தந்த ஆதாரக் கல்வி முறைக்கு ஒத்திருப்பதைக் காணலாம்.

**ஒற்றுமையும் வேற்றுமையும்:** இரண்டு முறைகளும் பொருள் உற்பத்தியையும், புதிய சமுதாயப் படைப்பினையும் வற்புறுத்துகின்றன. ஆனுல் முக்கியமான கொள்கைகளில் இரண்டும் வேறுபடுகின்றன. ரஷியக் கல்வி முறை சமூக, நாட்டு முன்னேற்றத்திற்கு அளவுக்கு விஞ்சிய பெருமை கொடுத்துள்ளது. தனிப்பட்ட நபரின் மேம்பாட்டை ஒரு பொருட்டாக அது கருதவில்லை. ஆனுல், ஆதாரக் கல்வித் திட்டத்திலோ, தனி நபரும் முன்னேற வேண்டும் என்ற கோட்பாடு முன்னணியில் வைக்கப்பட்டுள்ளது.

**டஸ்கி கல்விச் சாலை :**

1881-ம்ஆண்டில் 'புக்கர் வாஷிங்க்டன்' என்பார் வட அமெரிக்காவிலுள்ள டஸ்கி என்னுமிடத்தில் ஒரு பள்ளியைக் குதிரை லாயமொன்றில் தொடங்கினுர்.

அவர் முன்னரே சொன்ன 'ஆர்ம்ஸ்ட்ராங்' என்பாரின் தொடர்பு பெற்றவர். ஹாம்ப்டன்பள்ளி வேலைகளைப் பார்த்துப் பரவசமடைந்தவர். அவரைப் பற்றி வாஷிங்டன் பின்வருமாறு கூறுகிறுர்,—

**"ஹாம்ப்டன் பள்ளி வாழ்க்கை பல புதிய கொள்கைகளை எனக்கு அறிவித்தது." பள்ளிக்கு புதிய கட்டிடம்**

கட்ட, பணம் திரட்டி மாணவ மாணவிகளைக் கொண்டே தமது மேற்பார்வையில் கட்டிடத்தைக் கட்டி முடித்தார். இதுபோன்று மேலும், மேலும், பெரியதும் சிறியதுமாக மாணவர்கள் உழைப்பினாலேயே, சுமார் நாற்பது கட்டிடங்களைக் கட்டி முடிக்கச் செய்வித்தார். கட்டிட வேலையின் உபதொழிலாக, செங்கல் செய்யும் வேலை எழுந்தது. ஓராண்டில் மாணவர்கள் 12 லக்ஷம் செங்கற்கள் செய்து விற்பனை செய்தனராம். இவ்வாறு அப்பள்ளி, கடிதில் பல துறைகளில் முன்னேறிற்று. 20 ஆண்டுகட்குள், அதற்கு 2,400 ஏக்கர் நிலம் கிடைத்தது. அதில் மூன்றில் ஒரு பாகத்தில் மாணவர்களே பயிர்த்தொழில் செய்து விளைவிக்கலாயினர்.

இப்பள்ளியில் பயிற்சி முடித்து வெளியேறியவர்கள் எங்கெங்கு சென்று தங்கி வாழ்ந்தார்களோ, அங்கெல்லாம் வளத்தைப் பெருக்கி நல்வாழ்வு வாழ்ந்தனர் எனத்தெரிய வருகிறது.

**ஹாலந்துச் சோதனைகள்:**

ஹாலந்து நாட்டில் **பில்தோவன்** என்பதொரு நகரம். அதில் 'கிஸ்போயக்' என்ற கல்வி நிபுணர் ஒரு வாடகை பங்களாவில் சுமார் 30 ஆண்டுகளுக்குமுன் 8 குழந்தைகளுடன் ஒரு பள்ளியை நிறுவினர். அதில் தமது கருத்துக்களுக்கு ஒத்த சோதனைகளை நடத்தினர். குவியல் முறையில் இயந்திரங்கள் உற்பத்தி செய்துவரும் பொருள்களை வினியோகம் செய்யுங்கால், எழும் சிக்கல்களைத் தீர்க்கும் நோக்கத்துடனேயே இப்பள்ளி நிறுவப்பட்டதுஎன அவர் கூறுகிறார். "நியாயத்தை அறிந்து, மனிதத் தன்மை உள்ள மக்கள் வாழும் சமுதாயம் ஒன்றினை உருவாக்குவதில் குழந்தைகள் பயிற்றப்பட வேண்டும்." என்பது அவர் கருத்து.

இவரது பள்ளியில் தேர்வுகளைப் பற்றிய அச்சம் கிடையாது. படிப்பு வேலைகள் தவிர, எல்லாக் குடும்ப வேலைகளையும், மாணவர்கள் கற்றார்கள். துப்புரவு, குடிநீர் கொணர்தல், பகல் உணவு சமைத்துப் பறிமாறுதல்

தோட்டவேலை, ஆகிய வேலையனைத்தும், மாணவர்களும் செய்து வந்தனர். தவிர ஒருவகையான மாணவ சுய ஆட்சியும் அங்கு நடந்தது. தேனீ என்ற ஒரு பத்திரிகையையும், மாணவர்கள் நடத்திவந்தார்கள்.

படிப்பை விட வேலைகள் அதிகமாக இருந்ததால் இப்பள்ளிக்கு வேலைத்தலங்கள் (Work plots) எனப் பெயர் வந்தது.

ஆதாரக் கல்வித் திட்டத்தில் கையாளப்படும் சில வேலைகளை இங்கும் கையாளப்பட்டு வந்திருப்பதைக் கவனிக்கவும்.

# 4

# தன்னிறைவுக் கோட்பாடு

["கல்வியில் தன்னிறைவுக் கொள்கையின் அவசியம், என்ற கோட்பாடு. எந்தக் கல்வி தன்னிறைவுக் கொள்கையை நிறை வேற்றுகிறதோ அதுவே உண்மைக் கல்வி" என்ற காந்திஜியின் கூற்றின் பொருள். தன்னிறைவுக் கோட்பாட்டினை நன்னெறி நோக்கிலும், பொருளாதார நோக்கிலும், ஆராய்வதால் கிடைக்கும் விளைவுகள்.]

## கல்வியில் தன்னிறைவுக் கொள்கையின் அவசியம்:

காந்தி வகுத்துத் தந்த ஆதாரக் கல்வித் திட்டத்தில், மிக மிக அடிப்படையான கொள்கைகள் இரண்டு. அவை யாவன:—

(1) கல்வி என்பது ஓர் ஆதாரத்தொழிலை ஊடகமாகக் கொண்டு எல்லாப் பாடங்களையும் இயைபுபடுத்திக் கற்பிக்க வேண்டும்.

(2) தேர்ந்தெடுக்கப்பட்ட ஆதாரத் தொழிலை ஒழுங்காயும், செவ்வையாயும் செய்விக்க வேண்டும். அவ்வாறு செய்வதனுல் கிடைக்கும் உற்பத்திப் பொருள்கள் பள்ளியின் நடை-முறைச் செலவை, அதாவது (ஆசிரியரின் சம்பளத்தை) ஈடுகட்ட வேண்டும்.

புரட்சிகரமான இரண்டாவது கொள்கையைப்பற்றி இந்த அத்தியாயத்தில் கவனிப்போம். மேலெழுந்தவாரியாக நோக்கிடில் இரண்டும் தனிப்பட்ட கொள்கைகள் போல் தோன்றும். ஆனுல், கூர்ந்து நோக்கிடில், இரண்டாவது கொள்கை முதல் கொள்கையினை வெற்றிகரமாக நிறைவேற்றுவதனுல் ஏற்படவேண்டிய விளைவே, எனத் தெளிவாய் விளங்கும். ஆனுல், பல அறிஞர் முதல் கொள்கையைமட்டும் ஏற்று இரண்டாவது கொள்கையைத் தீவிரமாக எதிர்த்துவருகின்றனர். அதனை நிறை

வேற்றுவது நடைமுறையில் இயலாதது; பள்ளியில் தன்னிறைவை ஒருக்காலும் எய்தமுடியாது; எதிர்பார்க்கும் நன்மைக்குப் பதிலாகத் தீங்கு விளையும் என்பது அவர்களது வாதம்.

தொடக்கக் கல்வியில் சீர்திருத்தம் செய்ய எண்ணிய ஒவ்வொரு கல்வி நிபுணரும், சிறுவர் கல்வியில் கைத் தொழில்கள் ஒன்றிரண்டினை கற்பிப்பதன் அவசியத்தை எடுத்துக் காட்டியுள்ளார்கள். ஆனால், எந்தக் கல்வி நிபுணரும், பள்ளியில் நடக்கும் தொழில் வேலையானது, தன்னிறைவுக் கோட்பாட்டினை நிறைவேற்ற வேண்டும் என்று இதுவரை கூறவில்லை. எனவே, கல்வி வரலாற்றிலும், இக்கொள்கைக்கு ஆதரவு கிடையாது எனச் சிலர் எடுத்துக் காட்டினர். ஆனால், காந்திஜி கண்டிப்பாகக் கூறினர்:—''ஓர் ஆதாரத் தொழிலின் வாயிலாகக் குழந்தைகளினுடைய உடல், உள்ள,ஆன்மா, ஆகிய மூன்றினையும் பயிற்றும் முழுக்கல்வியே, எனது முக்கியமான கருத்தாகும். குழந்தைகளின் உள்ளத்தில் இருப்பவற்றையெல்லாம், அந்த ஆதாரத் தொழிலைக் கற்பிக்குங்கால் மலரச் செய்ய வேண்டும். வரலாறு, பூகோளம், கணிதம், ஆகிய பாடங்களை, ஆதாரத் தொழிலோடு இயைபு படுத்தியே கற்பிக்கவேண்டும்.''

''ஒவ்வொரு கைத்தொழிலும், ஏனோதானோ வென்று கற்பிக்கப்படாமல், விஞ்ஞான ரீதியாய்க் கற்பிக்கப்பட வேண்டுமென்பதை மறக்கக் கூடாது. ஆதாவது, ஒவ்வொரு 'வேலை நுணுக்கத்தின் ஏன், எப்படி, என்றவை பற்றியும் குழந்தை செவ்வையாய் அறிந்திருக்க வேண்டும்.''

"கல்வி இவ்வாறு செவ்வையாய்க் கற்பிக்கப்பட்டால், தன்னிறைவு இயல்பாய் தானகவே எய்தப்பெறும். (Direct result,Natural Corollary). அதனல்தன்னிறைவுக் கொள்கையை நிறைவேற்றுவதுதான் கல்வியின் உரைகல் என்று உரைப்பேன்.''

ஆதாரத் தொழிலுக்கு நாளொன்றுக்கு இரண்டு மணி நேரத்திற்கு குறையாத நேரம் கால அட்டவணையில் ஒதுக்கப்படுகிறது. ஆதாரத் தொழில் விஞ்ஞான ரீதியில் கற்பிக்கப்படுகிறது. எதார்த்த வாழ்க்கையில், நாள் ஒன்றுக்கு மூன்று மணி நேரம் வேலைசெய்யும் ஒரு சிறுவன் அவனுக்கு அன்றைய செலவை ஈடுசெய்யும் வருமானத்தை அந்தத் தொழில் வாயிலாகச் சம்பாதிக்கிருன் என்ருல், ஆதாரப் பள்ளியில் இன்னும் சிறந்த நோக்கங்களுடன் சிறந்த முறையில், சிறந்த சூழ்நிலையில் நடத்தப்பட்டுவரும் ஆதாரத் தொழில் வாயிலாக ஏன் தன்னிறைவு பெறக்கூடாது எனக் காந்திஜி வினவுகிருர். அப்படி தன்னிறைவு பெருவிடில் தொழில் வேலை ஒரு கேலிக் கூத்தாகும் என்கிருர்.

மேற்சொன்ன காரணங்களினுல் தன்னிறைவுக் கோட்பாடானது வாழ்க்கையிலுள்ள எதார்த்த நிலையை நினைவுறுத்த உதவுகிறது. அந்த எதார்த்த முயற்சியிலும், தன்னிறைவுக் கொள்கை நிறைவேருவிட்டால் அது நாளடைவில் மறைந்தொழியும். பள்ளிகளில் உற்பத்தியாகும் பொருள்களுக்கு பொருளாதார மதிப்பு இருக்க வேண்டும். பஞ்சினை நூற்று சிட்டம் போட்டால் நூல் சமம், பலம், முறுக்கு ஆகியவை சீராகப்பெற்று நெய்தற்குத் தகுதியாய் இருக்க வேண்டும். இன்றேல் நூல் பாழாவதுடன் அந்நூலை நூற்க எடுத்துக் கொண்ட நேரமும் பாழ்தானே. மரவேலை செய்யும் ஒருவன் அவன் செய்யும் பொருள்களை சந்தையில் விற்கக்கூடிய கலை அம்சத்துடன் செய்ய வேண்டு மல்லவா? உற்பத்திப்பொருள் பொருளாதார மதிப்புப் பெற்றிருக்க வேண்டும் என்ற கண்டிப்பொன்றில்லை யாஞல், ஆசிரியர்களும், மாணவர்களும் தொழிலைச் செவ்வையாய்ச் செய்ய மாட்டார்கள். அவர்களது தொழில் வேலையில் பொருத்தம், திருத்தம் வேகம், என்ற முப்பண்புகள் காணப்படமாட்டா. சிறந்த குறிக்கோள் யாதொன்றும் இன்றி, ஏனோ தானோ என்றும், இயந்திர ரீதியாயும் தொழில் செய்வதால் உற்பத்தி

குறைந்து மூலப்பொருளும், நேரமும், பாழாகும். தவிர தொழில் வாயிலாகவே,பாடங்கள்எல்லாம் இயைபுபடுத்திக் கற்பிக்கத் திட்டமிட்டிருப்பதால் அப்பாடங்களும் சரிவர நடைபெறு.

காந்திஜியின்படி ஆதாரத்தொழிலானது ஏட்டுப் படிப்பிற்கு ஒருவழி மட்டுமல்லாமல் முடிவும் ஆக வேண்டும். தொழில் வேலையை ஒரு முடிவாகக் கொண்டு செய்யாவிடில் அது காலப்போக்கில் பொருளாதார மதிப்பு, திறமை அர்த்தமுடைமை ஆகியவற்றை இழக்க நேரிடும். ஏட்டுக் கல்வியும் ஒரு முடிவாகாது. தொழிலைச் செய்வதற்கு அது ஒரு கருவி ஆகும். ஏட்டுக் கல்வியால் தொழில் முன்னேற வேண்டும்; தொழிலினுல் ஏட்டுக் கல்வி முன்னேற வேண்டும். இவ்வாறு அவை ஒன்றை மற்றொன்று தாங்கி வலுப்படுத்துகிறது. இவ்விரண்டில் ஒன்றுக்கு மட்டும் அதிக அழுத்தம் கொடுத்தால் இரண்டும் கெடும்.

"ஆள்வினையும் ஆழ்ந்த அறிவும் எனவிரண்டின்
நீள்வினையால் நீளும் குடி"

என்னும் குறளை இங்கு நோக்கற்பாலது.

இவ்வாறு தன்னிறைவுத் தத்துவமானது கல்வியில் ஒரு குறிக்கோள் இருக்க வேண்டியதன் அவசியத்தையும்; அதனை அடைய வேண்டிய அவசியத்தையும் குன்றின் மேலிட்ட விளக்குப் போன்று நினைவுறுத்திய வாறிருக்கிறது.

இக் கொள்கையை வேறு சில கோணத்தினின்றும் ஒரு சிலர் கண்டிக்கின்றனர், இதை வற்புறுத்தினுல் பள்ளியில் நல்ல மதிப்புள்ள பொருள்களை விரைவாக உற்பத்தி செய்ய ஆசிரியர்கள் முனைவார்கள். எவ்வாற்ருனும், தன்னிறைவை அடையப் பள்ளிப் பிள்ளைகளை விரட்டுவார்கள். பிள்ளைகளிடம் அதிக நேரம் வேலை வாங்குவார்கள். சுருங்கக் கூறிடில் பள்ளியை ஒரு குழந்தைத் தொழிற்சாலையாக்கி விடுவார்கள். இது விரும்பத்தக்கதன்று. 14 வயதுக்குட்பட்ட பிள்ளைகளை அதிக நேரம் வேலை வாங்குவது சட்ட விரோதம் என்பது அவர்களது

வாதம். இதற்கும் காந்திஜி பொருத்தமான நல்ல விடை அளித்துள்ளார். "எவ்வாற்ருனும் இக்கொள்கையை நிறைவேற்ற முயலும் ஓர் ஆசிரியரை நான் உதறித் தள்ளி விடுவேன். தன்னிறைவு நிறைவேறுவது கல்வியின் முற்போக்கிற்கு ஓர் உரைகல் தான். எனினும் தொழில் வாயிலாக அறிவு, ஆன்மா ஆகிய இரண்டு வகைப் பண்புகளையும் வளர்க்க வேண்டும் என்பதை மறக்கக் கூடாது. மறந்து உற்பத்தியை மட்டும் மனத்தில் கொண்டால் அது நற்கல்வி ஆகாது."

**தன்னிறைவுக்கான குறைந்த பட்ச வரம்புகள் ;**

சுருங்கக் கூறின் ஆதாரப் பள்ளியில் உற்பத்தியாகும் பொருள்கள், பள்ளியின் நடைமுறைச் செலவுகளை ஈடு கட்ட வேண்டுமென்பதே. அதாவது ஆசிரியரின் சம்பளத்தை ஈடுகட்டினல் போதுமானதாகும். பள்ளிக் கட்டிடத்திற்கான செலவு, தளவாடங்களுக்கான செலவு முதலியன தன்னிறைவுக் கொள்கைக்கு உட்பட்டவை ஆகா.

சென்னை மாநிலக் கல்வித் துறையில் தன்னிறைவுச் சாதனைகளை அளவிட ஒரு குறைந்த ரூ. அ. பை. வரம்பு நிர்ணயிக்கப் பட்டுள்ளது. ஒவ்வொரு வகுப்பிலும், ஒவ்வொரு மாணவனும் திங்கள் தோறும் குறைந்த பட்சத்திற்கு எவ்வளவு நிகர லாபம் ஈட்ட வேண்டுமென்று அது திட்டவட்டமாய்க் கூறியுள்ளது. அந்தத் தொகை பின் வருமாறு :—

| | ரூ. | அ. | பை. | | ரூ. | ந.பை. |
|---|---|---|---|---|---|---|
| முதல் கிரேடு | 0 | 1 | 0 | | 0 | 06 |
| இரண்டாம் ,, | 0 | 3 | 0 | | 0 | 19 |
| மூன்ரும் ,, ,, | 0 | 5 | 0 | | 0 | 31 |
| நான்காம் ,, ,, | 0 | 8 | 0 | அல்லது | 0 | 50 |
| ஐந்தாம் ,, ,, | 1 | 0 | 0 | | 1 | 00 |
| ஆரும் ,, ,, | 1 | 8 | 0 | | 1 | 50 |
| ஏழாம் ,, ,, | 2 | 0 | 0 | | 2 | 00 |
| எட்டாம் ,, ,, | 3 | 0 | 0 | | 3 | 00 |

குறிப்பு : துணைத்தொழிலாகிய தோட்டவேலை பாய் நெய்தல் வேலை முதலியவற்றிலிருந்து கிடைக்கும் தொகையையும் இதில் சேர்த்துக் கொள்ளலாம்.

முதல்இரண்டு வகுப்புகளில் மட்டும் இந்தக் குறைந்த பட்ச வருமானத்தை பள்ளிகளில் அடைய முடியாமல் இருக்கலாம். ஆனால், மேல் வகுப்புகளில் இந்த குறைந்த பட்ச வரம்பை எளிதில் அடையலாம். அடையவும் வேண்டும். அவ்வாறு அடையா விட்டால் ஆதாரக் கல்வி செவ்வையாய்க் கற்பிக்கப்பட வில்லையென முடிவு செய்ய நேரிடும் என அரசினரது கட்டளை எச்சரிக்கிறது.

**தன்னிறைவுக் கொள்கையை நிறை வேற்ற :—**

அரசினர் விதித்துள்ள குறைந்த பட்ச வரம்புகளை அடைய கீழ்க்கண்டவற்றைக் கவனிக்க வேண்டும்.

1. ஆண்டுக்குத் தேவையான மூலப்பொருளை முன் கூட்டியே திரட்டி வைக்க வேண்டும்.

2. மூலப்பொருள் நல்ல தாய் இருக்க வேண்டும், நன்முறையில் சேமித்து வைக்கப்பட வேண்டும்.

3. கருவிகளை நன்னிலையில் வைத்திருக்க வேண்டும்.. பழுதுறின் உடனுக்குடன் பழுது பார்க்கவேண்டும். எத்தனை பிள்ளைகள் வகுப்பில் உள்ளனரோ, அனைவருக்கும் போதுமான எல்லாவகைக் கருவிகளும் இருத்தல் வேண்டும். எடுத்துக் காட்டாக 25 பிள்ளைகளுள்ள இரண்டாம் வகுப்பொன்றிற்கு 5 இரண்டடி வீசனம் மட்டுமே இருந்தால் போதாது அன்றே ?

4. கருவிகள் குறைந்திருக்குமேயாகில் அவற்றையே எல்லா வகுப்புப் பிள்ளைகளும் இடை விடாது மாறி மாறிப் பயன்படுத்த, கால அட்டவணையைப் பொருத்தமுள்ள முறையில் அமைக்கவேண்டும்.

5. நாளொன்றுக்கு இரண்டு மணி நேரத்திற்குக் குறையாத தொழில் வேலை நடத்தப்பட வேண்டும்.

6. மௌன நூற்பை ஒரு நோன்பாகக் கொண்டு நடத்த வேண்டும்.

7. ஆசிரியரும் தொழிலில் ஈடுபட்டுப் பொருள்களை உற்பத்தி செய்ய வேண்டும். அவை நல்ல மதிப்புள்ளவையாயும், எடுத்துக் காட்டாயும் அமைய வேண்டும்.

8. 2-ஆம் வகுப்பு இறுதியிலேயே சர்க்கா நூற்பு தொடங்கிவிட வேண்டும்.

9. உள்ளூர் நிலைக்கு ஏற்ப ஒன்றிரண்டு நல்ல உப தொழில்களைத் தேர்ந்தெடுத்து உள்ளூர் வல்லுநர்களைக் கொண்டு பயிற்சி அளித்து அவற்றின் வாயிலாகவும் வருவாய் ஈட்ட வேண்டும்.

10. ஒவ்வொரு திங்களிலும், எய்திய தன்னிறைவுச் சத வீதத்தைக் கணக்கிட்டு, அதனைவிட அடுத்த திங்களில் மேம்பாடுற, சலியாது உழைக்க வேண்டும்.

11. ஆதாரக் கல்வித் தத்துவங்களை மனத்தினின்று மறந்து விடக்கூடாது.

**தன்னிறைவுக் கொள்கையும் நன்னெறி வாழ்க்கையும் :**

தன்னிறைவுக் கொள்கை என்பது குறுகிய ரூ.அ.பை. நோக்கம் மட்டும் அன்று. பள்ளிப் படிப்பு முடிந்துவிட்டவுடன் மறைந்துவிடக்கூடிய ஒரு கொள்கையுமன்று. அது ஒவ்வொருவனுடைய வாழ்க்கை முழுவதிலும் நிற்க வேண்டிய கொள்கையாகும். ஒரு வாழ்க்கை முறை ஆகும்.

பிறர் சார்பற்று வாழுவதன் மேம்பாட்டையும், சுய உதவியையும் அது வளர்க்கிறது. சுருங்கக் கூறிடின் "தன் கையே தனக்கு உதவி" என்னும் கோட்பாட்டினைக் கற்பிக்கிறது. வாழ்க்கையில் நன்னெறியில் நடக்க அது ஓர் ஒப்பற்ற உறுதுணையாகும்.

தன் அலுவல்களைத் தானே கவனித்துக் கொள்ள, தன் துணிமணிகளைத் தானே தயாரிக்க, துவைத்து

உடுத்த வேண்டும். பிறரை ஏவாமல் தானே செய்யக் கூடியவற்றை நாமே செய்துகொள்ள வேண்டும். நமது புழைக்கடைத் தோட்டத்தை நாமே பராமரிக்கவேண்டும். வாழ்க்கையில் அன்றுடம் எழும் சாதாரண வேலைகளுக் கெல்லாம் பிறரை நம்பி வாழக்கூடாது. தன் மானத்தைக் காக்க வேண்டும். இவற்றையெல்லாம் தன்னிறைவுக் கோட்பாடு கற்பிக்கிறது.

பிறர்மீது சார்ந்து ஒட்டுண்ணியாய் வாழ்ந்து உழைப் பின்றி அவர்களது உணவு, உடை, உடைமை, ஆகிய வற்றைச் சுரண்டும் வாழ்க்கை முறைக்கு இது நேர் எதிர்மாருனது.

கூர்ந்து நோக்கிடின் இன்னுசெய்யாமை, உண்மை, சுரண்டல் இல்லா உழைப்பு ஆகியவை இதன் அடித்தளத் தில் உள்ளன.

தன்னிறைவுக் கொள்கையைப் பின்பற்றிவரும் பள்ளியிலிருந்து கல்வி கற்று வெளியேறும் ஒவ்வொரு மாணவனும் மேற்சொன்னவாறு தற்சார்புற்று நன்னெறி யில் நாணயமான வாழ்வு நடத்துவான் என்று எதிர்பார்க் கப்படுகிறது.

## தன்னிறைவும் பொருளாதாரமும் :

ஆதாரத்தொழிலைச் செவ்வையாய் நடத்துவதால மதிப்புள்ள நல்ல பொருள்கள் உற்பத்தியாகும். நல்ல் ஊதியம் கிட்டும். ஒவ்வொரு மாணவனும் பிறர் சார்பற்று வாழக் கற்றிருப்பான். எனவே, அத்தகைய மாணவர் களின் வாயிலாகச் சமூகப் பொருளாதாரமும், கிராமப் பொருளாதாரமும் உயரும். விஞ்ஞானக் கண் பெற்ற மாண வர்கள் தம் பின்-வாழ்க்கையில் தொழில், விவசாயம், பிற வேலைகள் ஆகியவற்றில் எல்லாம் விஞ்ஞான மனப்பான் மையுடன் தொண்டாற்றி பொருள் வளத்தைப் பெருக்கு வர் ; பொருளாதாரம் ஓங்கும்.

பரவல் முறையில் தொழில்கள் பெருகும். கிராமங்கள் செழிக்கும். கிராமங்களில் நல்வாழ்வு நிலவும். மகிழ்ச்சிகர மான வாழ்வு மலரும். ஸர்வோதய சமுதாயம் உதயமாகும்

அரசியல் சுதந்திரம் பெற்ற நம் நாடு, பொருளாதார சுதந்திரத்தை இன்னும் பெறவில்லை. அச்சுதந்தரத்தை அடையச் செய்ய, சரிவர நிறைவேற்றப்படும் தன்னிறை வுக் கொள்கை பெரிதும் உதவும் என்பதற்கு ஐயமில்லை.

———

5

# ஒழுங்கு

['ஒழுங்கு' என்பதன் பொருள்: 'உழைப்பு அல்லது தொழில் வாயிலாக ஒழுங்கு' என்ற கோட்பாடு. ஒழுங்கை உழைப் பாக நிலைநாட்டும் முறைகள். இவ்வகையான முறைகளில் பரிசு, ஒறுத்தல் ஆகிய இரண்டின் தன்மையும் இடமும்].

## 'ஒழுங்கு' : அதன் பொருள்

ஒரு நிறுவனத்தில் அமுலிலுள்ள சட்ட திட்டங்களுக் கும் விதிகளுக்கும், மரபுப் பழக்கவழக்கங்களுக்கும் இணங்கி அவற்றை மீருமல் நடந்து கொள்ளும் தன்மைக்கு 'ஒழுங்கு' என்று பெயர். இதைக் கட்டுப்பாடு என்றும் சொல்வதுண்டு. மேற்கூறியதிலிருந்து பள்ளிக்கூட வேலைகளுக்கு ஒழுங்கும், கட்டுப்பாடும் எவ்வளவு இன்றி யமையாதவை என்று விளக்காமலே தெரியவரும். வகுப் பறையில் ஒழுங்கும், கட்டுப்பாடும் நிலவி வந்தால் ஆசிரி யருக்குக் கற்பிக்கும் வேலை எளிதாகும். பிள்ளைகள் சுலப மாகவும் செவ்வையாகவும் கற்க முடியும். காலப்பாழோ அல்லது மனக்குமுறலோ ஏற்பட இடமிராது. ஒழுங்கும் கட்டுப்பாடும் இல்லாத பள்ளிகளில் கற்பித்தல், கற்றல் வேலைகள் முட்டுப்பெறும். கற்பித்தல் முழுப்பயனைத் தராது.

## சட்ட திட்டங்கள், விதிகள், மரபுப் பழக்கவழக்கங்கள் :

விதிகளுக்கு, இணங்கி நடப்பதே ஒழுங்காகும் என் ரும். சட்டத்திட்டங்கள் என்ருல் என்ன? அவற்றை யார் ஏற்படுத்துகிருர்கள். அவற்றிற்குச் சில எடுத்துக் காட்டுகள் முதலியவற்றைப் பார்ப்போம்.

'ஐந்து வயதுக் குட்பட்ட பிள்ளைகளைப் பள்ளியில் சேர்க்கக் கூடாது.' 'அம்மை குத்தாத பிள்ளைகளைச் சேர்க்கக் கூடாது.' என்பன சட்டத்திற்கு எடுத்துக் காட்டுகள்.

குறித்த காலத்தில் பள்ளிக்கு வரவேண்டும்; வகுப்பில் அமைதியாயிருக்க வேண்டும்; ஆசிரியரை வணங்க வேண்டும்; கொடுத்த வேலைகளை முடித்து வரவேண்டும்; எறும்புச்சாரி முறையைப் பின்பற்றி நடக்க வேண்டும்; வகுப்பில் ஒருவர் பேசும்பொழுது மற்றொருவர் குறுக்கே பேசக்கூடாது; சுவரில் கிறுக்கக் கூடாது; பராக்குப் பார்க்கக் கூடாது; வகுப்பறையில் வேர்க்கடலையை உரித்துத் தின்னக்கூடாது; ஒருவரோடொருவர் சண்டை புரியக்கூடாது; ஒருவர் எழுதுவதை மற்றொருவர் பார்த்து எழுதக் கூடாது; கண்ட கண்ட இடத்தில் குப்பை கூளங்களைப் போடக் கூடாது போன்று எண்ணிறந்தவைகளை விதிகளுக்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம்.

பள்ளி என்பது ஒரு சமூகம். அதில் பல வகுப்புக்கள் உள்ளன. ஒவ்வொரு வகுப்பிலும் 25, 30 பிள்ளைகள் இருக்கிறார்கள். ஒவ்வொருவர் உள்ளமும் (ஆசிரியர் உள்ளம் உட்பட) ஓர் எரிமலை போன்றது. ஒவ்வொன்றிலும் காட்டாற்றின் வேகமும், அழிக்கும் ஆற்றலும் நிறைந்த ஓரிரண்டு இயல்பூக்கங்கள் பீறிட்டு வெளிவரக் காத்துக் கொண்டிருக்கின்றன. அதன் விளைவால் பிள்ளைகள் துடிப்புள்ளவர்களாக இருக்கின்றனர். ஓரிரண்டு பிள்ளைகளின் இயல் பூக்கங்கள் தீவிரமானவை; அல்லது இல்லச் சூழ்நிலையின் காரணமாய் அவை தீவிரத் தன்மை அடைகின்றன. அவற்றை அப்படியே வளர விட்டால் குறும்புகளாக மாறும். அல்லது ஒழுங்கு விதிகளை மீறிய நடத்தைகளாகலாம். அத்தகைய நடத்தைகளால் வகுப்பு வேலைகள் தடைபடும்.

ஆற்று நீரினால் அபாயமும் பாழும் ஏற்படாவண்ணம், அதன் இரு மருங்கும் கரைகள் அமைக்கப் பட்டிருப்பது போல, மேற்கூறிய பிள்ளைகளைப் போன்றவர்களால் வகுப்பு வேலைகள் பாதிக்கப்படாவண்ணம் சட்டங்களும், விதிகளும் ஏற்படுத்தப் பட்டுள்ளன. கற்பித்தல் - கற்றல் வேலைகளை எளிதாக்கவே அதாவது அவற்றை இனிதாயும்

காலப்பாழ், முயற்சிப் பாழ் இல்லாமலும், குறித்த காலத்தி லும் நடத்தி முடிக்கவே - சில விதிகளும் கட்டுப்பாடுகளும் அவசியமாகின்றன. அத்தகைய கட்டுப்பாடுகள், பள்ளிக்கு மட்டுமின்றி ஊருக்கும் நாட்டிற்கும் தேவை. பொதுமக் களின் நன்மைக்கான கட்டுப்பாடுகளைப் பாராளுமன்றம் ஏற்படுத்துகின்றது. அவற்றைச் **சட்டதிட்டங்கள்** என் கிறோம். பள்ளி, அலுவலகம், அல்லது ஒரு நிறுவனம் அததற்குத் தேவையான சில கட்டுப்பாடுகளைத் தெளிவாக நிர்ணயித்துக் குறித்து வைத்திருக்கின்றது. அவற்றை **விதிகள்** என்கிறோம். அவை அந்தந்த நிறுவனங்களுக்கு மட்டும் உரித்தானவை.

அதேபோன்று, ஒவ்வொரு நிறுவனத்திலும் திட்ட வட்டமாக குறிக்கப்படாமலேயே ஒரு சில பழக்கவழக்கங் கள் பின்பற்றப்பட்டு வருகின்றன. அவற்றைத்தான் **மரபுப் பழக்க வழக்கங்கள்** என்கிறோம். அந்தந்த நிறுவ னத்தைச் சேர்ந்தவர்கள், அத்தகைய பழக்க வழக்கங் களைப் பிறரிடமிருந்து பார்த்து கற்பார்கள். அவற்றைச் சாதாரணமாக யாரும் கற்பிப்பதில்லை. உடை உடுப்பது பற்றியும், பெரியோரை வணங்கும் முறை பற்றியும், வெவ் வேறு பள்ளிகளில் வெவ்வேறு பழக்கவழக்கங்கள் உள் ளன. எடுத்துக்காட்டாக, நெற்றியில் திருநீறு பூசுவதை சிலபள்ளிகள் வற்புறுத்துகின்றன. சில, அதை எதிர்க்கின் றன. சில அதைப் பொருட்படுத்துவது இல்லை. இது போன்று பல மரபுகளைக் கூறலாம்.

மேற்கூறிய விதிகளின் உருவத்தைக் கவனியுங்கள். அவை "செய்," 'செய்யாதே,' (Do's and Dont's) என் றும் 'வேண்டும்', 'வேண்டாம்,' 'கூடாது' என்றும் முடி வதைக் காண்பீர்கள். அதாவது உடன்பாட்டிலோ, எதிர் மறையிலோ அவை அமைந்திருப்பதைக் காண்பீர்கள்.

விதிகள் சாதாரணமாக முன்னிலை ஒருமையில் உரு வெடுத்திருக்கும். ஏதோ ஒருவகை அதிகாரம், ஆணவம், அதில் தொனிப்பதுபோல் தோன்றும்.

**விதிகளை மீறுவதேன் :**

எனவே, எவ்வகைக் கட்டுப்பாட்டையும் ஏற்க விரும்பாத, துடிக்கும் உள்ளங்கள், விதிகளைத் தெரிந்தோ தெரியாமலோ மீறுவது இயல்பே. தவிர, பயிற்றல் கவர்ச்சியுடன் அமையாவிட்டாலும், பிள்ளைகளின் கவனம் சிதறக்கூடும். அதனல் ஒழுங்கு விதிகள் மீறப்படலாம். சிலவேளைகளில் பள்ளிச் சூழ்நிலைகளின் குறைபாடுகளாலும் ஒழுங்கு விதிகள் மீறப்படலாம். விதிகளை மீறினல் என்ன நிகழ்ந்துவிடுமென, அச்சமில்லாமலே ஒருவகைத் திமிருடனும் சிலர் அவற்றை மீறுவதுண்டு. விதிகள் இருப்பதைத் தெரியாமலேயே மீறுவதுமுண்டு. எந்த அடிப்படையில் விதிகளை மீறினலும் குற்றம் குற்றந்தான். அதனல் நிறுவன வேலைகள் பாதிக்கப்படாமலிரா. எனவேதான் ஒவ்வாரு பள்ளியிலும் ஒழுங்கை நிலைநாட்டும் விஷயத்தில் தனிக் கவனம் எடுத்துக்கொள்கிருர்கள்.

**ஒழுங்கைப் பற்றிய பழைய கருத்து :**

வகுப்பறையில் 'கப்சிப்' என்று அமைதியாய் இருக்கும் நிலையை, ஒழுங்கின் உன்னத நிலை என்று இதுகாறும் எண்ணி வந்தனர். ஆடாமல், அசையாமல், இங்குமங்கும் பராக்குப் பாராமல், ஆசிரியரையும் கரும் பலகையுமே பார்த்துக்கொண்டு சிலைபோல் இருக்கும் நிலைதான் ஒழுங்குக்கு அறிகுறி என எண்ணி வந்தனர். சுருங்கக் கூறில், வகுப்பில் உள்ள அமைதியையே ஒழுங்கு என எண்ணி இருந்தனர். பிள்ளைகள் இப்படி அப்படி அசைவதையும், சில சமயங்களில் ஒருவரோடொருவர் பேசுவதையும், ஐயங்களைத் தீர்த்துக்கொள்ள ஒன்றிரண்டு வினக்கள் கேட்பதையும், ஆசிரியர் ஒருவரைக் கேட்கும்போது வேறு சிலர் துடிப்புடன், விடைகூற முன் வருவதையும், உள்ளத்துடிப்பால் சில குறும்புகள் செய்வதையும், மன்னிக்கமுடியாத குற்றங்கள் என்றும், ஒழுங்கை மீறிய குறும்புத்தனமான நடத்தை என்றும் எண்ணிவந்தனர். அந்தக் காலம் அறவே மாறிவிட்டது. அது மனநூல் ஆராய்ச்சி

உண்மைகளை அறிந்திராத காலம். மலரும் சிறுர் உள்ளத்தின் போக்குகள் பற்றி அறிந்திராத காலம்.

**ஒழுங்கைப் பற்றிய தற்காலக் கருத்து :**

பள்ளி வேலைகளுக்கு அமைதி என்னவோ இன்றியமையாததுதான். ஆனல் அது இடுகாட்டின் அமைதியாய் இருக்கக் கூடாது. அத்தகைய அமைதி பிறர் கட்டளையினுல் ஏற்படக்கூடாது. பிள்ளைகளாலேயே ஏற்படுத்தப் பட்ட அமைதியாயிருக்கவேண்டும். ஒவ்வொரு சமூகத்திற்கும் சமூக வேலைகள் முட்டின்றிச் சரிவர நடைபெற பல விதிகள் என்னவோ இன்றியமையாதவைதாம். ஆனல், அவ்விதிகளின் அவசியத்தையும், பொருளையும், விதிகளையும் மீறுவதால் ஏற்படும் இழப்பையும், பிள்ளைகள் நன்கு அறிந்திருத்தல் வேண்டும். சுருங்கக் கூறின், மக்களுக்கு வேண்டிய சட்டதிட்டங்களைப்பாராளுமன்றத்தில் மக்களே ஆக்கி அமைத்துக் கொள்வதுபோல், பிள்ளைகளின் சமூகத்திற்குரிய தேவைகளைப் பிள்ளைகளே அமைத்துக் கொள்வதுதான் பொருத்தமுடைத்து, என நவீன மனநூல் அறிஞர்கள் கூறுகின்றனர். விளையாட்டுக்கள் விளையாடும் போது, பிள்ளைகள் விதிகளைத் தாமே நிர்ணயித்துக் கொள்வதையும், அவற்றை மீறுவோரைக் கவனிப்பதையும் நாம் இன்றும் காணலாம். அதைப்போன்று, வகுப்பறை விதிகளையுங்கூட பிள்ளைகளே அமைத்துக்கொள்ள ஆசிரியர் உதவ வேண்டும்.

விதிகளின் எண்ணிக்கை குறைந்திருப்பது நன்று. விதிகளை மீறுவோர்களை ஒறுக்க (தண்டிக்க) ஆசிரியர் முன் வரவேண்டியதில்லை. பள்ளியில் நீதி மன்றம் ஒன்று அமைவித்து, பிள்ளைகளின் பிரதிநிதிகளைக் கொண்டே ஒழுங்கு விதிகளை மீறின குற்றங்களைக் கவனிக்கச் செய்யலாம். வேலைசெய்யுங்கால், அதைப் பற்றிப் பேசுவது நன்று; ஐயங்களை அச்சமின்றி எடுத்துரைத்து விடை அறிய ஆவலுறுவது நன்று; சிலைபோல் வாளாவிருப்பது நன்றன்று; பலருடன் பல்வேறு சந்தர்ப்பங்களில் பழகு

வது அவசியம். குறும்புகளை மடைமாற்றி அமைக்க முடியும் என்பது கல்வி மனநூல் கண்டறிந்த சிறந்த உண்மையாகும்.

**அகமும் புறமும்:**

சுருங்கக் கூறின், ஒழுங்கு பிள்ளைகளின் அகத்திலிருந்து (உள்ளத்திலிருந்து) எழ வேண்டும். புறத்திலிருந்து திணிக்கப்பட்டதாக இருக்கக் கூடாது.

**உழைப்பு வாயிலாக ஒழுங்கு என்னும் கோட்பாடு :**

வெறும் அமைதி மட்டும் ஒழுங்கு ஆகாது எனக் கண்டோம். பிள்ளைகள் ஒரு விளையாட்டிலோ, ஒரு நாடகத்திலோ, ஒரு செயலிலோ, ஓர் உற்பத்தித் தொழிலிலோ கண்டு, கேட்டு, உயிர்த்து, உற்று, ஈடுபடுவதைப் பார்த்திருக்கிறீர்களா? அவர்கள் அந்த ஈடுபாட்டில் தன்மனத்தைக் குவித்திருப்பார்கள். அவ்வாறு ஈடுபட்டிருக்குங்கால் அன்னையோ, அருமை அண்ணனே, நண்பனே உணவு உண்ணக் கூப்பிட நேரிடினும், அவர்கள் காதில் விழுவதில்லை. தான் ஈடுபட்டிருக்கும் வேலையிலேயே அவ்வளவு கண்ணும் கருத்துமாய் இருப்பர். கவன்முழுவதும் அவ் வேலையில்தான் இருக்கும்; ஏதோ பேச நேரிட்டாலும், தான் கைக்கொண்டிருக்கும் வேலையைப் பற்றித்தான் பேசுவார்கள். அதைப் பற்றித்தான் விமரிசனம் கூறுவார்கள். அத்தகைய முழு ஈடுபாட்டு நிலையே உண்மையான ஒழுங்கு நிலை என்கிறது புதுக் கல்வி மனநூல்.

இதற்குக் காரணங்கூறுவது கடினமன்று. குழந்தைகள் துருதுரு வென்றிருக்கும் இயல்பினர். அருகிலிருக்கும் ஒவ்வொரு பொருளையும் ஆட்டி, குலுக்கி, பிரித்து, உடைத்து, அதுமாதிரியான புதிது ஒன்று ஆக்க அவர்கள் முயல்வது இயல்பே. ஆற்றுமணலிலோ, அல்லது ஆழியின் கரையோரமுள்ள மணலிலோ அமர நேர்ந்தால், அம்மணலினுல் கிளிக்கூடும், மணல் கோட்டையும் கட்ட விழைவார்கள். வீட்டிலிருந்தால், செங்கல்லாலோ அட்டையாலோ கட்டையாலோ, அஞ்சலட்டைகளாலோ, விடு

கட்ட விழைவார்கள். கண்ணிற்கும், கைக்கும் எட்டும் பொருள் எதுவாயினும் சரி, கைக்கெடிகாரம் முதல் கைப் பொருள் மிகக் கொடுத்து வாங்கிய வானெலிப் பெட்டி ஆயினும்சரி, ஒவ்வொன்றின் அமைப்பு முறைகளேயும் இயங்கு முறைகளேயும் கற்க ஆசைப்படுவார்கள். சுருங்கக் கூறின், ஏதாவதொரு செயலில் ஈடுபட அவர்களுக்கு விருப்பம் மிகுதி. எனவே, வகுப்பு வேலேகளுக்கு இன்றி யமையாததான ஒழுங்கை நிலேநாட்ட அவர்களே ஏதாவ தொரு செயலில் ஈடுபடுத்த வேண்டும். எனவேதான், ஆதாரக்கல்வித் திட்டத்தில் ஆதாரத் தொழில் ஒன்றினில் பிள்ளேகளே ஈடுபடுத்திக் கற்பிக்கிருர்கள். வெற்றுச் செய லுக்குப் பதிலாக ஓர் ஆக்கவேலேயில் ஈடுபடுத்துகிருர்கள். எனவே, ஆதாரப் பள்ளிகளில் ஒழுங்கை நிலே நாட்ட புதுக் கல்வி மனநூல் காட்டும் பொன் போன்ற வழிகளே பின்பற்றப்படுகின்றன.

ஆதரிச ஆதாரப்பள்ளியில் பிள்ளேகள் பல்வேறு வேலேகளில் ஈடுபட்டிருப்பர். ஒரு சிலர் நடக்கவிருக்கும் நாடகநிகழ்ச்சிக்கு ஒத்திகை நடத்திக் கொண்டிருப்பர். ஒரு சிலர் நாடகத்திற்குத் தேவையான பொருள்களே சித்திர அறையில் செய்து கொண்டிருப்பர். (அம்பு, ஈட்டி, கத்தி, கிரீடம், நகைகள், உடை, ஒப்பனே முதலியன). ஒரு சிலர் நூற்பு, நெசவு, பாவு வேலேகளில் ஈடுபட்டிருப்பர். தோட்டமரநிழலில் செய்தித்தாளிலுள்ளவற்றை விளக்கிக் கொண்டிருப்பர் ஒரு சிலர். ஆசிரியர் ஆங்காங்குச் சென்று, கூட உடன் அமர்ந்து ஆலோசனேகள் கூறி ஊக்குவார். இம்மாதிரியான வேலேகளில் பெரும்பாலான பிள்ளேகள் சுறுசுறுப்பாய் ஈடுபட்டு லயித்திருப்பார்கள். ஆதலால் ஆதாரப்பள்ளிகளில் சாதாரணமாக ஒழுங்குப்பிரச்சினேகள் எழா. தவிர விதிகள் எல்லாம் அவர்களே ஏற்படுத்தியவை. அவற்றை மீறுவதால் தமக்கும் கூட்டாளிகளுக்கும் ஏற் படும் இன்னல்கள் அவர்களுக்கு நன்கு தெரியும். விதிகளே மீறுவதைத் தண்டிப்பவர்களும் பிள்ளேகளின் பிரதிநிதி களே.

## ஒழுங்கை நிலைநாட்டும் முறைகள் :

### புத்தக வாயிலாகவா ? செயல்கள் வாயிலாகவா ?

புத்தகப் படிப்பினாலும், சொற்பொழிவினாலும், நீதி நெறிகளைக் கற்பிப்பதினாலும், எண்ணிறந்த செய்யுட்களை மனனம் செய்விப்பதனாலும் ஒழுங்கை நிலை நாட்ட முடியாது. வாழ்க்கையை வாழ்ந்துதான் ஒழுங்கு முறைகளைக் கற்கவேண்டும்.பல்வேறு சந்தர்ப்பங்களில் பலபேர்களுடன் பழகும் பொழுதுதான் ஒழுங்கு வளருகிறது. ஒழுங்கின் அவசியம் நன்கு புரிகிறது.

ஆதாரக் கல்வியில் ஒழுங்கைப் பாடமாகக் கற்பிக்க முயலுவதே இல்லை. அதற்குப் பதிலாகச் செயல்கள் வாயிலாகக் கற்பிக்க முயலுகிறோம்.

கீழ்க்கண்ட பள்ளிச் செயல்கள் ஒவ்வொன்றும் ஒழுங்கைப் பற்றிக் கற்பிக்கவும் அதை நிலைநாட்டவும் உதவும்.

1. காலைப் பொதுக் கூட்டம்
2. வாரக் கொடியேற்றம்
3. கல்விப் பயணங்கள்
4. துப்புரவுச் செயல்கள்
5. தோட்ட வேலைகள்
6. கூட்டு பிரார்த்தனை
7. பள்ளிப் பொதுமன்றக் கூட்டம்
8. பாலர் நீதி மன்றம்
9. செய்தித்தாள் படித்தல்
10. ஆதாரத்தொழில் வேலைகள்
11. உப தொழில் வேலைகள்
12. கூடி வாழ்தல்
13. உணவு தயாரித்தல்
14. உணவு படைத்தல்.

ஒவ்வொரு செயலுக்கும் ஒன்றிரண்டு சிறப்பு நோக்கங்களும், பல பொது நோக்கங்களும் இருக்கும். எனினும் ஒவ்வொன்றிலும் ஒழுங்கையும், கட்டுப்பாட்டையும் கற்கப் பிள்ளைகளுக்கு எண்ணிறந்த வாய்ப்புகள் உள்ளன. அமைச்சர் பொறுப் பேற்றுச் சமூகத் தொண்டுகளை நிறைவேற்றும்போது அப்பதவிகளை ஏற்கும் ஒரு சிலருக்குச்

சிறந்த பயிற்சி கிட்டுகிறது. எறும்புச்சாரி முறையில் போதல் வருதல், தன்முறை வரும்வரை காத்திருத்தல், ஒருவர் பின் ஒருவராகப் போதல், பேசுதல், பேசும்போது காலத்தைப் பாழாக்காமலும் தேவைக்கு மிஞ்சிப் பேசாமலும் பிறரைப் புண்படுத்தாமலும் பேசப் பழகுதல், ஒவ்வொரு பள்ளி விதியின் அவசியத்தையும் பொருளையும் அறிந்து அதற்குட்பட்டு நடத்தல், சகிப்பை வளர்த்துக் கொள்ளுதல் இவற்றை எளிதில் மாணவர்கள் கற்கலாம்.

தவிர விடாமுயற்சி, தன்னம்பிக்கை, சுயமுயற்சி, பிறர்க்கு உதவல் முதலியவற்றையும் பழகிக்கொள்ளலாம்.

உடன்பாடா ? எதிர்மறையா ?

விதிகள் எல்லாம் உடன்பாட்டு முறையில் அமைந்திருப்பது நல்லது. எந்த விதியையும் எதிர்மறையாகக் கூறுவதுபொருத்த மன்று.

நாமும் நீங்களும் :

விதிகளை முன்னிலை ஒருமையாகக் கூறுவதற்குப் பதிலாக, ஆசிரியர் தன்னையும்சேர்த்து விதிகளின் வாசகத்தை அமைப்பது நன்று. எடுத்துக் காட்டாக, "நீங்கள் எல்லோரும் நாளைப் பிற்பகல் 3 மணிக்கு பள்ளியில் வந்து சேரவேண்டும்," என்பதற்குப் பதிலாக "நாமெல்லோரும் நாளை 3 மணிக்கு வந்து சேருவோம்" என்று கூறுவது சிறந்தது.

அன்பா ? அதிகாரமா ?

விதிகளின் வாசகங்களில் அன்பு தொனிக்கவேண்டும்; பொதுநன்மைக்குத்தான் விதிகள் உள்ளன என்று வெளிப்படையாகத் தெரிய வேண்டும். சுருங்கக் கூறில், விதிகள் அஹிம்ஸா முறையில் உருவாக்கப்பட்டிருக்க வேண்டும். விதிகளை ஏற்படுத்துவது யார் ? ஏற்கெனவே கூறியுள்ளபடி விதிகளைப் பிள்ளைகளே நிர்ணயித்துக்கொள்ள வேண்டும். அதற்கு ஆசிரியர் உதவினுல் போதுமானது. ஏராள

மான விதிகளை இயற்றிக் கொள்வதைவிட பொருத்தமான ஒரு சில விதிகளை மட்டும் இயற்றிக்கொள்வது நல்லது.

### அகமா ? புறமா ?

சமூகக் கட்டுப்பாட்டிற்கும், ஒழுங்கிற்கும், எந்த விதிகளையும் புறத்திலிருந்து திணிக்கக் கூடாது. பிள்ளைகளின் அகத்திலிருந்தே அந்தக்கட்டுப்பாடு உதயமாக வேண்டும் அதற்கு ஆசிரியர் உதவவேண்டும்.

### பரிசும், தண்டனையும் :

ஒழுங்கை நிலைநாட்டுவதில் பரிசும், ஒறுத்தலும் ஊக்கிகளாகக் கருதப்பட்டு, பள்ளிகளில் கையாளப்பட்டு வந்தன. தற்கால மனநூல் ஆராய்ச்சியின்படி, பரிசு வழங்குதலைப் பற்றியும் ஒறுத்தலைப் பற்றியும் புதிய உண்மைகள் வெளியாயுள்ளன. அவை மிகவும் புரட்சிகர மானவை. அவற்றைப் பற்றி அடுத்து வரும் தலைப்புக் களில் விரிவாகப் படிக்கலாம்.

### பரிசினல் ஏற்படும் நன்மைகள் :

பிள்ளைகளுக்குப் பரிசு வழங்குவதனல், அவர்களுடைய முதன்மை ஊக்கத்தையும், அதன் வாயிலாக உழைப்பையும் தூண்டுகிறோம். பெருமை, மகிழ்ச்சி, ஆகியவை பரிசு பெற்ற மாணவனுக்குக் கிட்டுகின்றன. பரிசு தற்காலத்திற்கு நன்மை பயப்பதோடு மட்டுமன்றிப் பிற்காலத்திற்கும் பயன் படுகிறது. பிற்காலத்தில் வேலைக்கு விண்ணப்பமிடும் காலத்திலும் பரிசு பெற்ற இனங்களைக் குறிக்கவேண்டி வருகிறது. இவ்வாறு உழைப்பைத் தூண்டும் நெம்புகோலாக பரிசு அமைகிறது.

### பரிசினல் ஏற்படும் தீமைகள் :

பரிசு வழங்குவதினல் பொல்லாத சில தீமைகளும் ஏற்படுகின்றன. பரிசு பெறுபவர் ஒரு சிலரேயாவர். பரிசு பெருதவரோ பெரும்பான்மையோராவர். பரிசு பெறுபவர் செருக்கடைவர். பரிசு பெருதவர் ஏமாற்றம், வருத்தம்,

பொருமை, அடைவர். சாதாரணமாக, பரிசு பெறும் ஒரு சிலர் வகுப்புதோறும், பாடங்கள் தோறும், வழக்கமாகப் பெற்றுக்கொண்டேயிருப்பர். ஆகவே, பரிசு பெருதவர் மனத்தில் ஒருவகை மனச்சிக்கல் ஏற்பட்டு அது வெறுப்பாய் முடியும். எனவே, எட்டாத பழமாகிய பரிசிற்கு அவர்கள் முயலவே முயலார். பரிசைப் பொருட் படுத்தவே மாட்டார்கள்.

இவ்வாறு, பரிசில் வழங்குவதனுல் நன்மைகளை விடத் தீமைகளே மிகுதி. எனவே, பெரும்பான்மையோருக்குப் பரிசுகள் ஊக்கிகளாக அமைவதில்லை.

மேற்சொன்ன தீங்குகளையகற்ற, கீழ்க்கண்ட உபாயங் களைக் கையாளலாம் என மனநூல் வல்லுநர்கள் கூறுகிருர் கள் :—

1. பரிசுகளின் ரூ. ந. பை. மதிப்பைக் குறை. (நற்சான்றிதழே போதுமானது.)

2. பரிசுகளின் எண்ணிக்கையைப் அதிகமாக்கு.

3. கூட்டுப் பரிசுகள் அளி. (பள்ளி முழுவதற்கு, வகுப்பிற்கு, குழுவிற்கு)

**பரிசுகளின் வகைகள் :**

பாராட்டுவது (புன்சிரிப்பால், சொல்லால், நற்சான் றிதழால்) ; சிறந்த மாணவர்களின் பெயர் பட்டியலில் குறிப்பது; வகுப்பில் முன்னிடம் அளிப்பது; பொருள்கள் வழங்குவது; (புத்தகங்கள் சாமான்கள், பணமுடிப்பு, பதக் கம்) போன்றவை பரிசுகளின் சில வகைகளாகும். சாதாரணமாக, பாராட்டே சிறப்பான ஊக்கியாகும். குற்றங்களைப்பற்றி மிகைப்படுத்திக் கூருது, சிறந்த அம் சங்களைப் பாராட்டிப் பேசுவதால் கணிசமான நன்மை ஏற் படும்.

**ஆதாரக்கல்வியில் பரிசுகளின் இடம் :**

வேலே செய்வதால் விளையும் **மகிழ்ச்சியே** பரிசாகும் என்ற மனப்பான்மையைப் பிள்ளைகளிடம் வளர்க்க வேண்டும். "என் கடன் பணிசெய்து கிடப்பதே," "பயன் கருதாப் பணி,'' என்ற பகவத்கீதைப் படிப்பினைகளைப் பிள்ளைகள் உணரவேண்டும்.

**ஒறுத்தல் :** (தண்டித்தல்)

ஒறுத்தலின் நோக்கங்களை (1) வஞ்சம் தீர்த்துக் கொள்வதற்கு, (2) இரண்டாம் முறை குற்றம் புரியாது தடுப்பதற்கு (3) குற்றம் புரிந்தவரைத் திருத்துவதற்கு, என மூன்ருகப் பிரித்துக் கொள்ளலாம்.

**(i) வஞ்சம் தீர்த்துக்கொள்வது :**

வஞ்சம் தீர்க்கும் நோக்கம் ஆதாரக் கல்வியில் கூடவே கூடாது. அது அஹிம்சையில் ஊறிய திட்டமன்ரே? ஒரு சில பிள்ளைகள் ஆசிரியர்களை மறைமுகமாகக் கேலி செய்தும், விசித்திரப் பெயரிட்டும், படங்கள் வரைந்தும், சித்தரிப்பது நாளிதுவரை இருந்து வருகிறது. குறிப்பாக, குமரப் பருவத்தில் இத்தகைய குறும்புகள் மிகுதி. பொதுவாக, இந்தப் பொல்லரங்கு செய்யும் மாணவர்கள் முரட்டுப் பிடிவாதம் உள்ளவர்களாயிருப்பர். அவர்கள் பணக்காரவீட்டுச் செல்லப் பிள்ளைகளாயிருக்கலாம். அல்லது சீராக வளர்க்கப்படாத காரணத்தால் தீய குணத்தவர்களாய் மாறியிருக்கலாம். அவர்களை ஆசிரியர் எடுத்த எடுப்பில் கண்டுபிடிப்பதரிது. சில மாணவர்களுக்கு அப்பேர்ப்பட்ட பையன்களை நன்கு தெரியும். ஆனல், அவர்களின் பெயர்களை ஆசிரியரிடம் சொல்ல முன்வரார். செருக்கும், திமிரும் முரட்டுத்தனமும், வாய்ந்த அவர்கள் தங்களை அடித்துக் கைகால்களை ஒடித்துப்போடுவார்களோ, என்ற அச்சத்தினுல், உண்மையைக் கூற அவர்கள் முன்வருவதில்லே. எனினும் கெட்டிக்கார ஆசிரியருக்கு வேறு முறைகளால்

அத்தகையோரைக் கண்டுபிடிக்கவியலும். அக் கடை மாணுக்கர்மீது வஞ்சம் தீர்க்க ஒரு சில ஆசிரியர் எண்ணுவதுண்டு. அப்பேர்பட்ட வஞ்சம் தீர்க்கும் நோக்கம் தவருனது. அந்தப் பொல்லாத மாணவர்களையும் தாயன்பு கொண்டு, நம்பிக்கையிழக்காமல், நல்வழியில் திருப்பமுயல வேண்டும். அதுவே நல்லாசிரியரின் பண்பாகும். வயதிலும், அனுபவத்திலும், மிகக் குறைந்த மாணவர்களிடம் கற்றறிந்த ஆசிரியர்கள் ஒருக்காலும் வஞ்சம் தீர்க்கும் எண்ணத்துடன் நடந்து கொள்ளக்கூடாது.

அவமதித்தல், அடித்தல், அளவுக்கு மிஞ்சின தண்டனைகளை அளித்தல், அறவேவெறுத்தல், மேல்வகுப்பிற்கு உயர்த்தாமல் நிறுத்துதல், முதலியவை வஞ்சம் தீர்க்கும் செயல்களாகும்.

(ii) தடுப்பது :

இரண்டாவதான தடுக்கும் நோக்கம், உலகில் சாதாரணமாகக் கையாளப்பட்டு வருவதாகும். ஒரு மாணவன் ஒழுங்கில் தவறிடில் அவனை ஏதாவதொரு முறையில் தண்டித்தால் அவன் அடுத்த முறை அதே தவறைச் செய்யமாட்டான். ஏனென்ருல், தவறு செய்தால் தண்டனை கிடைக்கும் என்ற நினைவு அவனுக்கு வரும். இவ்வாறு ஒருதவறை மீண்டும் மீண்டும் செய்யாமல் இருக்க அந்தத் தண்டனை அவனை எச்சரிக்கிறது. அந்தத் தவறை மீண்டும் செய்யாமலிருக்க எச்சரிப்பதோடு, அதே வகையான வேறெரு தவறையும் செய்யாமலிக்கவும் அது எச்சரிக்கிறது. ஏனெனில், அத்தவறுக்கும் தண்டனை கிடைக்குமன்ருே !

ஆதாரக் கல்வியில் தடுப்பதற்கும், தண்டனையைக் கையாளுவதில்லை. ஆசிரியர் தாயுள்ளம் கொண்டவர். தவறிய பிள்ளையிடம் அவர் நம்பிக்கை இழக்கமாட்டார். தவறிய மூல காரணங்களை ஆராய்ந்து அவற்றை நீக்கி, நல்வழிப்படுத்த முனைவார். 'இன்னு செய்வார்' முறையை கைப்பற்றுவாரேயன்றி 'ஒறுத்தலு'க்கு உடன்படார்.

"இன்னா செய்வாரை ஒறுத்தல் அவர் நாண
நன்னயம் செய்து விடல்"

என்று குறள் கூறும் வழியை அவர் பின்பற்றுவார்.

ஒழுங்கு தவறி நடந்த ஒன்றிரண்டு பிள்ளைகளைத் தண்டிக்க ஒருசமயம் காந்திஜீ கழியால் அடித்து அதற்காகப் பின் வருந்தியதையும், மற்றொரு சமயம் தான் கடும் உபவாசம் இருந்த வரலாற்றினையும் முன்னரே கூறியுள்ளோம்.

## (iii) திருத்துவது :

குற்றம் செய்தவர்களைச் சீர்திருத்தி நல்வழிப்படுத்துவதே தண்டனையின் முதன்மையான நோக்கமாகும். பஞ்சமாபாதகங்கள் புரிந்தோரை அடைத்துவைக்கும் சிறைச்சாலைகளைத் தற்காலத்தில் சிறைச் சாலைகள் என்று நாம் கூறுவதில்லை. "வருந்துமிடம் (Penitentiary) எனக் கூறுகிறோம். அங்கு, குற்றவாளிகள் தாம் செய்த குற்றங்களுக்கு வருந்தித் தம் வாழ்க்கையை மாற்றி அமைத்துக் கொள்ள உதவப்படுகிறார்கள். ஒன்றிரண்டு தொழில்கள் கற்று, அதனால் ஊதியம் பெற்று நற்குடியாய் மாறி நாணயமான வாழ்வு வாழ உந்தப் படுகிறார்கள். பெரும் குற்றங்களைப் புரிந்த 18 வயதிற்கு மேற்படாத குமரப் பருவத்தினர்கூட அக்குற்றங்களுக்காகத் தண்டிக்கப் படுவதில்லை. அதற்குமாறாக, ஒருவகைத் தனிப்பள்ளியில் சேர்க்கப்பட்டு கல்வியும், தொழிலும் சமூகப்பயிற்சியும் கற்பிக்கப்பட்டு, நற்குடியாய், நாணயமுடன் வாழ ஊக்கப்பட்டு திருத்தப் படுகிறார்கள். அவர்களை சேர்த்து வைத்திருக்குமிடத்தை சீர்திருத்துமிடம் (Reformatory) என்று கூறுகிறோம். குற்றவாளிகளை சேர்த்திருக்கும் இடத்திற்கே ஓர் இன்பகரமான, அறுவறுப்புத்தராத பேரைச்சூட்ட முன்வந்துள்ளோம் என்றால், சாதாரணப் பள்ளிகளில் செய்யும் குற்றங்களுக்கு, கடுமையான தண்டனை அளிக்கவே கூடாதென்பது தெற்றென விளங்கும். அவர்களைச் சீர்திருத்துவதே நமது நோக்கமாக வேண்டும்.

தவறிய மாணவர்களைத் திருத்த காந்திஜி டால்ஸ்டாய் பண்ணையில் கையாண்டு வெற்றி கண்ட முறைகளை இங்கே கூறலாம். தவறிய மாணவர்களைச் சிறைச்சாலைத் தலைவன் போல் சீறி விழக் கூடாது. நயமாக அவர்களுக்கு நன்னெறிகள் காட்டிச் சிறந்த முறையில் அவற்றிற்கு இணங்கச் செய்து அவர்களது ஆற்றல்களை ஆரோக்கியமான முறையில் மடை மாற்றித் திருத்த முயல்வதே நமது முக்கிய நோக்கமாயிருக்க வேண்டும். அடக்கு முறை, திட்டுதல், நீதி நவிலுதல், 'செய்ய வேண்டாம்', 'செய்யக் கூடாது' என்று கட்டளையிடுதல் போன்ற எதிர்மறையான முறைகளைக் கையாளுவது தவறு. பிள்ளைகளின் மனத்தில் அச்சத்தை யூட்டும் எந்த முறையையும் கையாளக் கூடாது. அன்பு, அனுதாபம், ஆதரவு, அவர்களது அல்லலை அறிதல் ஆகிய மூல மந்திரங்களின் வாயிலாகவே அவர்களைத் திருத்த முயல வேண்டும்.

பிள்ளைகளின் தவறான நடத்தைக்குத் தாமும் ஓரளவுக்குப் பொறுப்பாகக் கூடும் என்பதை ஒவ்வொரு ஆசிரியரும் அறிந்திருக்க வேண்டும்.

மீண்டும், மீண்டும், தவறு செய்பவர்களைப் பாலர் நீதிமன்றத்திற்கனுப்பி, பிள்ளைகள் மூலமாகவே தண்டனை பெறச் செய்யலாம். தோட்ட வேலை, துப்புரவு வேலை, ஆகியவற்றில் ஒழுங்கு தவறியோரை ஈடுபடுத்தச் செய்யலாம். ஒரு சிலருக்குப் பொறுப்பு மிகுந்த அமைச்சர் பதவிகளை அளித்துத் திருத்த முயலலாம்.

**தண்டனை வகைகள் !**

மிரட்டுதல், விழித்துப் பார்த்தல், அபாரதம் விதித்தல், வெறுத்தல் அவமதித்தல், வகுப்பிற்கு வெளியே நிற்கச் செய்தல், நேரம் தாழ்த்தி வீட்டிற்கு அனுப்புதல், "இனி இவ்வாறு செய்யேன்" என மீண்டும் மீண்டும் எழுதச் செய்தல், கடைசியிடத்திற்கு அனுப்புதல், ஏளனம் செய்தல், அடித்தல், குட்டுதல், உதைத்தல் ஆகியவை சில

தண்டனைவகைகள் ஆகும். இவற்றிற்கு ஆதாரப் பள்ளி களில் இடமே இல்லை.

ஆதாரப் பள்ளிகளில் அளிக்கப்பெறும் தண்டனைகள் உழைப்பு உருவத்தில் இருத்தல் நலம்.

"அறிவினுள் எல்லாம் தலை என்ப தீய
செறுவார்க்கும் செய்யா விடல்"

என்ற அருமையான குறளை நினைவுறுத்திக் கொள்வோம்.

**ஆதாரக் கல்வியில் தண்டனையின் இடம் :**

ஆசிரியர் எல்லா வகையிலும் முன் மாதிரியாக நடந்து கொள்ள வேண்டும். பள்ளி விதிகளை அவரும் பின் பற்ற வேண்டும். அழகு, செல்வம், அச்சுறுத்தும் தன்மை, ஆகிய எந்தக் காரணத்தைக் கொண்டும் பார பட்சம் காட்டக் கூடாது, அன்பு, ஆதரவு, வழிகாட்டும் தன்மை, ஆகியவற்றை ஆசிரியர் பின்பற்றினுல், ஒழுங்கு தவறும் பிரச்சினைகள் ஆதாரப்பள்ளிகளில் சாதாரணமாக எழா. மேற்சொன்ன இலட்சிய முறையிலும் பிள்ளைகள் ஒழுங்கில் தவருமலிருக்க முடியாது. ஒருவரை ஒருவர் அடித்துக் கொள்ளுதல், கோள் சொல்லுதல், எளிய விதிகளை மீறுதல், பள்ளிப் பொருள்களைச் சேதப் படுத்து தல், எளியோரைக் கேலி செய்தல், அச்சுறுத்தல், பிறரைப் பார்த்து எழுதுதல் ஆகிய நடத்தைக் கோளாறு கள் பள்ளியில் சர்வ சாதாரணமானவை ஆகும். ஆதாரப் பள்ளிகளில் குறிப்பாக வேலையைச் சரிவரச் செய்யாதிருத் தல், சாதனைகளைப் பற்றிப் பொய் சொல்லுதல், ஏமாற்று தல் முதலியவை சாதாரண ஒழுங்குப் பிரசினைகள் ஆகும். இவற்றை யெல்லாம் ஆசிரியர் நல்ல அன்பினுலும் ஆதா வினுலும் திருத்துவது எளிதாகும்.

6

# புதுக் கல்வியின் சமூகக் குறிக்கோள்

[புதுக் கல்வியின் சமூகக் குறிக்கோள். உண்மை, இன்னு செய்யாமை, ஆகிய இரண்டிலும் அடங்கியுள்ள நன்னடக்கைக் குறிக்கோளும், பொருளாதாரக் குறிக்கோளும்; புதுக்கல்வியில் அடங்கியுள்ள குடிமையும், ஜன நாயக தத்துவமும். புதுக் கல்வியில் ஆண்களும், பெண்களும் சேர்ந்து கல்வி பயிலுவதன் தத்துவம், இந்தியாவிலும், பிறநாடுகளிலும், ஆண்களும் பெண்களும் சேர்ந்து கூடிப் படிப்பதின் தத்துவங்களும், நடை முறைகளும்.]

**சமூகக் குறிக்கோள் :**

புதுக் கல்வியின் குறிக்கோள் தனிப்பட்டவரின் சீரான முழு வளர்ச்சிக்கு வகை செய்வது மட்டு மன்று. சீரான முழுவளர்ச்சியுடைய ஒரு புதுச் சமுதாயத்தினையும் படைப்பது, அதன் இறுதிக் குறிக்கோள் (Ultimate aim) ஆகும். உடனடியாக அடையவேண்டிய குறிக்கோள் முன்னதாகும். இரண்டாவதோ, காலப்போக்கில் அடைய வேண்டியதுஆகும். காந்திஜியின் விளக்கப்படி, அத்தகைய புதுச் சமுதாயத்தில் பொருள் உடையார்க்கும் பொருள் இல்லார்க்கும் இயற்கைக்கு முரணன வேறுபாடு யாதொன்று மிராது. ஒவ்வொருவருக்கும் அங்கு நல்வாழ்வு வாழப் போதிய ஊதியம் கிடைக்கும். ஒவ்வொருவரும் விடுதலையுடன் வாழ உரிமை இருக்கும்.

சத்தியம், அஹிம்சை, ஆகிய அடித்தளத்தின் பேரில் அச் சமுதாயம் அமைக்கப் பட்டிருக்கும். இன வேறுபாடு, வர்க்க வேறுபாடு, இன்றி உயர்வு தாழ்வு கருதாது, அங்கு வாழ்பவர் அனைவரும் கூட்டுறவாக உழைப்பர். அங்கு எந்தவகைச் சுரண்டலு மிராது. சுறு சுறுப்பும் மகிழ்ச்சியும் அங்கு நிலவும். ஒரு சிலருக்கு மட்டும் அதிகாரம், செல்வாக்கு, சிறப்பு உரிமைகள்,

என்ற குவியல் முறையை நீக்கி, அனைத்தும் பரவல் முறையில் அமைந்திருக்கும்.

காந்திஜீயின் கருத்துப்படி, அந்தச் சமுதாயத்தினை அஹிம்சை, சத்தியம் என்ற அடிப்படையில் படைக்க ஒரே ஒரு வழிதான் உண்டு. பள்ளி வேலைகளின் வழியாகவே தான் அந்தப் புதிய சமுதாயம் உண்டாகவேண்டும். அது ஏற்பட 2, 3 தலை முறைக் காலம் ஆகலாம். பயனுள்ள ஓர் ஆதாரத்தொழில் வாயிலாகவே பிள்ளைகளுக்குக் கல்வி கற்பிக்க வேண்டும். பாட விஷயங்களைத் தொழிலோடு இயைபுபடுத்திக் கற்பிக்கவேண்டும். ஓரளவு தன்னிறைவுக் குறிக்கோளுடன் அத்தொழில் நடைபெறவேண்டும். அதுவே புரட்சிகரமான புதுச் சமுதாயத்தினை ஏற்படுத்த அமைதியான முன்னணி ஆகும்.

## புதுச் சமுதாயப் படைப்பு ஏன் ?

சமூகம் என்பது தேங்கி நிற்கும் நீர் போன்ற தன்மையுடையது அன்று. அது மாறும் இயல்புடையது. சமூகத்தின் உறுப்பினர்கள் யார்? **மனிதர்கள் :** மனிதர்களோ உயிருடையவர்கள். ஆற்றலுடையவர்கள்; பகுத்தறிவு உள்ளவர்கள்; ஆசைகளும், அபிலாஷைகளும் உள்ளவர்கள். வானுலகை மண்ணுலகில் கொண்டு வர விரும்புவர்கள்; விஞ்ஞான வாயிலாக இயற்கையின் இரகசியங்களை அறிந்து, தாம் பிறந்து வளர்ந்த சமூகத்திற்கு புது உருக் கொடுத்து, புது ஆசைகள் ஊட்டி, அதனை வளர்த்து மேலும் மேலும் உயர்த்தப் பாடுபடுபவர்கள். எனவே, மனிதர்களை உறுப்பினராகக் கொண்ட சமூகம் மாறுமலிருக்க முடியாது.

வேத காலத்திலிருந்து வந்த மனித சமூகத்திற்கும் தற்காலத்திலுள்ள மனித சமூகத்திற்கும் எவ்வளவோ வேறுபாடு. இல்லற வாழ்வில், சமூக வாழ்வில், சமய வாழ்வில், அரசியல் வாழ்வில் பொருளாதார வாழ்வில்— ஒவ்வொன்றிலும், பெருத்த மாறுபாடுகளைக் காண்கிறோம்.

அதாவது சமூகம் எவ்வளவோ மாறி அமைந்து விட்டது. சில மாறுதல்கள் விரைவில் ஏற்பட்டு விட்டன. அதே சமயத்தில் சில விரும்பத்தக்க மாறுதல்கள் இன்னும் சமுதாயத்தில் ஏற்படவில்லை. தீண்டாமை, பெண்கள் பற்றிய சமூக விதிகள் போன்றவற்றை இதற்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம்.

நம் நாடு சம்பந்தப்பட்டமட்டில் சமூகமாறுதல் வேறு காரணங்களினாலும் நிகழ்ந்தது. அடுத்தடுத்த பல்வேறு படையெடுப்புக்களினால் சமூகம் பாதிக்கப்பட்டது. முஸ்லிம் சமயம், கிருஸ்தவ சமுதாயம் ஆகியவற்றால் வேறு மோதல்கள் ஏற்பட்டன. கடைசியாக வெள்ளைக்கார அரசியலால், பொருளாதார மோதல் ஏற்பட்டது. 150 ஆண்டுகளாக அவர்கள் நம் நாட்டை ஆண்டனர். முதலில் வியாபாரிகளாக வந்தவர்கள் இந்நாட்டைப் பிடித்து ஆளத்தொடங்கினர். கல்வி, பொருளாதாரம், நீதி, அரசியல், ஆகியவற்றில் அவர்கள் எண்ணிறந்த மாறுதல்களைப் புகுத்தினர். நமது சமூகம் முதலில் அடிமையாயிற்று. வெள்ளையரின் பண்பாட்டைப் பின் பற்றும் புதுமோகம் நம்மிடம் பிறந்தது. நமது பழம்பெரும் சமூகத்தின் அடிப்படைத் தத்துவங்கள் மறக்கப்பட்டன. வெள்ளையர்களின் வியாபார மனப்பான்மை சமூகத்தில் புகுந்து பாழ் செய்துவிட்டது. சமூகத்தில் எங்கு பார்த்தாலும் சுரண்டல். (பொருளாதார, அரசியல், சமூகச் சுரண்டல்கள்). சமூக ஏணியில் உச்சிப்படிக்கு ஏற, லஞ்சமும், சூதும் ஏமாற்று வித்தையும் குறுக்கு வழிகளாயின. நம் சமூகம் சீரழிந்தது; நிலை குலைந்தது; நிரந்தர மதிப்புடைய பண்புகளையெல்லாம் இழந்தது.

அந்நிலையை மாற்றவே காந்திஜி நிர்மாணத்திட்டத்தைக் கண்டு பிடித்தார். அவற்றுள் தலை சிறந்தது புதுக் கல்வித்திட்டம் ஆகும். நிர்மாணத் திட்டங்களின் வாயிலாக மேற்கூறிய புதுச்சமுதாயம் ஒன்றினைப்படைக்க விழைந்தார். வழிகள் வகுத்தார். கேடுற்ற, பிணிபிடித்த தற்காலச் சமுதாயத்தை மாற்ற முனைந்தார்.

**சமூக நூல்படி :**

(1) அனைவரும் சமம்.

(2) அனைவரும் உடலால் உழைக்கவேண்டும்.

(3) அனைவருக்கும், கல்வி, நீதி ஆகியவற்றில் சம அந்தஸ்து உண்டு.

(4) நற்குடிப் பண்புகளுடன் ஒவ்வொருவரும் திகழ வேண்டும்.

(5) ஒழுக்கம் முதன்மை ஆனது.

(6) அனைவருக்கும், பேச, எழுத, சுதந்திரம் உண்டு.

(7) ஒவ்வொரு சமூகத்தின் நன்மைகளைப் பெற்றதற்கு நன்றியறிதலாக ஒரு முன்னேற்றத்தைச் செய்து விட்டுப் போகவேண்டும்.

(8) அண்டை அயலானுக்கு அன்பும் பரிவும் காட்டுவதிலிருந்து உலக சகோதரத்துவத்திற்கு உழைக்க வேண்டும்.

**சத்தியம், அஹிம்சை ஆகியவற்றின் நன்னடக்கை பொருளாதாரக் குறிக்கோள் :**

முன்னரே விளக்கப்பட்டபடி சர்வோதய சமுதாயம், சத்தியம், அஹிம்சை ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்திருக்கும். காந்திஜீயின் கருத்துப்படி சத்தியம் என்ற உண்மையே கடவுள் ஆகும். எந்த நிலைமையிலும் அவர் உண்மைக்குப் புறம்பானதை அனுமதித்ததில்லை. தனிப்பட்டவர் வாழ்க்கையில் மட்டுமே சத்தியம் வேண்டுமேயொழிய, பொது வாழ்வில் அதை முழுதிலும் பின்பற்ற வேண்டியதில்லை என்பது பெரும் பான்மையோரின் கருத்து. ஆனால், காந்தி அதற்கிடம் கொடுக்கவில்லை. சமூக வாழ்விலும் சரி, வாணிபத்துறையிலும் சரி, அரசியல் துறையிலும் சரி, அவர் ஒவ்வொரு சிறு உறுப்பிலும் உண்மையிலிருந்து தவறக்கூடாது என ஓதியதுமட்டு

மன்றி வாழ்க்கையில் கடைசிவரை கைப்பிடித்துக் காட்டினூர். சட்டத்திற்கு எதிராக அவர் போர் தொடுத்த போதெல்லாம் அவர் தன் மனத்தெழுந்த கருத்துக்களை உண்மையை ஒளிக்காது, சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்குத் தெரிவித்து வந்தார். அவரது இளமைப்பிராயத்தில் அரிச்சந்திரன் நாடகத்தை அவர் பல தடவைகள் பார்த்துள்ளார். அரிச்சந்திரனையே தன் வாழ்க்கையில் பின்பற்றினூர்.

**சத்தியமும் நன்னெறியும்:**

புதுக் கல்வி படைக்கவிருக்கும் புதுச் சமுதாயத்தில் பொய்யே இருத்தல் கூடாது. எனவே, அதற்காகப் பாடுபடும் ஆதாரப் பள்ளிகளில், உண்மைக்கு உயர்ந்த இடம் கொடுக்கவேண்டும் என்பதே அதன் கருத்தாகும். "இனி நமக்குள கதியிழக்கினும் கட்டுரை (உண்மை) இழுக்க மாட்டோம்" என்ற உறுதிப்பாட்டை வளர்க்கவேண்டும்.

நூற்ற நூல் சுற்றுக்களை எண்ணிச் சொல்லுவது முதல் சமூகவேலைகளைச் சரிவர முடிக்கும்வரை, ஒவ்வொரு செயலிலும் மாணவ மாணவிகள் உண்மையை மறைத்துப் பொய் சொல்லக்கூடும். தண்டனைக்கு அஞ்சியே அவ்வாறு அவர்கள் பொய் சொல்ல வேண்டியிருக்கிறது. ஆகவே, வகுப்பில் ஆசிரியர் அவர்களை அன்புடன் நடத்த வேண்டும். சுதந்திரச் சூழ்நிலையில் வளரவிடவேண்டும். உண்மைக்குப் பள்ளியிலேயே ஏற்றங்கொடுத்தால் பின்னர் உருவாகவிருக்கும் சர்வோதய சமுதாயத்திலும் அது எளிதில் நிலைத்துப் பரவ முடியும். உண்மை வளர்வதுடன் அச்சமின்மையும் வளரும்.

**அஹிம்சையும் நன்னெறியும்:**

ராய்சந்த் பாய் என்பவரிடமிருந்து காந்திஜி முதன் முதல், அஹிம்சைத் தத்துவத்தைப்பற்றி அறிந்தார். அஹிம்சை அல்லது இன்னுசெய்யாமை என்ற சொற்கள், எதிர் மறையாய் அமைந்துள்ளன. உடன்பாடாக அதன்

பொருளை ஆராயுங்கால், அஹிம்சை என்பது பேரன்பைக் குறிக்கும். பகைவனுக்கும் அருளும் அன்பினைக்குறிக்கும். செயலில் உண்மையையும், அஞ்சாமையையும் குறிப்பதாகும்.

**கல்வியும், அஹிம்சையும் :**

பள்ளிச் சமூகம் அன்பு மயமாய் இருக்கவேண்டும். அதைச் சுற்றிலும் அன்பு நறுமணம் வீசவேண்டும். ஆண்களும், பெண்களும், சகோதர சகோதரிகள்போல் பழக வேண்டும். சுதந்திரத்துடன்—ஆனால் தமது உள்ளத்திலிருந்து எழுந்த சுய—கட்டுபாடுடன்—வாழவேண்டும். ஆசிரியரை மாணவ மாணவிகள் தந்தைபோல் கருத வேண்டும். ஆசிரியரும், தாயுள்ளம் கொண்டு அவர்களைப் பேண வேண்டும்.

அஹிம்சையும் பொருளாதாரமும் :

அஹிம்சை சுரண்டலின்மையையும் குறிக்கும். உடலால் உழைக்காமல், பிறர் ஊதியத்தில் ஒட்டுண்ணி போல் உண்டு வாழ்வதைச் சுரண்டல் என்கிறோம். சுரண்டல், சமூகம் பொருளாதாரம், அரசியல், ஆகிய மூன்று துறைகளிலும் எழக்கூடும். எனவே, பள்ளியிலும் மேற்சொன்ன மூன்று சுரண்டல்களுக்கும் இடம்தரக் கூடாது. அனைவரும் ஏதாவது உழைப்பு வேலையில் ஈடுபடவேண்டும். பொருள்களை உற்பத்தி செய்யவேண்டும். இவ்வாறு செய்தால் பொருளாதாரச் சுரண்டலுக்கு இடமிராது. தவிர புதுச்சமுதாயத்தில் எல்லாம் பரவல் முறையில் அமைக்கப்படும். குவியல் முறை ஒழிக்கப்படும். சமூகத்தில் ஏற்றத்தாழ்விராது. எல்லா வேலைகளும் சமமானதாகக் கருதப்படும்.

**புதுக்கல்வியில் உள்ளடங்கியுள்ள குடிமை :**

புதிய இந்தியாவில், சமூக, பொருளாதார, அரசியல் வாழ்வில் ஜனநாயக முறை நிலைத்து விட்டது. ஆகையினால், புதுச்சர்வோதயச் சமுதாயத்தினைப் படைக்கத்

திட்டமிடும் ஆதாரக் கல்வி முறையிலும், ஒவ்வொரு மாணவன் தன் உரிமைகளையும் கடமைகளையும் அறிந்து கொள்ளப் பயிற்றப் படுகிருன்.

ஒவ்வொருவரும் புதிய சமுதாயத்தில் தமது உரிமைகளை யும், கடமைகளையும் அறிந்து, சீரான முறையில் செயலாற்ற புதிய கல்வி பயிற்சி அளிக்கும். தவிர, மதிநுட்பமுள்ள ஒவ்வொரு நற்குடியும், சமூகத்தில் தான் பெற்றுவரும் பல் வேறு நன்மைகளுக்கு ஏதாவதொரு வகையில், நன்றிகாட் டும் நற்றெண்டு செய்யவேண்டும். பிறர்மீது அண்டி வாழும் ஒட்டுண்ணிகளாக வாழக்கூடாது. பொருள் உற் பத்தி வேலைகளில் ஈடுபட்டுச் சமூகத்தின் வளத்தைப் பெருக்கவேண்டும். அனைவரும் உழைப்பாளிகளாக ஆக வேண்டும். கக்கூசு துப்புரவு செய்யும் வேலையையும் இழிவாகக் கருதாமல் உபயோகமுள்ள தொண்டாகக் கருத வேண்டும். எதிர்பார்க்கும் இந்த நற்பண்புகள் எல்லாம் மனப்பான்மைகளாக மாறும் வண்ணம் அருகிலுள்ள ஊர் களிலும், சேரிகளிலும் சமூக சேவை செய்யவேண்டும். சுருங்கச் சொல்லில், ஒவ்வொரு நற்குடியும், தன்மதிப்பு உள்ளவராயும், திறமைவாய்ந்தவராயும், தற்காப்புள்ளவ ராயும், தன் முன்னேற்றத்தில் கருத்துள்ளவராயும், மேலும் சமூக முன்னேற்றத்தில் அக்கறை உள்ளவராயும் ஆக வேண்டும்,

மேற்கூறியவாறு செய்வதால் ஓர் அமைதியான சமூகப் புரட்சிக்கு, ஆதாரக்கல்வி முன்னணியாக அமையும்.

**புதுக் கல்வியும் குடியாட்சியும் :**

மக்கள் ஆட்சியில் ஒழுங்கின் அவசியத்தையும், கட் டுப்பாட்டின் அவசியத்தையும், ஒவ்வோர் உறுப்பினரும் அறியவேண்டும். தம்மைத் தாமே ஆண்டுகொள்ளும் கலையிலும் பயிற்சி பெற்றிருக்க வேண்டும். மக்கள் ஆட்சி நன்கு வளர்ந்து பயன்தர, ஒவ்வொருவரிடமும் பரந்த மனப்பான்மை, சகிப்புத்தன்மை, அண்மையில் உள்ளவர் களிடம் அன்பு ஆகியவை வளரவேண்டும்.

மக்கள் ஆட்சியில் ஒவ்வொருவரும் சுதந்திரமாகவும் சமத்துவ மனப்பான்மையுடனும் வாழ உரிமை உண்டு. எனவே, ஆதாரப் பள்ளியில் அப்பண்புகளை வளர்க்க ஆவன செய்யவேண்டும்.

மக்கள் ஆட்சி என்பது என்ன? மக்களின் பிரதிநிதிகளே, மக்கள் நன்மைக்காக மக்களை ஆளுவது என்பது அதன் பொருள். எனவே, சமூகத்தில் திறமை, ஒழுக்கம், தொண்டு—மனப்பான்மை உள்ள எவரும், குடியரசுத் தலைவராகவும், நாட்டை ஆளும் அமைச்சராகவும் ஆக முடியும். ஒவ்வொரு குடியும் உண்மைக் கல்வி பெற்றவராய்த் திகழவேண்டும். நன்கு கற்றறிந்தவராயும், பொறுப்பேற்று வேலைகளை நடத்த வல்லவராயும், ஒழுக்கம் உடையவராயும் இருப்பவர்களையே தலைமைப் பதவிகளுக்குத் தேர்ந்தெடுக்கக் கற்கவேண்டும்.

ஆதாரப் பள்ளியில் அனுபவக் குடியாட்சி கற்பிக்கப் படுகிறது. மாணவ மாணவிகள் தம்மை ஒரு சமூகமாக அமைத்துக் கொள்கின்றனர். தேவையான அமைச்சர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்கின்றனர். அமைச்சர்களின் அலுவல்களையும், உறுப்பினர்களின் அலுவல்களையும் வரையறுத்துக் கொள்கின்றனர். தம்மைத் தாமே ஆண்டுகொள்ளப் பயிற்சி பெறுகின்றனர். பொதுச்சபை கூடி ஆலோசிக்கின்றனர். அமைச்சர்களின் அறிக்கைகளின்மீது விவாதம் நடத்துகிறார்கள். சமூக வேலைகளில் தவறுகிறவர்களைத் தண்டிக்க, **பாலர் நீதிமன்றம்** நிறுவுகிறார்கள். இவ்வாறு மாணவர்கள் குடியாட்சி முறைகளைப் பயில்கின்றனர்.

## ஆண்களும் பெண்களும் சேர்ந்து பயில்வதுபற்றி :

ஆதாரக் கல்வித் திட்டத்தில் ஆண்களும் பெண்களும் சேர்ந்து படிப்பது (அதாவது கூட்டுக் கல்வி)பற்றி என்ன கூறப்பட்டுள்ளது? இரு பாலர்களும் சேர்ந்து படிக்க, கூடி வேலைகள் செய்ய, கூடி வாழ அனுமதிக்கப்

படுவார்களா ? இம் மூன்று நிபந்தனைகளையும் நடைமுறையில் நிறைவேற்ற முடியாது போனால், எந்த அளவுக்குக் கூட்டுக் கல்வி அனுமதிக்கப்படுகிறது அல்லது கூட்டுக்கல்விக்கு அத்திட்டத்தில் இடம் இல்லையா ?-இவ்வினாக்களுக்கு விடை காண, காந்திஜியின் கருத்துக்கள் தவிர வேறு அதிகாரரூபமான விடை காணப்படவில்லை. ஏனென்றால் ஆதாரக் கல்விக்கு அடித்தளமான ஸாகிர்ஹுஸெயின் கமிட்டியின் அறிக்கையில் இதைப்பற்றி யாதொரு திட்டவட்டமான முடிவும் கூறப்படவில்லை. காந்திஜியே அதைப்பற்றி ஓரிடத்தில் கூறுகிறார் :—

ஸாகிர் ஹுஸெயின் கமிட்டி அறிக்கையில், கூட்டுக் கல்வியைக் கட்டாயமாய் அமுல் நடத்தவேண்டும் என்று கூறப்படவில்லை. எங்கெங்கெல்லாம் பெண்களுக்கென ஒரு தனிப் பள்ளிக்குத் தேவை தெரிவிக்கப்படுகிறதோ அங்கெல்லாம் அந்தந்த ராஜ்ய அரசு தனிப் பள்ளிகளை அமைத்து உதவவேண்டும். கூட்டுக் கல்வி காலப்போக்கில் முடிவு செய்ய வேண்டுவதொன்றாகும்.

ஒவ்வொரு கல்வி நிலையிலும் கூட்டுக் கல்வியை எந்த அளவிற்கு நடைமுறையில் கையாளலாம் எனப் பார்ப்போம். பூர்வ ஆதாரக் கல்வி, ஆதாரக் கல்வி ஆகிய இரு நிலைகளிலும் ஆண்களும் பெண்களும் சேர்ந்தே படிக்கிறார்கள். சேர்ந்தே படிக்கவேண்டும் என்பது அரசினர் சட்டம். சென்னை மாநில அரசினர் இவ்விரு நிலைகளிலும் அதாவது, எட்டாவது கிரேடு முடிய பெண்களுக்குத் தனிப் பள்ளிகளை அனுமதிப்பதில்லை. அங்கீகாரம் அளிப்பதுமில்லை. 1951-ஆம் ஆண்டிலிருந்தே இது அமுலிலிருந்துவருகிறது.

**கல்லூரி நிலைகளில் :**

ஆண்களும் பெண்களும் சேர்ந்து பயிலும் கல்லூரிகளும் நம் இராஜ்ஜியத்தில் உள்ளன. பெண்களுக்குத் தனிக் கல்லூரிகளும் உள்ளன. கல்லூரிகளில் கூட்டாகப்

படிக்கும் பெண்களும் ஆண்களும் பொறுப்பறிந்து நடந்து கொள்ளக் கூடியவர்கள். போதிய பக்குவம் அடைந்த வர்கள். அதனுல் விரும்பத்தகாத நடத்தைப் பிரச்சினே ஒன்றும் எழாது. ஆகையால் இரு பாலரும் சேர்ந்து பயில அனுமதிக்கப்படுகின்றனர். அங்கும் பெண்கள் தனி விடுதி களில் வாழ்கின்றனர். பேராசிரியைகள் உணவு விடுதிக் காப்பாளராக இருந்து பெண்களின் நலன்களேயும் வசதி களேயும் கவனித்துக் கொள்கின்றனர்.

### உயர் ஆதாரக் கல்வி நிலே (15—18)

இடையிலுள்ள குமரப் பருவத்தினர் கூடிப் படிப் பதைப் பற்றிதான் சிக்கல் உள்ளது. விவாதம் எழுகிறது. கூட்டுக் கல்வி இந்தியாவில் வெற்றி பெறுமா? அல்லது தோல்வியுறுமா? எனக் கூற முடியாது என்று காந்திஜியே கூறியுள்ளார். அவரே ஒன்றிரண்டு சோதனேகள் நடத்தி ஞர். அவர், இடையில் மறைப்பு ஒன்றும் இல்லாமலேயே தன்னிடம் கூட்டுக் கல்வி பயின்ற ஆண் பிள்ளேகளேயும் பெண் பிள்ளேகளேயும் ஒரே தாழ்வாரத்தில் படுத்துத் துயிலச் செய்வது வழக்கம். திருமதி கஸ்தூரிபாயும் காந்திஜியும் அவர்களுடன் தாழ்வாரத்திலேயே படுத்து உறங்கினர் கள். விரும்பத்தகாத விளேவுகள் ஏற்பட்டதன் காரணமாக அந்தச் சோதனே கைவிடப்பட்டது. ஆனல் கூட்டுக் கல்வியை அவரே நடத்திவந்த வேறு சில இடங்களில் அது நல்ல முறையில் நடந்துவருகிறது. எனவே, கூட்டுக் கல்விபற்றி ஒரு முடிவிற்கு அவரால் வர முடிய வில்லே. கூட்டுக் கல்விக்கான நல்ல மனப்பான்மைகள் குடும்ப வாழ்க்கையிலிருந்தே வளர்ந்து உருவாகி வலிமை பெறவேண்டும். குடும்பத்தில் சகோதர, சகோதரிகள் இன்னும் சிறந்த முறையில் தாராளமாயும் இயற்கையாயும் நடந்துகொள்ளப் பழகவேண்டும் என்று அவர் ஓர் ஆலோசனே கூறியுள்ளார்.

கூட்டுக் கல்வி, சிக்கல் மிகுந்த ஒரு பிரச்சினேயா யுள்ளது. அதை சமூக நோக்கு, மன நூல் நோக்கு, பொரு

ஞாதார நோக்கு, கல்வி நோக்கு ஆகிய பல்வேறு நோக்கி லிருந்து ஆராயவேண்டும்.

**சமூக நோக்கு :**

நம் நாட்டில் சமூக வாழ்க்கையிலுள்ள மரபு, கூட்டுக் கல்விக்கு ஏற்றதாக இல்லை. காரணம் ஒரு நீண்ட துன்பம் நிறைந்த வரலாறு ஆகும். பல நூற்றுண்டுகளாகப் பெண்களுக்குச் சம உரிமை இல்லாமலிருந்து வந்திருக்கிறது. சமூக வாழ்வில் அவர்களுக்கு உரித்தான இடம் திட்டமிட்டு மறுக்கப்பட்டு வந்திருக்கிறது. பெண்களின் உடல், உள்ள ஆன்மப் பண்புகள் சீராய் வளர வழிவகை செய்யப்படவில்லை. ஆணுக்கொரு நீதி, பெண்ணுக்கு ஒரு நீதி நிலவி வந்துள்ளது. அவர்கள் தாழ்வுச் சிக்கலுடன் வாழ்வு நடத்தி வந்துள்ளார்கள். எனினும் சரிவரப் பயிற்றப்பட்டால் அவர்களும் எல்லாத் துறைகளிலும் ஆண்களுக்குச் சரி நிகர் சமானமாய் வளரமுடியும்; தொண்டாற்ற முடியும் என காந்திஜி கண்டார். அவரது சரித்திரப் புகழ் பெற்ற சத்தியாகிரஹப் போர்களில் இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் பெண்கள் பெரும் பங்கு கொண்டு சிறந்த தொண்டாற்றினர்கள். ஆகையால் "பெண்கள் அபலைகள்; அவர்களது இடம் அடுக்களையே" என்ற பழங் காலக் கருத்து காலப்போக்கில் மாறவேண்டும். நாளை நாடாளப்போகும் நற்குடியான இன்றையச் சிறுவர்களின் உடல், உள்ள, ஆன்மப் பண்புகளைச் சீராக மலரவைக்கும் பொறுப்பு, தொட்டிலாட்டும் பெண்களின் கைகளில்தான் உள்ளது. ஆகையால், நம் சமூகம் செழித்துச் சீராய் முன்னேற, அவர்கள் சிறந்த தாய்களாகவும், சிறந்த மனைவிகளாகவும் வளர்ச்சி பெறவேண்டும். அத்தகைய காலத்தில் கூட்டுக் கல்வி இயற்கையாய் எழும். எளிதாயிருக்கும். அதனல் யாதொரு பிரச்சினையும் எழாது.

சமூக நோக்கத்தின்படி வாழ்க்கையின் ஒரு கண்ணுடி போன்றது பள்ளி. அது யதார்த்த வாழ்க்கையைப் பிரதி பலிக்க வேண்டும். வாழ்க்கையில் ஆணும் பெண்ணும்

சம அளவில் உள்ளார்கள்; அதுபோல் பள்ளியிலும் ஆண் களும் பெண்களும் சேர்ந்து படிக்கவேண்டும். ஆண்கள் பெண்களைப் பற்றியும், பெண்கள் ஆண்களைப் பற்றியும் சரிவரப் புரிந்துகொள்ளக் கூட்டுக் கல்வி சிறந்த சாதனம். தவிர, பெண்கள் ஆண்களிடத்திலிருந்து உடல் வலி, விஞ்ஞான மனப்பான்மை, துணிச்சல் ஆகியவற்றைக் கற்றுக் கொள்ளலாம். ஆண்கள் பெண்களிடமிருந்து அன்பு, இரக்கம், தொண்டு, சகிப்பு, பொறுமை ஆகியவற் றைக் கற்கலாம்.

**மனநூல் நோக்கு :**

குமரப் பருவத்தில் ஆண்களும் பெண்களும் வெவ் வேறு வகைப்பட்ட உடல் வளர்ச்சி உள்ளவர்கள். இரு பாலரின் வளர்ச்சியின் வேகமும் வேறுபட்டதாகும். அவற் றின் விளைவாய் அவர்களது வளர்ச்சியில் சில வேறுபாடு கள் காணப்படுகின்றன. எனவே இரு பாலருக்கும் தனித் தனிக் கல்வி தேவை.

**கல்வி நோக்கு :**

இல்ல வாழ்விலும் குடும்ப வாழ்விலும் ஆண்களின் பங்கு வேறு; பெண்களின் பங்கு வேறு. குழந்தைகளைப் பெற்று வளர்க்கும் பெரும் பொறுப்பை இயற்கையன்னை பெண்களிடம் ஒப்படைத்திருக்கிறாள். எனவே அவரவர் களின் பங்குக் கேற்ற விஷயங்களைப் பள்ளியில் கற்பிக்க வேண்டியிருக்கிறது. இல்லப் பராமரிப்பு, முதல் உதவி, குழந்தை வளர்ப்பு, அனுபவ உணவு நூல், நூல் வேலை, தையல் வேலை ஆகியவற்றை பெண்களுக்குத் தனியாகக் கற்பிக்க வேண்டியிருக்கிறது.

**பொருளாதார நோக்கு :**

பெண்களுக்குத் தனிக் கல்வி அளிக்கப் பலத் தனிப் பள்ளிகள் திறக்கவேண்டும். தனி ஆசிரியைகளை நியமிக்க வேண்டும். தனிப்பட்ட தளவாடங்கள் தேவைப்படும். அதனால் பொருள் செலவு மிகுதிப்படும்.

**முடிவு :**

'கூட்டுக் கல்வி சிறந்தது' எனச் சொல்வதற்கு எத்தனை காரணங்கள் உள்ளனவோ, அத்தனை காரணங்கள் 'அது தீயது' என நிருபிக்கவும் உள்ளன. சீரிய முறையில் கூட்டுக் கல்விபற்றிய தொடர்ந்த சோதனைகள் நடத்தப் படவில்லை. அதனால் அனுபவ ரீதியிலுள்ள முடிவுகள் நமக்குக் கிடையா. எனவே அவரவர்கள் ஆங்காங்குள்ள வசதிகளுக்கேற்ப கூட்டுக் கல்வியைப்பற்றிச் சோதனை செய்துகொள்ளலாம். எப்படியும் கூட்டுக் கல்வி கடிதில் வந்தாக வேண்டும். ஆனால் நாம் அதை வலுக்கட்டாய மாக்கக்கூடாது.

இந்தியாவில் கூட்டுக் கல்விபற்றிய சில சோதனை களை இப்போது கவனிப்போம்.

**சாந்திநிகேதனம் :**

இங்கு கூட்டுக் கல்வி வெற்றிகரமாக நடந்துவரு கிறது. இங்கு பயிலுபவர்கள் கலாசாலை நிலையைச் சேர்ந்த வர்களாதலால் பெரும் பிரச்சினைகள் எழுவதில்லை. இந் தியாவில் எல்லாப் பகுதிகளிலிருந்தும், மாணவ மாணவி யர்கள் இங்குக் கூடிப்படிப்பது தனியாகக் குறிக்கற்பாலது. இந்த நிறுவனத்தை நமது மத்திய அரசாங்கம் நடத்தி வருகிறது. இதன் தலைவர் பிரதமர் நேரு ஆவர்.

படிக்கும்போதும், வேலைகள் செய்யும்போதும் இரு பாலரும் கூடிப் பயிலுகின்றனர். ஆனால் தனித்தனி விடுதிகளில் வாழுகின்றனர். ஆசிரியர்கள் குழுவில் பெண் பாலர் உள்ளனர்.

**ஸேவாகிராமம் :**

இங்கு எல்லா நிலைகளிலும் கூட்டுக் கல்வி வெற்றி கரமாக நடந்துவருகிறது. (அதாவது உயர் ஆதாரக் கல்வி நிலையிலும்கூட) இங்கு இந்தியாவிலுள்ள எல்லாப் பகுதிகளிலிருந்தும் மாணவ மாணவிகள் வந்து கூடிப்

பயில்கின்றனர். ஆசிரியர்குழுவில் பலபெண்பாலர் உள்ள னர். பெண்கள் தனி விடுதியில் வாழ்கின்றனர். பெண்க ளோடு ஆண்கள் பழகும்விஷயத்தில் சில விதிகள் இயற்றி யுள்ளனர். அவற்றுள் முக்கியமானவை :—முக்கிய காரண மின்றி, முன் அனுமதியின்றி பெண்கள் விடுதிக்கு ஆண் கள் செல்லக்கூடாது.

குடும்ப வேலைகளில் கூடி வேலை செய்யலாம். ஆனால் மாலை வழிபாட்டிற்குப் பின், ஆணும் பெண்ணும் சேர்ந்து உலாவிவர அனுமதிக்கப்பட மாட்டார்கள்.

## சென்னைக் கல்லூரிகள் :

அரசினரால் நடத்திவரப்பெறும் கல்லூரிகள் ஒன் றிரண்டில், கூட்டுக் கல்வி அமுலில் இருந்துவருகிறது. ஆசிரியர்குழுவில் பெண்பாலர் வேலைசெய்து வருகிறார்கள். பெண்களுக்கென தனி விடுதி உள்ளது. அதற்குப் பெண் கள் காப்பாளராய் இருந்துவருகின்றனர். தனி விடுதி இல்லாத கல்லூரிகளில், பெண்கள் தத்தம் சொந்த இல் லத்திற்கு ஏகிவிடுகின்றனர். கூட்டுக் கல்லூரிகளில் ஓய்வு நேரத்தில் தனியாகப் படிப்பதற்கும், தங்குவதற்கும் பிற சுகாதார வசதிகளுக்கும் தனி ஏற்பாடுகள் அமைக்கப் பட்டுள்ளன.

## அரசினர் ஆசிரியப் பயிற்சிப் பள்ளி :

சென்னை இராஜ்ஜியத்தில், தென் ஆற்காடு மாவட் டத்தில், கடலூர் நகரில், அரசினது ஆட்சியின்கீழ் இரு ஆசிரியப் பயிற்சிப் பள்ளிகள் உள்ளன. (1) பெண்களுக்கு மட்டும் ஆனது. அது திருப்பாதிரிப்புலியூரில் உள்ளது. மஞ்சக்குப்பத்தில் இருக்கும் மற்றொன்றில் ஆண்களும், பெண்களும் சேர்ந்து பயிலுகின்றனர். இங்கு பெண்களுக் கென தனி விடுதியும் உள்ளது. அவ்விடுதியில் ஒரு பெண்பாலரே காப்பாளராவர். ராஜ்ஜியத்தில் இப்பள்ளி ஒன்றில்மட்டும், ஆசிரியப் பயிற்சி நிலையில் கூட்டுக் கல்விச் சோதனை நடத்திவருகிறார்கள். இது 7, 8 ஆண்டு களாக நடந்துவருகிறது.

**கூட்டுக் கல்வி வெற்றி பெற :**

1. பெண்களுக்குத் தனி வசதிகள் தேவை. தனி விடுதி தேவை.

2. பெண்களுக்குத் தனிப் பெண்காப்பாளர் தேவை.

3. ஆசிரியர் குழுவில் பெண்பாலர் இருத்தல் வேண்டும்.

4. ஆசிரியர்கள் உயர்ந்த ஒழுக்கம் படைத்தவராய் இருத்தல் வேண்டும்.

5. சிறந்த, தொடர்ந்த மேற்பார்வை அவசியம்.

**பிற நாடுகளில் கூட்டுக் கல்வி :**

நம் நாட்டினைப் போலவே பிற நாடுகளிலும் கூட்டுக் கல்விபற்றிய அறுதியிட்ட முடிவு இன்னும் ஏற்படவில்லை. அங்கும் அது ஒரு சோதனை நிலையில்தான் உள்ளது எனக் கூறலாம். ரோமன் கத்தோலிக்கர்களும், முஸ்லீம் இனத்தினரும் ஆண்களுக்கும், பெண்களுக்கும் தனித் தனிப் பள்ளிகளையே அமைத்துக்கொள்கிறார்கள் என்பது குறிக்கற்பாலது.

கூட்டுக் கல்விக்கு, அங்கு கொள்ளப்படும் விளக்கத்தை நன்கு தெரிந்துகொள்வது அவசியம். பொதுவாக, ஆண்களும் பெண்களும் சேர்ந்து ஒரு வகுப்பில் கல்வி பயில்வதுடன், பள்ளியோடு இணைந்த சமூகத் தொண்டுகளில் ஈடுபடுவதைக் கூட்டுக் கல்வி என்று அங்கு கொள்கின்றார்கள். எனினும், குறிப்பாக எந்தெந்த நிறுவனங்களில் பெண்கள் அவற்றோடு இணைந்த விடுதிகளில் தங்கி வாழ்கின்றார்களோ அந்த நிறுவனங்கள்மட்டுமே உண்மையான கூட்டுக் கல்வி நிறுவனங்கள் ஆகும் எனக் கூறுவது பொருத்தமுடைத்து என்பது சில அறிஞர் கருத்து.

**கூட்டுக் கல்வியின் வரலாறு : (இங்கிலாந்து)**

19-ஆம் நூற்றாண்டிற்கு முன்னர் மிகச் சிலப் பெண்களே ஆரம்பக்கல்விநிலைக்கு அடுத்த உயர்தரப்பள்ளிகளில்

(Secondary Schools) படிக்க முன் வந்தனர். அந் நூற்றுண்டின் பிற்பகுதியில், ஏராளமான பெண்கள் அந் நிலையில் படிக்கத் தொடங்கினர். காலப்போக்கில் அவர் கள் கல்லூரி நிலையிலும் சேர்ந்து கற்கலாயினர். எனி னும், உயர்தரப்பள்ளிகளில் படிக்கவந்த பெண்பாலரின் எண்ணிக்கை மிகக் குறைந்ததாய் இருந்ததாலும், அவர் கள் நாடெங்கும் பரவி இருந்ததாலும், அவர்களுக்கெனத் தனியான பள்ளிகள் ஆங்காங்கு நிறுவப் பொருளாதார வசதி இடம் தராததாலும், நாடெங்கும் கூட்டுக்கல்வியே நடக்கவேண்டியநிலை இருந்துவந்தது. ஆயினும் ஓரிரண்டு இடங்களில் பெண்பாலருக்கெனத் தனியாகப் பள்ளிகள் நிறுவப்பட்டன. ஒரு சில இடங்களில் பண வசதி இருந்த போதிலும், பெண்கள் கல்லூரிகளில் போதிக்கவல்ல பேராசிரியைகள் இல்லாத குறைபாட்டினுல் ஆண்களும், பெண்களும் பொதுவாகச் சேர்ந்தே படிக்கவேண்டிய நிலை இருந்தது. எனவே, அந்நூற்றுண்டில் கூட்டுக்கல்வி நிலை யங்களே இருந்தன. ஆனுல் அந்நிலை சிறிது சிறிதாக மாறிவிட்டது. தற்காலத்தில் பெண்பாலருக்குத் தனிக் கல்லூரிகள் தாம் தொண்டாற்றி வருகின்றன.

### வட அமெரிக்கா :

தொடக்கத்திலிருந்தே வட அமெரிக்காவில் கூட்டுக் கல்வி முறையே தடையின்றி நடந்து வந்துள்ளது. அந்நாட்டிலிருந்த நிலைமைகள் தனித்தனிப் பெண் பள்ளி களை அமைக்க இடம் தராததால், ஆண்களும் பெண்களும் நாளிது வரையில் கல்லூரி நிலைவரை சேர்ந்தே படித்து வருகின்றனர். எனினும் தெற்குப் பகுதிகளிலுள்ள இராஜ்ஜியங்களில் வாழ்ந்து வரும் ரோமன் கத்தோலிக்கர் கள் மட்டும், கூட்டுக் கல்வியில் நம்பிக்கை கொள்ளாமல், தனித்தனிப் பள்ளிகளை நடத்தி வருகின்றனர்.

அங்கு முற்போக்குக் கல்விவாதிகள் என ஒரு சாரார் உள்ளனர். கூட்டுக் கல்வி அவசியமென்றும், அது நற்பய னைத் தந்துள்ளது என்றும் அவர்கள் வாதிக்கிருர்கள்.

மேலும் அவர்கள் கூறுவதாவது; "வாழ்க்கையில் ஆண்களும், பெண்களும் சேர்ந்து வதிந்து, சேர்ந்து வேலை செய்ய வேண்டியிருக்கிறது. கூட்டுக் கல்வியால் ஆண்களின் மனப்பான்மைகளையும், பழக்க வழக்கங்களையும், பெண்கள் நன்கறிய இயலுகிறது. அதே போல் பெண்களின் சீரான வாழ்க்கைக்குத் தேவையான சில நற்பண்புகளை ஆண்களிடமிருந்து கற்கக்கூடும். முக்கியமான அந்தப் பருவத்தில் இரு பாலரையும் பிரித்து வைப்பதைவிடக் கூடி வாழச்செய்து கற்பிப்பது நன்று."

**ஸோவியத் சோதனைகள் :**

ரஷியப் புரட்சிக்குமுன், உயர்தரப் பள்ளிகளில் கூட்டுக் கல்வி என்பதே கிடையாது. புரட்சிக்குப் பிறகு ரஷியாவின் உயர்தரப்பள்ளி நிறுவனங்களில் எல்லாம் கூட்டுக்கல்வி ஏற்படுத்தப்பட்டு ஆண்களும் பெண்களும் சேர்ந்து பயின்றனர். ஆனால் பின்னர் கூட்டுக்கல்வி அறவே கைவிடப்பட்டது. அந்த முடிவிற்குவந்த காரணங்களை ரஷியக் கல்வி நிபுணர்கள் கூறுகிறார்கள் :— "சமூகத்தில் ஆண்களுக்குரிய சம அந்தஸ்து பெண்களுக்கு இல்லாதவரையில் கூட்டுக்கல்வி அவசியமாயிருந்தது. ஆனால், ரஷியாவில் புரட்சிக்குப் பின்னர் ஆண்களுக்கும், பெண்களுக்கும் சம அந்தஸ்து நிலைத்துவிட்டது. தவிர, பெண்களுக்குக் கொடுக்கவேண்டிய பயிற்சிகள் சில தனியாக உள்ளன. முக்கியமான அப்பயிற்சிகளைக் கூட்டுக்கல்வி நிலையங்களில் அளிக்க முடிவதில்லை. பெண்களின் உடல் தேவைகள், மனத்தேவைகள், சமூகத் தேவைகள் ஆகியவற்றிற்குத் தனிப்பட்ட வாய்ப்புகள் அவசியமாகிவிட்டன. புதிய ஸோவியத் சமூக முறையில் பெண்களின் பங்குக்கு ஏற்பப் புதிய முறையில் கல்வி வசதிகள் அளிக்க வேண்டும். புதுநிலை எழுந்துள்ளதால் புது ரஷியாவில் கூட்டுக்கல்வி கைவிட வேண்டியதாயிற்று".

முடிவு :

இது வரை கூட்டுக்கல்வி பற்றி சீரிய முறையில் தொடர்ந்த சோதனை எங்கும் நடத்தப்படவில்லை. திட்ட மிடப்பட்ட சோதனைகளிலிருந்து பெற்ற முடிவுகள் நமக்குக் கிடைக்காதவரை, அதைப்பற்றி அறுதியிட்டுக் கூறுவது இயலாது, என அமெரிக்கக் கல்வி நிபுணர்கள் கூறுகிறார்கள். காந்திஜியும் இக்கருத்தினையே கூறியிருப்பது ஒப்பிட்டுப் பார்த்தற்குரியது.

# 7

## 'ஆளுமை வளர்ச்சி'

[புதுக்கல்வியில் உள்ளடங்கிய 'ஆளுமை' வளர்ச்சி பற்றிய குறிக்கோள். தனி நபரின் பரந்த, முழுவளர்ச்சி (அதாவது உடல், உள்ளம், மனவெழுச்சி, கலைரசனை ஆகிய பண்புகளனைத்தின் வளர்ச்சி) வாயிலாகச் சீரான ஒருமைப் பாடுற்ற 'ஆளுமை'யை வளர்த்தல்]

முன்னொரு அத்தியாயத்தில் 'ஆளுமை' Personality என்னும் மனநூல் சொல்பற்றிக் குறிப்பிட்டோம். புதுக் கல்விபயிலும் ஒருவனது ஆளுமை எத்தன்மைத் தாயிருக்கவேண்டும், அதை எவ்வாறு வளர்க்கவேண்டும், எனக்கருதுவது இந்த அத்தியாயத்தின் நோக்கமாகும். புதுக்கல்வி பயில்பவனது ஆளுமை அக் கல்விமுறையின் குறிக்கோள்களுக்கு இணங்க இருக்கும் என்று கூறத் தேவையில்லை. அக்கல்வி படைக்கவிருக்கும் புதுச் சமுதாயத்தின் நோக்கங்களுக்கு இணங்கவும் அது அமைய வேண்டும் அன்றோ? எனவே, இங்கு ஆளுமை என்பது வாட்டசாட்டமான, கட்டழகு வாய்ந்த, உரமுள்ள உடலழகைமட்டும் குறிப்பதன்று. மதிநுட்பம், பேசுவதில் பேராற்றல்உடைமை, எழுதுவதில் எதிரற்ற ஏற்றம், வாதத்தில் வல்லமை என்பவைமட்டும் ஆளுமை ஆகாது. புதுக்கல்வியில் 'ஆளுமை' பற்றிய குறிக்கோள் புரட்சி கரமானது.

உடல், பண்புகள், உள்ளப்பண்புகள், ஆன்மப் பண்புகள், ஆகிய முப்பண்புகளும் சமஅளவில் ஒருமித்து வளர்ந்து மலர்ந்திருக்கவேண்டும். அவற்றுள் மனவெழுச்சி களும் கலையைச் சுவைக்கும் ஆற்றல்களும் சீராய் வளர்ந் திருக்கவேண்டும். ஒன்றுக்கு முரணாக, மற்றொன்று அளவிற்குவிஞ்சி வளர்ந்திருக்கக் கூடாது. இந்த நிலையே புதுக்கல்வியில் எதிர்பார்க்கும் ஆளுமையாகும்.

சில எடுத்துக்காட்டுகளால் மேற்கூறிய இலக்கணத்தைச் சற்று விளக்கலாம்.

**உடற்பண்புகள் :**

தளராத் உடலுழைப்புக்குத் தகுதியுடைமை; நோயற்ற உரமுள்ள உடல்; பயனுள்ள கைத்திறன்; உற்பத்தி செய்யும் திறன்.

**உள்ளப்பண்புகள் :**

உயர்வு தாழ்வு எண்ணுத மனப்பான்மை, உடலுழைப்பில் உவப்புறுதல், எந்த இடுக்கண் குறுக்கிட்டபோதும் எதிர்த்து ஈடுபட்டு வெற்றிபெற முயலும் மனப்பான்மை, விஞ்ஞான மனப்பான்மை, திறந்த மனப்பான்மை, கூடிக் கலந்து திட்டமிட்டுச் செயலாற்றல்.

**ஆன்மப்பண்புகள் :**

அரியநாயகம் அவர்களின் சொற்களாலேயே கூறுவோமானுல், புதுக் கல்வி வேறுவகையான நபரை உருவாக்க முயலுகிறது. "அவனுக்கு உடைமைகள் இரா; தேவைகளும் இரா; உலகச்செல்வத்திஃனயோ, செல்வாக்கிஃனயோ அவன் பொருட்படுத்தமாட்டான். தொண்டிலும் சேவையிலுமே அவன் மகிழ்ச்சியுறுவான். ஆடம்பரத்தையும், அதிகாரத்தையும் அவன் விரும்பான். தன்னுடைய உடல் நலத்திற்கும் மகிழ்ச்சிக்கும் எவ்வளவு குறைந்த பட்சம் தேவையோ அதோடு அவன் மனம் நிறைவு உறுவான். அந்தக் குறைந்த அளவிற்குக்கூட கிடைக்காமல் அல்லலுறும் எளியவர்களின் நிஃலகண்டு மனம் இரங்குவான். கட்சி, நாடு, சமயம் ஆகியவற்ருல் அவன் பாரபட்சம் கொள்ளான். பகுத்தறிவு, நேர்மை, உண்மை ஆகியவை எதெதில் இருக்கிறதோ அதையெல்லாம் அவன் நாடுவான்."

### ஆளுமை வளர்ச்சிக்கு வழி :

ஆதாரக் கல்வித்திட்டத்தில் பயனுள்ள ஒரு உற்பத்தி தொழில் வாயிலாக மேற்கூறிய எல்லாப் பண்புகளையும் வளர்க்கத் திட்டமிட்டிருக்கிறார்கள். அங்கு உழைப்பானது சுய-உதவிக்கு மட்டும் உதவுவதோடு நின்று விடவில்லை. அது எல்லாப் பண்புகளையும் இணைத்து ஒருமித்து வளர்க்க உதவுகிறது. எந்த உபயோகமுள்ள உழைப்பும், மதிநுட்பத்துடன் செய்யப்படுமேயானால், அது அறிவை வளர்க்க இணையற்றதோர் சாதனமாகும். வேறு வழிகளிலும் ஒரு மாணவன் அறிவு பெறக் கூடும். ஆனால் அவ்வளர்ச்சி சீரான வளர்ச்சியாய் இராது. ஒருதலைப்பட்ட வளர்ச்சியாய் இருக்கும். உடல் உறுப்பான, விரல்மட்டும் பெருத்துக் கொண்டும் நீண்டு கொண்டும் போனால், அதை இயற்கைக்கு முரணான வளர்ச்சி எனக் கூறுவோம் அல்லவா ? அதுபோலத்தான் அறிவு விஷயத்திலும்கூட. அறிவுடையவன் என்று நாம் ஒருவனைச் சொல்ல வேண்டுமானால், அவன் நல்ல உடல்வலி பெற்றவனாயும், ஒழுக்கம் குன்றாதவனாயும் இருத்தல் வேண்டும். எனவேதான் ஆதாரக் கல்வித் திட்டத்தில் தொழிலுக்கு மையத்தைக் கொடுத்துள்ளோம்.

### பலபண்புகள் எவ்வாறு ஒருமித்து வளர்கின்றன :

ஓர் ஆதாரப்பள்ளியில் மாணவ மாணவிகள் பல்வேறு செயல்களில் ஈடுபடுகிறார்கள். அன்றாடக் குடும்பவேலைகள், தொழில் வேலைகள், கலைநிகழ்ச்சிகளுக்கான வேலைகள், விழாக்கள் கொண்டாடுதல் போன்றவை அச்செயல்களாகும். இவற்றின் வாயிலாக மாணவ மாணவிகள் அறிவு, பழக்க வழக்கங்கள், திறமைகள், மனப்பான்மைகள் ஆகியவற்றைப் பெறுகின்றனர். ஒரு செயல்வாயிலாக நேர்முகமாகப்பெற்ற அறிவு, அடுத்த செயல்களைச் செவ்வையாகச்செய்ய உதவுகின்றது. அறிவு ஒருமித்து வளருகிறது. தொடர்ந்த பயிற்சியினாலும், திட்டமிட்ட பயிற்சியினாலும் மேற்கூறியவை எல்லாம் மேலும் மேலும் இணைந்து, ஒருமித்து, ஒரு புதுவகையான ஆளுமை வளர்கிறது.

குழந்தைகளின் தேவைகளுக்கேற்ப திட்டமிட்டுச் செயலாற்றுவதனல், அவர்கள் அனுபவ உள்ளொளி பெறுகிருர்கள். ஒன்றில் திறமை பெற்றவுடன் அதை மேலும் செவ்வையாக அதாவது அழகாகவும், உபயோக முள்ளதாகவும் செய்ய முயலுகிருர்கள். பிறகு அழகான பொருள்களைக் காண்கிருர்கள். இதிலிருந்து கலைரசனை பிறக்கிறது. அந்தக் கலைரசனை நாள்தோறும் ஒவ்வொரு செயலின் வாயிலாகவும் வளர்கிறது.

தான் உற்பத்தி செய்த பொருளைப்பற்றி, மாணவ மாணவிகள் பெருமிதம் அடைகிருர்கள். தமது பொருள் களை மகிழ்ச்சியுடனும், கவனத்துடனும், மதிப்புடனும் உபயோகப்படுத்துகிருர்கள். அதனுல் தொழிலைப்பற்றியும், தொழிற்கருவிகள் பற்றியும், மூலக்கூறுகளைப் பற்றியும் நல்ல மனப்பான்மை ஏற்படுகிறது. ஒரு வேலையைப் பற்றியும் அந்த வேலையைச் செய்த தொழிலாளியைப் பற்றி யும்நன்கு அறிந்து கொள்கிருர்கள்."உழவுக்கும் தொழிலுக் கும் வந்தனை செய்வோம்" என்ற பாரதியாரின் கூற்றை இவர்கள் நன்கு அறிந்து கொள்ளமுடிகிறது. இவ்வாறு தொழிலை ஊடகமாகக் கொண்ட கல்வி, ஆளுமை வளர்ச் சியை எளிதாக்குகிறது.

மேற்கூறியவற்றிலிருந்து எல்லாப்பண்புகளும் சம மாய் வளர்கின்றன. ஒன்றுக்கொன்று முரணில்லாமல் வளர்கின்றன. சீரான ஒருமித்த ஆளுமை இவ்வாறு தொழில் ஊடகக் கல்வியால் வளர்கிறது.

ஒரு தச்சனுடைய மகனும் இதே போன்று அனுபவ வேலைகள் வாயிலாக அநேக விஷயங்களைக் கற்கிருன். ஆனுல் அவனுடைய கல்வி இயந்திரரீதியாய் அமைந்திருக் கும். பொருள்களை உற்பத்தி செய்து பொருளீட்டும் நோக்கத்துடனும் அமைந்திருக்கும். எனவே, அவனது கல்வி வேறுவகைப்பட்டதாயிருக்கும். உற்பத்தியினுல் அவனுக்கு ஏற்பட்டிருக்கும் கல்வியும், மகிழ்ச்சியும் வேறு வகைத்தாயிருக்கும். ஆதாரப்பள்ளியில் அளிக்கும் கல்வி,

சீரான ஆளுமையை வளர்ப்பதாயிருக்கும். ஆசிரியரது அறிவுள்ள ஆலோசனைகள் அவனுக்குக் கிடைக்கும். கலாரசனை வளர வாய்ப்புண்டு. விஞ்ஞான முறைபோதனை அவனதுதொண்டு மனப்பான்மையை வளர்க்கும்.

## ஆளுமை வளர்ச்சி முழுமையடைய எவ்வளவு காலம் தேவை :

மேற்கூறிய வளர்ச்சியானது, ஒன்றிரண்டு நாட்களில் கிட்டக்கூடியது என்றோ ஒன்றிரண்டுசெயல்களால் கிட்டக் கூடியது என்றோ நினைத்தல் தவறானது ஆகும். ஆளுமை வளர அநேக ஆண்டுகள் பிடிக்கும். ஆனால் ஒன்று மட்டும தெளிவு. ஒழுங்காக, விஞ்ஞான ரீதியாக, சமூகநோக்குடன் செய்யப்பட்ட ஆக்கவேலையின் ஊடகமாகமட்டுமே ஒரு மித்த ஆளுமை வளர்ச்சி கடிதில் ஏற்படக்கூடும்.

இத்தகைய ஆளுமை வளர்ச்சிபெற்ற ஒருவன் தன் தனிப்பட்ட வாழ்விலும் சமூகவாழ்விலும் யாதொரு இடர்ப்பாடின்றி, ஒப்புரவு அறிந்து, உழைத்து, உதவி புரிந்து வாழ்வான். புதியதோர் நேர்மையான சமுதாயத் தினைப் படைக்க உதவ்வான். நன்றாக உழைப்பான். உழைத்து உண்பதில் பெருமைகொள்வான். நல்ல ஊதியம் திரட்டி முழுவாழ்வு வாழ்வான். ஓய்வு நேரத்தை நன்கு பயன்படுத்துவான். நல்லவற்றை ரசிக்க அவனுக்குத்தெரியும். நல்ல முறையில் எல்லாருடன் பழகத் தெரியும். தன்னருகிலுள்ளவர்கட்குத் தொண்டுபுரிவான். எந்த இடுக்கண் குறுக்கிடினும் அஞ்சமாட்டான். தோல்வி வெற்றிகளில் சமநோக்கு உடையவன். தோல்வியை வெற்றிக்கு முதற்படியாக்க கருதுபவன். நகைச்சுவையுடையவனயிருப்பான். தன் முன்னேற்றத்திற்கு ஆவனசெய்த வாறேயிருப்பான் அவன்.

# 8

## பள்ளியும் சமூகமும்

[பள்ளியும் சமூகமும். எந்தச் சமூகத்தில் ஒரு பள்ளி நிறுவப் படுகிறதோ அதன் தனி நபர் குறிகோள்களையும், சமூகக் குறிக்கோள்களையும், அப்பள்ளி ஒரு கண்ணுடி போல் பிரதி பலித்தல் வேண்டும், என்ற கொள்கை. சமுதாயத்தில் ஏற்பட வேண்டிய சமூக, பொருளாதாரப் புரட்சியின் ஒரு கருவியாக ஆதாரப்பள்ளி அமைய வேண்டும், என்ற கொள்கை. பிற நாடுகளிலும், பிற சமூகங்களிலும் ஏற்பட்ட சமூக, பொருளாதார அரசியல் மாறுதல்களின் நிகழ்ச்சி களில் பள்ளியும், ஆசிரியரும் எடுத்துக் கொண்ட பங்கு ]

### பள்ளி, சமூகத்தின் ' தொண்டன் '

பள்ளியும் சமூகமும் மிக நெருங்கிய தொடர்புடையன வாக இருத்தல் வேண்டும். பள்ளி என்பது சமூகத்திஞல் அனுமதிச் சீட்டுப் பெற்ற நிறுவனமாகும். (School is the licensed agency of the Community to educate its children). இன்று பள்ளியில் படிக்கும் ஆண், பெண் குழந்தைகள், நாளைய சமூகம் என்னும் கடலில் கலக்க வேண்டிய சிறு வாய்க்கால்கள் போன்றவர்கள். சமூகத் தில் நாளை அவர்கள் நன்முறையில் வாழ வேண்டும் அல்லவா? அவர்களுக்குக் கல்விப் பயிற்சி, சமூகப் பயிற்சி, குடிமைப் பயிற்சி, தொழிற் பயிற்சி ஆகிய பயிற்சிகளை அளிக்கும் பொறுப்பைச் சமூகம் பள்ளிகளிடம் ஒப்படைத் திருக்கிறது. எனவேதான், பள்ளியைச் சமூகச்' சேவகன் ' அல்லது சமூகத் ' தொண்டன் ' என்று கூறுகிருர்கள்.

ஆனல், நடைமுறையிலுள்ள பள்ளிகளில் பள்ளிக்கும் சமூகத்திற்கும் நெருங்கிய தொடர்பு காணவில்லை. அதற் குரிய காரணத்தை எளிதில் கூறலாம். நடைமுறையிலுள்ள பள்ளிகளுக்குக் குறிப்பீட்ட தெளிவானசமூக நோக்கம் யாதொன்றுமில்லை. ஆசிரியர்கள் மணிக்கணக்குப்பார்த்து

தொண்டாற்றிவருகிறார்கள். குறிப்பிட்ட பாடத்திட்டத்தை நடத்தி முடித்து, தேர்வுகள் நடத்திவிடுவதுடன் தம்வேலை முடிந்து விட்டது என்று அவர்கள் எண்ணுகிறார்கள். முன்னரே கூறப்பட்ட ரூ. ந. பை. நோக்கத்திற்கு எடுத்துக்காட்டு இது. ஆங்கில ஆட்சியில் அமைக்கப்பட்ட கல்வி முறையால் இந்தக் குறுகிய நோக்கம் நிலைத்து விட்டது. ஆதாரப் பள்ளிகள், தாம் அமைந்திருக்கும் சமூகத்திலிருந்து விலகி வேலை புரியக்கூடாது. ஆதார ஆசிரியர்கள் அச்சமூகத்திற்கு நல்லூழியனாய்த் தொண்டாற்ற வேண்டும். அத்திட்டத்திற்கு ஒரு தெளிவான சமூகக் குறிக்கோள் உண்டு என முன்னரே கூறியுள்ளோம். அக்குறிக்கோளை அடைய ஒவ்வொரு ஆதாரப் பள்ளி ஆசிரியரும் உழைக்க வேண்டும்.

### பள்ளி ஒரு சமூகக் கண்ணாடி :

ஒவ்வொரு சமுதாயத்திற்கும் ஒரு சில குறிப்பிட்ட குறிக்கோள்களும், பழக்க வழக்கங்களும் இருக்கும் அல்லவா ? அச்சமுதாயத்தின் ஆட்சியிலுள்ள பள்ளிகளிலெல்லாம், அதன் குறிக்கோள்கள், மரபுகள், பழக்க வழக்கங்கள் ஆகிய அனைத்தும் இடம் பெற்றிருக்கும். முஸ்லீம் சமூகத்தினர் நடத்தும் பள்ளிகளில் வெள்ளிக் கிழமை விடுமுறை நாட்களாகும். முஸ்லீம் சமூகத்தின் பண்பாடுகள் அவற்றில் அழுத்தம் பெறும். ஆங்கில அரசாட்சி இந்நாட்டில் இருந்துவந்த வரை நம் பள்ளிகளில் இங்கிலாந்து அரசனுக்குத் தினசரி வாழ்த்துப்பா பாடி வந்தனர். உயர்நிலைப் பள்ளித் தேர்வுக்குரிய ஆங்கிலப் புத்தகத்தில் அச்செய்யுள்தான் முதல் பாடமாக ஆண்டு தோறும் அமைக்கப் பட்டிருந்தது. இந்தியாவிலுள்ள ஒவ்வொரு குடியிடமும் அரச அன்பை ஏற்படுத்த அதாவது ஆட்சி பீடத்திலிருந்த ஆங்கிலேய சமூகத்தினரது குறிக்கோளை நிறைவேற்ற, அந்த முறை பள்ளியிலிருந்தே முயலப்பட்டது.

பண்டைக்காலச் சமுதாயத்தின் குறிக்கோள் கடவுளின் அடிகளை அடைதல் என வரையறுக்கப்பட்டிருந்

தது. எனவே, பண்டைக்கால ஆசிரமப் பள்ளிகளில் கடவுள் பக்திக்குச் சிறப்பிடம் அளித்திருந்தார்கள். கிரிஸ்தவர்கள் நடத்திவரும் பள்ளிகளிலும், இராமகிருஷ்ண மிஷன் நடத்திவரும் பள்ளிகளிலும் முறையே கிரிஸ்தவ மதப் பண்பாடுகளும், ஹிந்துமதப் பண்பாடுகளும் பிரதிபலிப்பதைப் பார்க்கலாம். வரலாறு, தாய்மொழி, நீதிநெறி போதனை ஆகிய பாடங்களில் ஒவ்வொன்றிலும் அந்தந்த சமூகத்தின் குறிக்கோள்களுக்கே அழுத்தம் தரப்படும்.

புராணக்கதைகளின்படி, இரணியன் என்னும் அரசன் நாராயணனுக்குப் பதிலாகத் தன்னையே அனைவரும் கடவுளாகத் தொழ வேண்டுமென்று விருப்பம் கொண்டான். அவன் என்ன செய்தான்? அவன் ஆட்சியிலுள்ள பள்ளிகளில் எல்லாம் '**நாராயணனை வணங்குகிறேன்**' என்று ஒவ்வொரு குழந்தைக்கும் முதல் முதலாகக் கற்பிக்கப்படும் வாசகத்திற்குப் பதிலாக, '**இரணியனை வணங்குகிறேன்**' என மாற்றிக் கற்பிக்கக் கட்டளை இட்டான். இவ்வாறு ஒவ்வொரு பள்ளியும் அது அமைந்துள்ள சமுதாயத்தின் தனிப்பட்டவரின் குறிக்கோள்களையும் சமூகக் குறிக்கோள்களையும் நிறைவேற்றவேண்டிய நிலைமையிலிருந்ததால் அவற்றைப் பிரதிபலித்தன. அவ்வாறு பிரதிபலிக்க வேண்டியது முறையே, அவசியமனதே; ஆதாரப் பள்ளியும், தான் அமைந்துள்ள சமுதாயக் குறிக்கோள்களையும் தனிப்பட்டவர் குறிக்கோள்களையும் பிரதிபலிக்கும் கண்ணாடியாயிருத்தல் வேண்டும். ஆதாரக் கல்வியின் நோக்கங்களை முன்னரே கூறியுள்ளோம். ஆதாரப் பள்ளியின் வேலைமுறைகள், கற்பிக்க வேண்டிய பாடங்கள், கற்பிக்கும் முறைகள் ஆகியவை அக் குறிக்கோள்களுக்கு இணங்கியே அமையவேண்டும்.

### ஆதாரப் பள்ளியும் புதுச் சமுதாயமும் :

மேற்கூறியபடி சமூகத்திற்குத் தொண்டனாய்ப் பணி ஆற்றுவதோடு, ஆதாரப் பள்ளிக்கு மற்றோர் முக்கிய வேலையும் உள்ளது. அதுதான் புதுக்கல்விப் படைக்க

விரும்பும் புதுச் சமுதாயத்திற்கு உழைப்பதாகும். இந்தச் சமூக நோக்கம் முதல் நோக்கத்தைவிட முக்கியமானது; கடினமானதும்கூட. முதன் நோக்கத்தை எட்டு ஆண்டுகளுக்குள் நிறைவேற்றிவிடலாம். ஆனல் புதிய சமுதாயத்தைப் படைப்பது எளிதன்று. அது உண்டாக 2, 3 தலைமுறைக்காலம் ஆகலாம். இடையில் எத்தனையோ ஊறுகள் ஏற்படலாம். ஆனல் என்ன நேர்ந்தாலும் ஆதாரப்பள்ளி புதுக்கல்வியின் அந்த இறுதிக் குறிக்கோளுக்கு அமைதியாக பொறுமையுடன் உழைத்தவாறே இருக்க வேண்டும்.

**பள்ளி ஒரு சமுதாயத்தினைப் படைக்க முடியுமா ?**

ஒரு கல்வி முறையால் புதுச் சமுதாயம் ஒன்றினைப் (அதுவும் புரட்சிகரமான சமுதாயம் ஒன்றினை) படைக்க முடியுமா என்பது அடுத்தபிரச்சினை. பள்ளிகளால் மட்டுமே அது முடியும் என்கிருர்கள் ஒரு சாரார். சமூகத் தொண்டனக இருக்கவேண்டிய பள்ளியினல் எவ்வாறு புதுச் சமுதாயத்தினைப் படைக்க முடியும்? அரசுகளால் மட்டுமே அது முடியும்; என மற்ரெரு சாரார் வாதிக்கின்றனர். இரண்டு எதிர் எதிரான பிரச்சினைகளுக்கு முடிவான விடையை நாம் தேட முயல வேண்டாம். ஒன்று மட்டும் தெளிவு. எந்தக் கல்வியானலும் சரி, ஒழுங்காகத் திட்டமிடப்பட்டு தொடர்ந்து நம்பிக்கையுடன் நடத்தப் பட்டுவந்தால், அதன்சத்துள்ள பண்புகள், தனிப்பட்டவர் ஒருவரையோ, அல்லது ஒரு சமுதாயத்தையோ மாற்ருமலிருக்க முடியாது என்பது உறுதி. அக்கல்வித்திட்டம் அமைந்துள்ள போக்கில் தனி நபரையும் சமூகத்தினையும் செலுத்த ஆற்றலுள்ளது. இது வரலாறு கண்ட உண்மை. அக்கல்வித்திட்டம் மன நூல், சமூக நூல், கல்வி நூல் ஆகியவற்றின் அடிப்படை உண்மைகளைத் திருப்தி செய்யவேண்டும். அப்படி யிருந்தால் தான் குறிக்கோள் நிறை வேறும். அவசரக் கல்வித் திட்டத்தாலோ அடித்தளம் நன்கமையாத தொரு கல்வித் திட்டத்தாலோ நிறைவேருது.

எனவே, இன வேறுபாடற்ற, வகுப்பு வேறு பாடற்ற, கூட்டுறவாக உழைக்கும் ஒரு புதிய சமுதாயத் தினை உருவாக்க ஆதாரக் கல்வித் திட்டம் பாடுபடுவது, வரலாற்றிலிருந்து அறிந்த உண்மைக்கு மாறுனது அன்று. காந்திஜியின் திட்டம் நல்ல அடித்தளத்தில் அமைந்துள்ளது. அஹிம்சையும், சத்தியமும் அதன் அடிப்படைகள். எந்த நூல் நோக்குக்கொண்டு ஆராய்ந் தாலும், அதன் உண்மைகளைத் தகர்க்க முடியாது. ஆகவே, புதுச் சமுதாயத்தை அமைக்க ஆதாரப் பள்ளி களால் இயலும். நம்பிக்கையும் தொடர்ந்த தொண்டும் இன்றியமையாதவை.

**நமது சமுதாயத்தின் தற்கால நிலை :**

நமது தற்காலச் சமுதாயம், பொருளாதாரம் சமூகம், ஆன்மீகம் ஆகிய எல்லாத் துறைகளிலும் சீர்கேடுற்ற நிலையில் உளது. சுமார் இருநூறு ஆண்டுகளாக நம்நாடு அன்னியரின் ஆட்சியில் இருந்ததன் விளைவால் ஏற்பட்ட தீங்குகள் இவை.

**பொருளாதாரத் துறை :**

இத்துறையில் நமது சமுதாயம் மிகக் கீழ்த்தர நிலை யில் உள்ளது. 15—7—1947 முதல் நமக்கு அரசியல் விடுதலை கிடைத்து விட்டது. ஆனல், வளமுள்ள வாழ் விற்கு அடித்தளமான பொருளாதார விடுதலை நமக்கு இன்னும் கிடைக்கவில்லை. மனிதனுக்கு இன்றியமையாத தேவையான உணவுக்குக்கூட பிறநாடுகளை எதிர்பார்க்கும் பரிதாபநிலை இன்னும் மாறவில்லை. குவியல் முறையில் பொருளாதாரம் அமைந்திருப்பதால் சூதும், பொய்யும் சுரண்டலும் சமுதாயத்தில் வேரூன்றிவிட்டன.

**சமூகத்துறை :**

இத்துறையிலும் நாம் படுமோசமாய் உள்ளோம். ‚நாம் இந்தியர்கள்’ என்று சொல்லிக்கொள்ள வெட்கப்,

படும் அளவிற்கு நம்பண்பாடுகளை மாற்றி அமைத்துவிட்டது ஆங்கிலேயர் கல்வித்திட்டம். 'இந்தியன்' என்ற நாட்டுணர்ச்சி இன்னும் நம்மவரிடம் ஏற்படவில்லை. சமூகத்தில் மனவேலைக்கு உயர்வும், உடலுழைப்பு வேலைக்கு இழிவும் உள்ள இழிநிலை இன்னும் மாறவில்லை. அண்டை அயலானிடம் அன்பும், நம்பிக்கையும் ஏற்படவில்லை. சகோதரத்துவம், சமத்துவம் ஏற்படவில்லை. சமூகத்தில் சுரண்டல்களும் நேர்மையின்மையும் புகுந்துவிட்டன.

### ஆன்மீகத்துறை :

இத்துறையிலும் பண்பாட்டுநிலையிலும் சமுதாயம் படுவீழ்ச்சி உற்றுள்ளது. நம் பழம்பெருநாட்டுப் பண்பாடுகள் தியாகம், தொண்டு ஆகியவையும் இழிவாகக் கருதப்படுகின்றன. எல்லாத்துறைகளிலும் மேல்நாட்டாரின் வியாபார மனப்பான்மை புகுந்துவிட்டது; தந்நலம் ஓங்கிவிட்டது. பொதுநலம் பேச்சளவில் நிற்கிறது.

நமது சமுதாயத்தில் மலிந்துநிலைத்துள்ள ஊழல்களை அறிஞர்கள் அனைவரும் கண்டனர். ஆனால் அவற்றை எப்படிக் களைவது எனறு நமக்கு ஆக்க யோசனைகூற ஒருவரும் முன்வரவில்லை. அரசியல் வானில் முடிவாகக் காந்தி தோன்றினார். மேற்கூறிய படுமோசநிலையை மாற்ற, ஒரே ஒரு வழிதான் உள்ளது என அவர் எண்ணினார். அதுதான் முன்னமேயே குறித்துள்ள நேர்மையான சமுதாயம் ஒன்றினைப் புதியதாகப் படைப்பதாகும். அப்புதுச் சமுதாயத்தில் எல்லாத் துறைகளிலும் புரட்சிகரமான மாறுதல்கள் இருக்கும். ஆனால் அதை ஏற்படுத்துவது யார்? அதை எப்படி ஏற்படுத்துவது?

காந்திஜி சிந்தித்தார்; சிந்தித்தார். முதலில் நம்மிடம் நம்பிக்கை ஏற்படவேண்டும். பொருளாதாரம் அதற்கு உதவவேண்டும். சமூகப் பண்புகள் வளரவேண்டும். தந்நலம் ஒழியவேண்டும்; பொதுநல விருப்பம் உருவாகவேண்டும்; கிராமங்களில் சுறுசுறுப்பும், மகிழ்ச்சியும் ஏற்பட

வேண்டும். புதுச்சமுதாயம் அக்கிராம மறுமலர்ச்சியில் தான் உருவாக வேண்டும். அந்த கிராம மறுமலர்ச்சிக் காகக் காந்திஜி ஒரு நிர்மாணத்திட்டத்தை வகுத்துத் தந்தார். அதைப்பற்றி முன்னரே நீங்கள் படித்தீர்கள். அதில் அவர் வாழ்ந்திருந்த காலத்தில் 16 வேலைத்திட்டங் கள் இருந்தன. காலப்போக்கில் அவை 18, 20 ஆகி இப் பொழுது 22 ஆகி உள்ளன. அதைக் கீழே மீண்டும் வேறொரு பாட்டால் தந்துள்ளோம்

## நிர்மாணத்திட்டம் 22

கதரபிவிருத்தி; கைத்தொழில் ஆக்கம்;
புதுமுறைக் கல்வி; பொது ஜனக் கல்வி;
தாய்மொழி தன்னைத் தழைக்கச்செய்தல்;
ஹிந்தியைப் பரப்பல்: இயற்கை சிகிச்சை;
ஊர்ச் சுகாதாரம்; உடல் சுகாதாரம்;
குஷ்ட நிவர்த்தி; குடி வகை ஒழித்தல்;
மாணுக்கர் பணி; மாதர் முன்னேற்றம்;
உழவோர், தொழிலோர் உயர்வுற உழைத்தல்;
ஹரிஜனத் தொண்டு; ஆதியோர் சேவை
அகதிகட்(கு) உதவல்; ஆவினைப் பேணல்,
சமய சமரசம்; சரிசம உடைமை;
இணையநற் பணிகள் இன்னும் உள்ளன;
எல்லாம் கூடி இருபத்திரண்டாம்
திருப்பணி இவற்றை விருப்புடன் ஏற்று
சர்வோதய நற்சமுதாயத்தினை
நிர்மாணம் செய நித்தமும் உழைப்போம்.

(சா. கணேசன்.)

### நிர்மாணத்திட்டத்தைப் பற்றிய விளக்கம் :

நிர்மாணத்திட்டம் சத்தியம், அஹிம்சை என்ற அடிப்படையில் அமைந்திருக்கிறது. அதில் அடங்கியுள்ள அத்தனைதிட்டங்களும் நெருங்கிய தொடர்புள்ளவை. ஒன்றிரண்டைமற்றும் ஏற்றுக் கொண்டு வேறுசிலவற்றை ஒதுக்கிவிட முடியாது. எடுத்துக்காட்டாக, கதர் அபி விருத்தியை ஏற்றுக்கொண்டு ஆதாரக் கல்வியைத் தள்ளி விடமுடியாது. அல்லது ஆதாரக் கல்வியை ஏற்றுக் கொண்டு கைத்தொழில் வளர்ச்சியை விடமுடியாது.

அந்த நிர்மாணத்திட்டம் கிராம மறுமலர்ச்சிக்காகவே ஏற்பட்டது. இந்தியாவின் சூழ்நிலைக்கும், மேதைக்கும், பண்பாட்டிற்கும் ஏற்றவாறு அது அமைக்கப்பட்டுள்ளது. நிர்மாணத்திட்ட அமைப்புக் கொள்கைகளின் சாரமாவது:-

(i) பொருளாதாரத் துறை :

(1) உபயோகப் படுத்துவதற்காகப் பொருள்களை உற்பத்தி செய்யவேண்டுமேயன்றி லாபத்திற்கன்று.

(2) விவசாயமும், கைத்தொழிலும் பரவல் முறையில் அமையவேண்டும். குவியல் முறையில் அன்று.

(3) கருவிகள் கிராமக் கைத்தொழில்களுக்கு வருவாய் அளிப்பனவாயும் இருத்தல் வேண்டும்.

(4) சுறுசுறுப்பும் அதனால் ஏற்படும் மகிழ்ச்சியும் ஏற்படவேண்டும்.

(ii) சமூகத்துறை :

இதன் கீழ் காந்திஜி எண்ணியவற்றை முன்னரே கூறியுள்ளோம். தனிப்பட்டவர் நலமும், சமூகநலமும் ஒன்றுக்கொன்று போட்டியிடக்கூடாது. இரண்டும் ஒன்றை மற்றொன்று முழுதாக்கிக் கொள்ள வேண்டும்.

(iii) ஆன்மீகத்துறை :

(1) நமது நோக்கங்கள் எவ்வளவு சிறப்புடையனவாய் இருந்தாலும் அவற்றை நிறைவேற்றுவதில் தவறான முறைகளை ஒருக்காலும் கையாளக்கூடாது. தீண்டாமையை ஒழிக்க விரும்புவது நல்ல குறிக்கோள். ஆனால் அதை எந்த முறையினாலும் (கொடுமை, மோசம் போன்றவை) அடைய முயலுவது தவறு. நேர்மையான முறைகளினாலேயே அதை அடைய முயலவேண்டும்.

> ''ஈன்றாள் பசி காண்பானாயினும் செய்யற்க
> சான்றோர் பழிக்கும் வினை''

என வள்ளுவர் கூறியபடி, வழி முறைகளும் நேர்மையால்

இருக்கவேண்டுவதன் அவசியத்தைக் காந்திஜி வற்புறுத்தி உள்ளார்.

(2) மனிதனது தேவைகளை எவ்வளவுக்கெவ்வளவு குறைந்தபட்சமாக அமைத்துக்கொள்ள முடியுமோ, அவ்வளவுக் கவ்வளவு குறைவாக அமைத்துக் கொள்ள வேண்டும். இந்த உண்மை, உணவு, உடை, உடைமை ஆகிய மூன்றனுக்கும் பொருந்தும். தேவைக்கு விஞ்சிய பொருள் இருந்தால் அந்நிலைமை ஏதாவது ஒருவகைச் சுரண்டலில் கொண்டுபோய்ச் சேர்க்கும்.

பகவத்கீதையில் "ஆசையினால் கோபமும், கோபத்தினால் குழப்பமும், குழப்பத்தினால் நினைவு தவறுவதும், நினைவு தவறுவதினால் பகுத்தறிவு அழிவதும், பகுத்தறிவு அழிவினால் முடிவில் நாசம் அடைவதும் ஆகும்" என்ற உண்மையைக் காந்திஜி வற்புறுத்துகிறார்.

இவ்வாறு நிர்மாணத்திட்டம் அனைவருக்கும் நன்மை தரும் சர்வோதயத்திட்டத்தின் மூலமாகும்.

**தனி நபர் குறிக்கோள்கள் :**

புதுச் சமுதாயம் அமைந்திருக்க வேண்டிய பாங்கினை மேலே குறித்தோம். புதுக் கல்விபயிலும் ஒரு தனிநபர் எத்தகைய பயிற்சி பெற்றிருப்பார் எனக் குறிப்போம்.

1. துப்புரவுடனும், உடல் நலத்துடனும் வாழக் கற்றிருப்பான். கூடவே சமூகத் துப்புரவிற்கும் சமூக வாழ்விற்கும், சமூக உடல் நலத்திற்கும் அவன் கவனம் செலுத்துபவனாயிருப்பான்.

2. உணவு, உடை, சாதாரணப் பழக்கத்திலிருந்து வரும் கருவிகளைப் பழுது பார்த்தல் ஆகியவற்றில் தன்னம்பிக்கைப் பயிற்சி பெற்றிருப்பான்.

3. ஓர் ஆதாரத்தொழில் வாயிலாகத் தன்னிறைவுத் தத்துவத்தை நிறைவேற்றுபவனாயிருப்பான்.

4. அடிப்படை விஞ்ஞான கணித, பொறி, (Mechanies) அறிவு அவனுக்குத் தெரிந்திருக்கும்.

5. குடிமைப் பயிற்சி பெற்றிருப்பான்.

6. கருவிப் பாடங்களில் (மொழி, கணிதம்) நல்ல தேர்ச்சிபெற்றிருப்பான்.

7. உண்மைக் கலையை ரசிக்க வல்லவனுய் இருப்பான்.

## ஆதாரப்பள்ளி ஒரு கருவியாக அமையவேண்டும் :

மேலே குறித்த தனி நபர்க் குறிக்கோள்களையும், சமூகக் குறிக்கோள்களையும் நிறைவேற்ற, நாடெங்கும் பரவிக் கிடக்கும் ஆதாரப் பள்ளிகள், கருவிகளாகத் தொண்டாற்ற வேண்டும். கருவிகளின் நுட்பம் எவ்வளவுக் கெவ்வளவு சிறந்து உள்ளதோ, அவ்வளவுக் கவ்வளவு அவற்ருல் உற்பத்தியாகும் பொருள்களுக்கு அழகும், சிறப்பும், மதிப்பும் ஏற்படும். அதைப்போலவே, மேற் கண்ட குறிக்கோள்களை எவ்வளவுக் கெவ்வளவு ஆழ்ந்து அறிந்து ஆதாரப் பள்ளிகள் தொண்டாற்றுகின்றனவோ, அவ்வளவுக் கவ்வளவு புதுச் சமுதாயம் நன்கமையும். குறிக்கோள்களை மட்டும் தெரிந்திருந்தால் போதாது. அவற்றின் அடிப்படையில் ஆழ்ந்து கிடக்கும் கொள்கைகளை அறிந்து கொள்ள வேண்டும். அதற்காகத்தான் ஆதாரப் பயிற்சிபெற்ற ஆசிரியர்களுக்குக்கூட ஆண்டுக்கு மூன்று கருத்தரங்குகளும் மாநாடுகளும் அமைத்து உவுதகிருர்கள் அரசினர்.

## ஆதாரப்பள்ளி எவ்வாறு தொண்டாற்ற வேண்டும் ?

ஓர் ஆதாரத் தொழிலின் வாயிலாக, ஒவ்வொரு குழந்தையின் முழு ஆளுமை வளர்ச்சி எப்படி ஏற்படுகிறது என முன்னரே கூறியுள்ளோம். மேலே விவரித்த தனி நபர் குறிக்கோள்களை நிறைவேற்ற ஆதாரப்பள்ளி அம்முறைகளைப் பின்பற்ற வேண்டும்.

சமூகக் குறிக்கோள்களை நிறைவேற்ற, கூட்டு வழி பாடு, கிராம சேவை, விழாக்களைக் கொண்டாடுதல், கலை நிகழ்ச்சிகள் நடத்துதல், உணவு சமைத்துப் பரிமாறுதல், செய்திகள் படித்தல் ஆகியவை உதவும்.

சற்று விவரமாகக் கூறுவோம். ஆதாரப்பள்ளிகளில் ஆதாரத்தொழிலை ஊடகமாகக் கொண்டு கல்வி கற்பிக்கிறோம். உடலுழைப்பினால் பொருள்களை உற்பத்தி செய்யக் கற்பிக்கிறோம். தன்னிறைவை நிறைவேற்ற ஊக்குகிறோம்.

பள்ளியைச் சமூகமாக அமைக்கிறோம். கூடிவாழும் கலையைக் கற்பிக்கிறோம். அமைச்சர்களைத் தேர்ந்தெடுத்து தம் கடமைகளைச் செவ்வையாகவும் குடியாட்சி முறையிலும் செய்யக் கற்பிக்கிறோம். நிறை குறைகளை ஆராய்ந்து விமரிசனம் கூறக்கற்பிக்கிறோம்.

இவ்வாறு சகோதரத்துவம், சமத்துவம், உழைப்பின் உயர்வு, உற்பத்திப்பொருளில் மகிழ்ச்சி, கூடி வாழ்தல், குடியாட்சி, தந்நலம் இல்லாத தொண்டு ஆகியவற்றை வாழ்க்கைச் சந்தர்ப்பங்களில் முழுப் பொருளுடன் கற்பிக்கிறோம்.

மேற்கூறிய பொருளாதார, சமூக, ஆன்மீகப் புரட்சிக்கு ஆதாரப் பள்ளிகள் அமைதியான முறையில் நல்ல கருவிகளாக தொண்டாற்ற வேண்டும்.

**பிற நாடுகளில் ஏற்பட்ட மாறுதல்களும் பள்ளியின் பங்கும் :**

இங்கு சமூக, அரசியல், பொருளாதார ஆகிய மூவகை மாறுதல்களையும் பற்றி அறிவோம்.

கல்வி என்பது தனிப்பட்ட ஒருவரின் வளர்ச்சியோடு சம்பந்தப்பட்டதாகும். ஆனால், மனிதன் தனித்து வாழவே முடியாது. அவன் ஒரு சமூகத்தில் தான் வாழ முடியும். மனிதப் பண்புகள் ஒருவனிடம் வளர வேண்டுமானால், மனிதர்கள் வாழும் ஒரு சமூகத்தில் அவன் வாழ

வேண்டும். அவன் தனித்துவாழும் நிலையில் ஏற்பட முடியாது. அண்மையில் ஓர் ஆண் குழந்தையை ஓநாய் கள் காட்டிற்கு எடுத்துச் சென்றனவாம். மனிதர்களே இல்லாத ஓர் சூழ்நிலையில் ஒரு காட்டில் அக்குழந்தை சாகாமல் சில ஆண்டுகள் வாழ நேரிட்டதாம். பெரிய வனானதும், மனித சமூகத்தில் மீண்டும் அவன் வந்துசேர நேர்ந்ததாம். மனிதப் பண்பே இல்லாமல் காட்டு விலங்குகளைப்போல் அவன் வளர்ந்திருந்தானும். இந்த வரலாற்றை செய்தித் தாள்களில் படித்திருப்பீர்கள்.

தனித்தனி மனிதர்களுடைய கல்வியினாலும் மேம் பாட்டினாலும் சமூகம் முற்போக்கு அடைந்தது. பல்வேறு சமூகங்கள் ஏற்பட்டன. ஒவ்வொன்றுக்கும் சில குறிக் கோள்கள் ஏற்பட்டன. அவை சமூகக் குறிக்கோள்களா யின. நாளடைவில் நிலைமை மாறியது. காலப்போக்கில் மேற்கூறிய சமூகங்களும் தம் குறிக்கோள்களை அவ்வப் போது தேவைகளுக்கேற்ப மாற்றிக்கொள்ளலாயின. அதோடு நில்லாமல் ஒவ்வொரு சமூகமும் அதனதன் புதிய குறிக்கோள்களை அதனதன் உறுப்பினர்களிடம் ஏற்படுத்த முயலத் தொடங்கின.

சமூகம் தனிப்பட்டவரது கல்விக்கும், மேம்பாட்டிற் கும் வழிவகைகள் வகுக்கத் தொடங்கியது. தனிப்பட்ட வரின் முற்போக்கை அடக்க முற்பட்டது. அதனால் இரண்டுக்கும் போட்டி ஏற்பட்டது.

ஒரு காலத்தில் சமுகநலன் அழுத்தம் பெற்றது. மற்றொரு காலத்தில் தனிப்பட்டவர் நலன் ஏற்றம் பெற் றது. அதிகாரம் மாறி மாறி அமையலானது. இவ்வாறு சமூகங்கள் மாறி மாறி அமைந்த கதையை, அந்தந்த நாட்டு வரலாறுகளில் காணலாம். சில சமூகங்கள் ராணுவ நோக்கங்களை முன்னணியில் வைத்தன. சில சமூகங்கள் ஆன்மீகக் குறிக்கோள்களை முன்னணியில் வைத்தன. சில, வியாபாரத்திற்கும் பொருளாதாரத்திற்கும் முதலிடம் கொடுத்தன. ஒவ்வொரு சமூகமும் புதிய குறிக்

கோள்களை அமைத்துக்கொண்டு, அததற்கேற்றவாறு கல்விமுறையை மாற்றி அமைத்துக்கொண்டது.

தனிப்பட்டவன் என்பவன் குறுகிய காலத்தில் அழிந்து போகக்கூடியவன். அவனுடைய தனிப்பட்ட சிறப்புக்கள் அவன் இறந்து மறைந்தவுடன் அழிகின்றன. ஆனல் சமூகம் அப்பேர்ப்பட்ட அற்பாயுள் கொண்டதன்று; தொடர்ந்து இயங்கி, மக்களை ஊக்கி வருவதோர் நிறுவன மாகும். அது சிரஞ்சீவியானது. அது நாளுக்கு நாள் சீரும் சிறப்புமாய் வளர்ந்துவருகிறது. ஆகையால் தனிப் பட்டவரின் நலன் சமூகநலனுக்கு உட்பட்டதுதான் என ஒரு சாரார் வாதாடுகின்றனர். தனிப்பட்டவன் அழிந்து விடுவானே ஒழிய அவனது ஆன்மா அழிவதில்லை யென்பது எதிர்வாதம். இரண்டும் ஒன்றையொன்று விஞ்சாமல் ஒன்றையொன்று முழுமைப்படுத்திக் கொள் வதே நல்ல முறை ஆகும். உலகில் சமுதாய மாறுதல், அரசியல் மாறுதல், பொருளாதார மாறுதல் ஆகியவை ஏற்பட்டதற்கு இப்போட்டியே காரணம் என்கிருர்கள் அறிஞர்கள்.

**அரசியல் துறையில்** பல நாடுகளில் முடி ஆட்சி மறைந்து விட்டது. குடி ஆட்சி ஏற்பட்டுவிட்டது. முடி ஆட்சி உள்ள ஒரு சில நாடுகளிலும், அரசர்களும், அரசிகளும், குடி ஆட்சி முறையிலேயே நடந்து கொள் கிருர்கள்.

**பொருளாதாரத் துறையில்** பல நாடுகளில் தொழில் புரட்சி ஏற்பட்டது. முதலாளி, தொழிலாளி என்ற் புதிய வர்க்கங்கள் தோன்றின. ஒரு சில முதலாளிகளிடம் செல் வாக்கு, அதிகாரம் ஆகியவை குவிந்த முறையில் சேரத் தொடங்கியது. அவர்கள் ஏழைகளான தொழிலாளி களை நசுக்கலாயினர். காலப்போக்கில் முதலாளி, தொழிலாளிப் போராட்டம் தொடங்கியது.

கிராமத்திலுள்ளவர்கள் பெருத்த அளவில் நகர்களுக் குச் சென்று குடி ஏறலாயினர். ஆலைகளையொட்டிப் புது

நகர்கள் தோன்றின. பழைய வாழ்க்கை முறைகள் மாறலாயின. அதன் விளைவாய் புதுச் சிக்கல்களும், சமூக மாறுதல்களும் ஏற்படலாயின.

சமூகத்துறை :

சமூகத் துறையில் பல்வேறு மாறுதல்கள் ஏற்பட்டன. விஞ்ஞானக் கண்டுபிடிப்புக்களினால் சில மூடப் பழக்க வழக்கங்கள் மறையலாயின. விரைவாக ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு நிலம், நீர், ஆகாயம் வழியாக பயணவசதிகள் ஏற்பட்டதன் விளைவாய், ஒரு சமூகம் மற்றொரு சமூகத்தை எளிதில் பாதிக்கமுடிந்தது. கல்வியும், செய்தித்தாள்களும், இவற்றிற்கு உதவின. காலனி ஆட்சிமுறையும், சமூக மாறுதல்களுக்குக் காரணமாயிற்று.

இத்தகைய மாறுதல்கள் சிலவற்றிற்கு ஆங்காங்கு அந்தந்தச் சமுகத்தில் அமைக்கப்பட்டிருந்த பள்ளி ஆசிரியர்கள், ஓரளவிற்குத் தொண்டாற்ற கட்டாயப் படுத்தப் பட்டனர்.

குறிப்பாக ஜர்மானியில் ஹிட்லர், இத்தாலியில் முஸ்ஸோலினி ஆகிய சர்வாதிகாரிகளின் ஆட்சியில், ஆசிரியர்கள் மிகமிகக் கேவலமாக நடத்தப்பட்டனர். அவர்களுக்கு சுதந்திரம் யாதும் கிடையாது. அச் சர்வாதிகாரிகளின் கட்டளைகளை அப்படியே இயந்திரம்போல் நிறைவேற்றவேண்டி யிருந்தது.

சமயத் துறையிலும் ஆங்காங்கு, ஸ்ரீராம கிருஷ்ண பரமஹம்ஸர், விவேகானந்தர் போன்ற ஆசாரியர்கள் தோன்றினார்கள். ஆன்மீகப்பண்புகளை வளர்க்கும் முறைகள் பள்ளிகளில் ஏற்படலாயின.

பண்டைக்காலந்தொட்டே தனிப்பட்டவரின் வளர்ச்சி (Individualism) சமூக வளர்ச்சி என்ற இரண்டு தத்துவங்களும், மாறி மாறி ஏற்றம் பெற்றுவந்துள்ளன. கல்வி முறையும் அதற்கேற்ப மாறி மாறி அமைந்துவந்துள்ளது. அந்த வரலாற்றைப் பின்வருமாறு சுருக்கிக் கூறலாம்.

**ஸ்பார்ட்டா நகரம்** (கிரீஸ் நாடு)

ஆதிகாலத்தில் சமூகத்திற்கே முழுப்பெருமை அளிக்கப்பட்டது. தனிப்பட்டவரின் வளர்ச்சி அங்கு கவனிக்கப்படவேயில்லை. **"ஒருவன் தனக்காகப் பிறக்க வில்லை, தன்நாட்டுக்காகவே பிறந்தான்"** என்பது அவர் களது கொள்கை. அதன் விளைவாக இலக்கியம், கலை முதலியவை அழுத்தம் பெறவில்லை. எங்கு பார்த்தாலும், ராணுவப் பயிற்சி, துணிச்சல்,வீரம், போர் ஆகியவைகளே நற்பண்புகளாகக் கருதப்பட்டன.

**ஏதென்ஸ் நகரத்தில் :**

ஸ்பார்ட்டா நகரத்தைவிடக் குறைந்த தீவிரத்தன்மை உள்ள சமூகக் கொள்கை இந்நகரில் அமுலிலிருந்தது. தனிப்பட்டவரின் வளர்ச்சி அவ்வளவு தீவிரமாக நசுக்கப் படவில்லை. தனிப்பட்டவரின் உள்ள ஆன்ம வளர்ச்சிக்கும் ஒரு சிறிது கவனம் அவசியம் எனக் கருதப்பட்டு ஓரள விற்கு ஆவன செய்யப்பட்டுவந்தது.

**ஜர்மனி - இத்தாலி நாடுகள் :**

அண்மையில் சமீபகாலம் வரை, இந்நாடுகளில் தனிப்பட்டவர் நலம் திட்டமிடப்பட்டு நசுக்கப்பட்டது. சர்வாதிகாரிகள் சமூகநலனையே உயர்த்தினர். அதற் கேற்ப பள்ளிக் கல்விமுறை மாற்றப்பட்டது. **"தகப்பன் நாடு"** (Fatherland) **என்பதே எல்லாம்** என்ற மூல மந்திரம் அங்கெல்லாம் கற்பிக்கப்பட்டது. **நாட்டுத் தொண்டே மனிதனின் வாழ்வு** என நாடெங்கும் கற்பிக் கப்பட்டது.

**ரஷியா :**

இங்கும் சமூகநோக்கத்திற்கு அளவிற்கு விஞ்சிய மேன்மை அளிக்கப்பட்டது, தனிப்பட்டவரின் வளர்ச்சி கருதப்படவே இல்லை. இந்நாட்டிலும், ஜர்மனி, இத்தாலி நாடுகள் போலவே வேறுவகை சர்வாதிகாரம் நடந்தது. அங்குள்ள பள்ளிகளிலும் கல்வி முறை அதற்கேற்ப மாற்றி அமைக்கப்பட்டது.

**இங்கிலாந்து :**

இந்த நாட்டில் எந்தவகையான தீவிரக்கொள்கையும் அமுலில் இருந்ததேயில்லை. "கல்வி சமூக சேவைக்கே" "கல்வி நற்குடிமைக்கே" என்பது இந்நாட்டு ஆட்சியாளரின் முழக்கங்கள். எனினும், இங்கு சமூகநோக்கு அவ்வளவு தீவிரமாக உரு எடுக்கவில்லை. தனிப்பட்டவர் வளர்ச்சியும் போதிய கவனம் பெற்றது. தனிப்பட்டவரின் ஆன்ம வளர்ச்சிக்கும் கல்விக்கும் ஆவன செய்யவேண்டும் எனஎடுத்துக்கூறினர் சிலர். இங்குள்ளவர்கள் மிதவாதிகள்; தீவிரவாதிகளல்லர்.

**காந்திஜி :**

இருகொள்கைகளுக்கும் வெவ்வேறு சந்தர்ப்பங்களில் அழுத்தம்தந்து பேசியுள்ளார் காந்திஜி. எதிர்மாருன அந்த இரண்டு கொள்கைகளையும், அவர் ஆதரித்து வந்ததைப் பார்த்தால், அவர் முன்னுக்குப்பின் முரணுகப் பேசியுள்ளது போல் தோன்றலாம். ஆனல், அவரது கருத்துக்களை நன்கறிய அவருடைய விளக்கங்களை நன்குணர்ந்து ஆராய வேண்டும். "தனிப்பட்டவரின் வளர்ச்சியே பிரதானமானது; சமூகத்தில் ஆற்றல் குறைந்திருப்பதை நினைக்கவே எனக்குப் பீதியாயிருக்கிறது," என ஓரிடத்தில் தனிப்பட்டவர்கள் கொள்கையை வற்புறுத்தியுள்ளார்.

அதேமாதிரியாக மற்ருேரிடத்தில் "சமூக சேவையே கல்வியின் குறிக்கோளா யிருக்கவேண்டும். பணம் ஈட்டுவதுமட்டும் அதன் குறிக்கோளாய் இருக்கக் கூடாது. சேவை, தியாகம், ஆகியவற்றைக் கற்பிக்காத கல்வி, கல்வி ஆகாது" என சமூகக் கொள்கையையும் நன்கு வற்புறுத்தியுள்ளார். இரண்டிலும் மிதமாயிருப்பதன் அவசியத்தை எடுத்துக்காட்டவே, அவ்விரண்டு கொள்கைகளின் பெருமைகளை ஆங்காங்கு உயர்வு படுத்திக் கூறியுள்ளார். 27-5-1939 தேதியிட்ட ஹரிஜன் இதழில், இவ்விரண்டிற்குமுள்ள உட்தொடர்பை வற்

புறுத்தி,இரண்டும் சம கவனம் பெறவேண்டுவதன் அவசியத்தை எடுத்து விளக்கியுள்ளார்.

தனிப்பட்டவர் நலமும், சமூக நலமும் ஒன்றையொன்று முழுதாக்கிக் கொள்ளவேண்டும். இரண்டில் ஒன்றுக்கு அழுத்தமும் ஏற்றமும் அளித்தால் இரண்டும் தீங்குறும்.

மேற்கூறிய மாறுதல்களை விளைவிக்க ஆதாரப் பள்ளிகள் கீழ்க்கண்டவகையிலும் கருவிகளாகத் தொண்டாற்றலாம் :



### (i) வினோபாஜியின் பூமிதான இயக்கம் :

சமூகத்தில் உள்ள விபரீதமான ஏற்றத்தாழ்வுகளை ஒழிக்க, வினோபாஜி அவர்கள் பூமிதானம், கிராமதானம், சம்பத்துதானம், உழைப்பு தானம் போன்ற இயக்கங்களை ஏற்படுத்தியுள்ளார். இந்தியாவில் உள்ள எல்லா ராஜ்ஜியங்களிலும், ஊர் ஊராகக் கால்நடையாகவே சென்று அவற்றின் தத்துவங்களை விளக்கி வருகிறார். அஹிம்சை ஸத்யம் ஆகிய இரண்டின் அடிப்படைகளின் மீது அந்த இயக்கம் உருவாகியுள்ளது. காந்தியின் ஆன்மீக வாரிசு அல்லவா வினோபாஜி? எந்த மனிதனும் தன் பொருளாதார நிலைக்கு ஏற்ப ஏதாவதொருவகையில், ஒரு தானத்தைச் செய்ய இயலுமாறு இந்தத்திட்டம் தீட்டப்பட்டுள்ளது. அதுதான் இவ்வியக்கத்தின் தனிச் சிறப்பு.

ஹிந்துஸ்தானீ தாலீமீ சங்கத்தின் செயலாளரான அரியநாயகம் அவர்களே வினேபாஜியுடன் சர்வோதய பாதயாத்திரையில் கால்நடையாகச் சுற்றி வந்து பிரசாரத்தில் ஈடுபட்டுவந்தது நினைவிருக்கலாம். தமிழ்நாட்டு அரிய நாயகம் என்று போற்றப்படும் நமது மதிப்பிற்குரிய திரு. க. அருணுசலம் அவர்களும், ஆதாரக் கல்வித் தொண்டிலிருந்து பூதான இயக்கத் தொண்டிற்கு வந்து விட்டார்.

இந்த இயக்கத்தில் ஆதாரப்பள்ளி ஆசிரியர்களும் ஈடுபட்டு, சமூகச் சீர்திருத்தத்திற்குப் பாடுபடலாம்.

(ii) **பள்ளி - ஒரு சமூக கேந்திரம் :**

நமது மாநில அரசினரும் கிராம சமூக முன்னேற்றத்திற்காக பல்வேறு முறையில் உதவி பெறுகிருர்கள். அவற்றுள் சமுதாய நலத்திட்டமும், தேசீய விஸ்தரிப்புத் திட்டமும் முக்கியமானவை. தவிர கல்வி, மருத்துவம், கூட்டுறவு, சுகாதாரம், போன்ற அரசினர் துறைகள் ஒன்ருேடொன்று போட்டி போட்டுக்கொண்டு கிராம மறுமலர்ச்சிப் பணியில் பாடுபட்டு வருகின்றன. ஆதாரப் பள்ளி ஆசிரியர் மேற்கண்ட அதிகாரிகள் தம் ஊருக்குப் பார்வையிட வரும்போது தம்மாலான உதவி அவர்களுக்கும், கிராம மக்களுக்கும் செய்யத் தவறக்கூடாது. பள்ளி, ஒரு சமூக கேந்திரமாக (Community Centre) அமைய வேண்டும் என்று அரசினர் விரும்புகிருர்கள்.

ஒவ்வொரு துறை அதிகாரிகளும், படங்கள் காட்டுகிருர்கள். கண் காட்சிகள் காட்டுகிருர்கள். சொற்பொழிவு ஆற்றுகிருர்கள். பிரசார வண்டிகள் ஊர் ஊராய்ச் சுற்றி வருகின்றன. இவர்களுக்கெல்லாம் ஆதாரப்பள்ளி ஆசிரியர்கள் நன்கு உதவ இயலும்.

(iii) **இலவச உணவளிப்பு ;**

நமது மாநிலப் பொதுக்கல்வி இயக்குநர் அவர்கள் ஆரம்பித்துவைத்த அருமைத் திட்டம் இது. அரசினரும்

இத்திட்டத்தின் நலங்களை அறிந்து, பண உதவி செய்து வருகிறார்கள். ஒவ்வொரு கிராமத்திலுள்ள ஏழைச் சிறுவர் சிறுமியர்க்கு நண்பகலில் ஒரு வேளை இலவச உணவு அளிப்பதே இதன் நோக்கம். இது வெற்றிகரமாய் தொடர்ந்து நடைபெற ஆசிரியர்கள் சிறந்த தொண்டாற்றலாம்.



(iv) பள்ளிச் சீரமைப்புத் திட்டம் :

இது ஒரு புதிய திட்டம். புரட்சிகரமான திட்டம். ஊரிலுள்ள மக்களின் மனத்தைப் பள்ளி பால் இழுத்து, அதன் முன்னேற்றத்தில், மேம்பாட்டில், சீரமைப்பில் ஆவன செய்ய ஊக்க முயலும் திட்டம். எந்த மாநிலத்திலும் இதுவரை கண்டிராத திட்டம். இந்தியப் பிரதம அமைச்சர் நேருஜி, மத்திய உள் நாட்டு அமைச்சர் பந்த்ஜி ஆகிய அறிஞர்கள் நேரிலே கண்டு வியந்து,

பாராட்டியதோடு நின்றுவிடாமல், மற்ற மாநிலங்களுக்குச் சிபாரிசு செய்யப்பட்டுள்ள ஒப்புவமையில்லாத் திட்டம். இதுவரை வரலாறு கண்டிராத வகையில் மக்கள், ஏழை மீனவர்கள்கூட. அந்தந்த ஊரில் உள்ள பள்ளிகளுக்கு பண உதவி, உழைப்புமூலம் உதவி எனப் பலவகைகளில் உதவிபுரிய முன்வந்து, புரட்சிகரமான புதுமைகள் செய்துள்ளனர்.

இத்திட்டத்தின் கீழ் இதுகாறும் பள்ளிகளுக்குக் கிடைத்த பல்வேறுவகை உதவிவகைகளைக் கீழ்க்கண்டவாறு கூறலாம் :—

i பள்ளிக்குத் தேவையான தளவாடங்கள்—(கரும் பலகை, கடிகாரம், போதனு சாதனங்கள் போன்றவை)

ii மரச்சாமான்கள் — (மேஜை, நாற்காலி, பலகை, பெட்டி, அடுக்குப்புரை, கர்ணம் மேஜை....)

iii உணவு சமைத்தல் — (பாத்திரங்கள், தட்டுகள், குவளைகள்....)

iv கட்டிடங்கள்—(புதுக்கட்டிடம் கட்டுதல், புது வகுப்புக்குத் தேவையான கொட்டகை போடுதல், ஆசிரியர்க்கு இல்லங்கள்)

v கக்கூசுகள் கட்டுதல், சுற்றுச்சுவர்கள் எழுப்புதல்.

vi இசைக்கருவிகள், விளையாட்டுச் சாதனங்கள் தொழிற் கருவிகள்.

vii ரொக்கப்பணம், நகை—

இவை போன்ற எண்ணிறந்த வகைகளில், மக்கள் பள்ளிகளுக்கு உதவி வருகிறுர்கள். மக்களின் வலிமையும் வள்ளற்றன்மையும் உள்ளொளியால் உணர்ந்து, ஊரெல்லாம் எடுத்தோதி, ஊழியர்களை ஒரு முகத்துடன் தொண்டாற்ற ஊக்கித் தானும் அல்லும் பகலும் இடைவிடாது உழைத்து, இந்தத் திட்டத்தைத் தொடக்கிவைத்தவர் நமது மாநிலப் பொதுக்கல்வி இயங்குநர் உயர்திரு. நெ. து. சுந்தரவடிவேலு அவர்களே. நாடு இதுகாறும்

கண்டிராதவகையில் மக்களின் மனத்தைப் பள்ளிகளிற் கான தொண்டுக்காகத் திருப்பி அரும்பெரும் சாதனை களைச் சுமார் இரண்டு ஆண்டுகளுக்குள் காட்டிய ஒப்பற்ற பெருமை அவருக்கே உரித்தானது. அவர்களுக்கு ஆசிரியர்களும், பொதுமக்களும், சிறு குழந்தைகளும் என்றென்றும் கடமைப்பட்டுள்ளார்கள்.

இதுவரை ஏறத்தாழ 50 மாநாடுகள் மாநிலமெங்கும் பல்வேறிடங்களில் நடந்துள்ளன. ஒவ்வொன்றின் வாயி லாக லட்சக்கணக்கான ரூபாயும், பல்வேறு பொருள் களும் பள்ளிகளுக்குக் கிடைத்துள்ளன. 'பள்ளிச் சீரமைப்பு மாநாடு' என்று அவை பெயரிடப்பட்டுள்ளன. கடம்பத்தூர் வட்டாரத்தில், இரண்டாவது முறையாகப் பள்ளிச் சீரமைப்பு மாநாடு நடந்துவிட்டது.

இத்தகைய மாநாடுகளை ஆசிரியர் நன்கு பயன்படுத் திக் கொள்ளவேண்டும். தம் பள்ளியின் தேவைகளை மக்க ளுக்கு எடுத்துக்கூறி, அவர்களுடைய உதவியைக் கோர வேண்டும்.

நமது இயக்குநர் குறைந்தபட்சமாக, ஒவ்வொரு பள்ளியும் கீழ்க்கண்ட ஐந்துக்குப் பாடுபட வேண்டும் எனக் கூறியுள்ளார் :—

1. ஆண்டுதோறும் கரும்பலகைகளுக்கு கறுப் படித்தல், 2. வெள்ளைச்சுவர்களுக்கு வெள்ளையடித்தல், 3. மலஜலம் கழிக்கும் வசதிக்குக் கக்கூசு அமைத்தல், 4. உடல் நலத்திற்கேற்ற குடிநீர் வசதி செய்தல், 5. நூல் நிலைய வசதி ஏற்படுத்துதல்.

## நேருஜியின் மூன்று கட்டளைகள்

ஒரு கிராமம் செழித்தோங்க (1) பள்ளி, (2) பஞ்சா யத்து சபை, (3) கூட்டுறவுச் சங்கம் ஆகிய மூன்றும் இன்றியமையாதவை எனச் சொல்லியுள்ளார்.

முற் கூறியவாறு பள்ளிக்கு, ஆசிரியர் சிறந்த வகைகளில் தொண்டாற்றல் கூடும்.

# 9

# கண்காட்சிகளும் பொருட்காட்சிகளும்

[கண்காட்சிகளையும் பொருட்காட்சிகளையும் தேசீயக் கல்விக்கும், பொது மக்கள் கல்விக்கும் கருவிகளாகப் பயன்படுத்திக் கொள்ளுதல்; அவற்றைப் பயன்படுத்தி வெற்றி பெறுவதற்கான நிபந்தனைகளும் வழிமுறைகளும்; பிறர் நாடுகளில் அவற்றைப் பயன் படுத்திய வரலாறு.]

**கண்காட்சிகள் :**

தற்காலச் சமூக வாழ்வில், கண்காட்சிகள் முக்கியமானதோர் இடத்தைப் பெற்றுவிட்டன. நாடெங்கும் கண்காட்சிகள் பல பல நடத்தப் படுகின்றன. அவற்றை நடத்துவதில் அரசினரும், நகராண்மைக் கழகத்தாரும் பொது நிறுவனங்களும், வணிகர்களும், தனிப்பட்டவர்களும் பேரக்கறை கொண்டுள்ளனர். வெளி நாட்டினரும் நம் நாட்டிற்கு வந்து கண்காட்சிகள் நடத்துகின்றனர். அதைப்போன்று வெளி நாடுகளில் நடக்கும் கண்காட்சிகளில் நம் நாட்டினரும் பங்கு கொள்வதும் நிலைத்து விட்டது.

சிறியதும், பெரியதுமான கண்காட்சிகள் ஆண்டு முழுவதிலும், திங்கள் தோறும் ஏதாவது சில நகரங்களில் நடக்காமல் இருப்பதில்லை. சில 2, 3 நாட்கள் மட்டுமே நடைபெறுகின்றன. சில ஒரு திங்கள், சில இரண்டு திங்கள், சில ஆறு திங்கள் காலம் நடைபெறுகின்றன. கண்காட்சிகளுக்கு ஆண்களும், பெண்களும், குழந்தைகளுமாக அதாவது குடும்பம் குடும்பமாகப் போவது பழக்கத்தில் வந்துவிட்டது.

சென்னை போன்ற மாநகரங்களில், கண்காட்சிபருவம் (Exhibition Season) என்று சொல்லக்கூடிய காலம் நிலைத்துவிட்டது. பொதுவாக, டிசம்பர், ஜனவரி திங்கள்களில் சென்னையில் ஆண்டுதோறும் காங்கிரஸ் கண்காட்சி

மாபெரும் அளவில் நடந்து வருகிறது. மதுரை போன்ற பெரிய நகர்களில் கோயில் திருவிழாக் காலத்தை ஒட்டி கண்காட்சிகள் ஆண்டுதோறும் அமைக்கப் பெறுகின்றன. டெல்லி மாநகரில் மகத்தான கண்காட்சியான **இந்தியா 1959** என்னும் கண்காட்சி, பல திங்கள் வரை அண்மையில் நடந்தது உங்களுக்கு நினைவிருக்கலாம்.

சென்னையிலும், பிற இடங்களிலும் நடந்து வரும் சில முக்கிய கண்காட்சிகளின் பட்டியல் ஒன்றைக் கீழே பாருங்கள்:-

**சென்னை**—காங்கிரஸ் கண்காட்சி, மருத்துவக் கண்காட்சி சமாதானத்திற்காக விஞ்ஞானம் (Science for peace) கைத்தறித்துணி கண்காட்சி, பழங்களின் கண்காட்சி, குடிசைத்தொழிற் கண்காட்சி, சர்வோதய கண்காட்சி மூத்தோர் சித்திரக் கண்காட்சி, சிறுவர் சித்திரக் கண்காட்சி, அகில உலகக் குழந்தைகளின் பொம்மைக் கண்காட்சி, புத்தகக் கண்காட்சி, அச்சுவேலை முன்னேற்ற கண்காட்சி, பத்திரிகைக் கண்காட்சி, மலர்களின் கண்காட்சி, வனவிலங்கு விழா பவனிக் காட்சி, இசைக் கருவிகளின் கண்காட்சி, தேசீய திட்டக் கண்காட்சி, ரேடியோ கண்காட்சி, பிலிப்ஸ் நிறுவனத்தார் நடத்திய மின் விளக்கு கண்காட்சி போன்ற பல கண்காட்சிகள்.

**உதகை**—நாய்கள் கண்காட்சி

**கோயமுத்தூர்**—மாடுகள் கண்காட்சி

**மதுரை, சேலம் போன்ற நகர்கள்**—
முனிசிபல் கண்காட்சிகள், ஆஸ்பத்திரிநாள் விழாக் கண்காட்சி.

இவற்றோடுகூட தேசீய விஸ்தரிப்புத் திட்டங்கள் அமுலில் இருக்கும் சிற்றூர்களிலும் கண்காட்சிகள் நடத்தப்பட்டு வருகின்றன.

சில கண்காட்சிகளை இலட்சக் கணக்கில் பொது மக்கள், குழந்தைகள் உள்பட பார்வையிட வருகிறார்கள்.

அவற்றினுல் பெரும்பயன் அடைகிறுர்கள். இவ்வாறு கண் காட்சிகள் நம் சமூக வாழ்வில் ஒரு கவர்ச்சிகரமான, நிரந்தரமான, பொதுமக்களுக்கும், குழந்தைகளுக்கும் மிக்க உபயோகமுள்ள அங்கமாய் வளர்ந்துவிட்டது. இத்தகைய வன்மையுள்ள கண்காட்சிகளே தேசியக் கல்விக்கும் (சிறுவர் சிறுமியர்க்கும்) பொது மக்கள் கல்விக்கும் பயன் படுமாறு அரசினர் மேலும்மேலும் முயன்று வருகின்றனர்.

கண்காட்சிகள் மேற்சொன்னவாறு கல்விப் பயனே அளிக்கவேண்டுமாளுல் சில நிபந்தனேகளே அவை நிறை வேற்ற வேண்டும். பொது மக்களும் சிறுவர் சிறுமியரும் சில வழி முறைகளேப் பின்பற்ற வேண்டும். அவற்றைப் பற்றிக் கருது முன்னர், கண்காட்சிகள் தோன்றி வளர்ந்த வரலாற்றினேயும் பிற நாடுகளில் அவற்றை உபயோகித்து வெற்றி பெற்ற முறைகளேயும் அறிந்துகொள்வது நன்மை தரும்.

**கண்காட்சிகள் தோன்றிய வரலாறு :**

நமது நாட்டில் கண்காட்சிகள் பழங்காலத்தில் நடந்துவந்ததாகத் தெரியவில்லே. அவை மேல் நாடு களின் படைப்புகளில் ஒன்ருகும். அங்கும் கண்காட்சிகள் தோன்றின காலம், இடம் ஆகியவைபற்றி எதுவும் திட்டமாகக் கூறமுடியாது. நம்நாட்டில் ஆங்காங்கு சில இடங்களில் நாளிதுவரை நடைபெறும் வாரச்சந்தைகள் போன்று, மேலே நாடுகளில், Fairs (பொருள்கள் விற்கப்படும் சந்தைகள்) தாம் நடந்துவந்ததாகத் தெரிகிறது. எளிய அச்சந்தைகளில் இருந்து தான் தற்காலத்தைய கண்காட்சி உருவெடுத்து வளர்ந்து ஓங்கியிருக்கிறது. அக்காலத்தில் சாமான்கள் குறைவு. அவற்றை ஓரிடத்திலிருந்து மற்ருேரிடத்திற்கு எடுத்துச் செல்ல நல்ல சாலேகள் கிடையா. சந்தை கூடுமிடங்களி லும் பொருளுக்குத் தீ, திருட்டு முதலிய அபாயங்களும் இல்லாமல் இல்லே. எனவே, ஒவ்வொரு நாட்டிலும் ஆங்காங்கு ஒரு சில முக்கியமான மைய நகரங்களில்,

அதாவது வசதி உள்ள இடங்களில் மட்டுமே சந்தைகள் நடந்து வந்தன. மக்கள் திரளாகக் கூடும் சமய விழாக்களை ஒட்டியே மேற்கூறிய சந்தைகள் கூடின. மிகப் பெரிய, புகழ் வாய்ந்த சந்தை 'பாரீஸ்' நகரத்தில் கி.பி.629 முதல் நடந்து வந்ததாகத் தெரிகிறது. 11-ம் நூற்றுண்டில் 'கொலோங்கு'(Cologne) என்னும் நகரில் பெரிய வெள்ளிச் சந்தை (Easter Fair) மிகப்புகழ் வாய்ந்ததாய் இருந்தது. அவ்வாறே 12-ம்நூற்றுண்டில் 'ஷம்பாங்கு'(Champagne) என்னும் நகரில் நடந்து வந்த சந்தை இருநூறு ஆண்டுகள் தொடர்ந்து நடந்து வந்ததாகத் தெரிகிறது. இவ்வாறு நீண்டகாலம் நில மார்க்கத்தைமட்டுமே சந்தையில் ஈடுபடுவோர் பயன்படுத்திவந்தனர். ஆனால் முதல் முதலாக, 14, 15-ம் நூற்றுண்டில் வெனிஸ் நகரக் கப்பலோட்டிகள் கடல் வழியாக வணிகப்பொருளை ஏற்றிச் செல்ல முன் வந்தனர். அதன் விளைவாய் 'ஆண்ட்வர்ப்' (Antwerp) என்னும் நகரில் புதுச் சந்தை கூடுமிடம் தோன்றி பெரும் புகழ் எய்திற்று. இதைப்போல வேறு புதிய சந்தை கூடுமிடங்களும் தோன்றின. இதெல்லாம் ஐரோப்பாவிலுள்ள நாடுகளில் நடந்த சந்தைகளாகும். அதுவரை இங்கிலாந்தில் புகழ் பெற்ற பெரிய சந்தை கூடுமிடங்கள் இருந்ததாகத் தெரியவில்லை.

**தற்காலத்தைய வளர்ச்சி :**

பதினாரும் நூற்றுண்டிலிருந்து சமூகத்தில் பொருளாதார மாற்றங்கள் ஏற்பட்டன. தொழிற் புரட்சிஏற்பட்டது. புதிய புதிய கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டன. ஆலைகள் ஆங்காங்கு தோன்றின. உற்பத்தி பெருகிற்று. ஆலைகளுக்கு மூலப்பொருள்கள் தேவையாயின. அவை தொலைவிலிருந்து வரவேண்டியிருந்தன. இத்தகைய பொருளாதார மாறுதலால் வியாபாரம், ஒன்றிரண்டு தனிப்பட்டவர்கள் கையில் இருக்க முடியாது போயிற்று. தொழில்களுக்கு ஏராளமான முதலீடும், ஏராளமான தொழிலாளிகளும் தேவைப்பட்டனர். ஆகவே, கூட்டு நிறுவனங்களும்

பாங்குகளும் ஏற்படலாயின. கூடவே, வணிகப் போட்டியும் எழுந்தது. பொருள்களை வாங்குவோர் அவற்றின் மாதிரிகளை (Sample) முன்கூட்டிப் பார்க்க விரும்பினர்.

**கண்காட்சிகளின் உதயம்;**

உற்பத்திப் பொருள்களின் தரம், நேர்த்தி, அளவு ஆகியவற்றை மக்களுக்கு நேரில்காட்டி அவற்றை வாங்கச்செய்ய ஊக்கவேண்டி இருந்தது. பிற நாட்டு வியாபாரப் போட்டியை முறியடிக்க வேண்டியிருந்தது. இவற்றின் பயனாய் பொருள்களை நேரில் காட்டும் கண்காட்சிகள் தோன்றலாயின. கொஞ்சம் கொஞ்சமாகச் சந்தைகள் மறையலாயின.

**சந்தைக்கும் கண்காட்சிக்கும் உள்ள வேறுபாடுகள் :**

| சந்தை | கண்காட்சி |
|---|---|
| 1. பொருள்கள் அருமையாய்க் கிடைத்த காலத்தைச் சேர்ந்தது. | 1. பொருள்கள் ஏராளமாய்க் குவியும் இக்காலத்திற்குரியது. இயந்திர உற்பத்திக் காலத்திற்குரியது. |
| 2. மையமான விற்பனை நிறுவனமாய் இருந்தது | 2. காட்சிப் பொருள்களையோ அவற்றின் மாதிரிகளையோ மக்களுக்கு நேரில் காட்டி வாங்கச் செய்யும் நிறுவனமாய் இருக்கிறது. |

**கண்காட்சியின் மூல நோக்கங்கள் :**

1. புதிய கண்டுபிடிப்புகளையும், புதிய கருவிகளையும் மக்களுக்குக் காட்ட

2. உற்பத்திப் பொருள்களையோ, அவற்றின் மாதிரிகளையோ வணிகர்களுக்குக் காட்டி அதன் மூலமாக வாணிபத்தைப் பெருக்க

3. பிறநாட்டுச் சாதனைகளோடு ஒப்பிட்டுப் பார்த்து நிறைகுறை காண உதவ

4. கலாச்சாரம், தேசீய வாழ்வு, பொருள் உற்பத்தி ஆகியவற்றில் உள்ள சாதனைகளைப் பொது மக்களுக்கு எடுத்துக் காட்டி அவர்களை ஊக்க

5. நாட்டின் மதப்பண்பையும் ஒருவாறு காட்டிப் பெருமை பெறச்செய்ய

**பழங்காலக் கண்காட்சிகளிற் சில :**

வரலாறுகளிற் குறிக்கப் பட்டுள்ள முதல் கண்காட்சி ஸெர்க்ஸஸ் (Xerxes) என்பவரால் மிகப் பழங்காலத்தில் நடத்தப்பட்டதாகும். அது 180 நாட்கள் நடந்ததாம். அம் மன்னரின் ஆட்சிக்குட்பட்ட சிற்றரசர்கள், பிரபுக்கள் ஆகியவர்களை வியக்கச் செய்யும் நோக்கத்துடன் அது நடத்தப்பட்டது. அவரது மட்டற்ற ஆடை ஆபரணங்களையும், பொன்னையும், பிற வளங்களையும் அங்கு அவர் காட்சிப் பொருள்களாக வைத்திருந்தாராம். இது எஸ்தர் (Esther) என்ற விவிலிய நூலிலிருந்து தெரியவருகிறது. வேறுசில கண்காட்சிகள் பின்வருமாறு

1269—வெனிஸ் நகரில் கைத்தொழிற் கண்காட்சி நடந்தது.

1789—விரிப்புகள், சமுக்காளங்கள், தொங்குதிரைச் சீலைக் காட்சிகள் (Tapestries), பீங்கான் பாத்திரங்கள் (Porcelain) முதலியவை பாரிஸ் நகரில் கண்காட்சியில் வைக்கப்பட்டன.

1790—பாரிஸ் நகரில் **கலைப்** பொருள்களின் கண்காட்சி நடந்தது.

1851—லண்டன் மாநகரிலுள்ள ஹைட் பார்க் (Hyde Park) என்னுமிடத்தில் முதல் **சர்வதேசக் கண்காட்சி** நடந்தது.

**முதல் லண்டன் கண்காட்சியின் தனிச்சிறப்புகள் :**

1851-ஆம் ஆண்டு லண்டனில் நடந்த அக்கண் காட்சி மிக மகத்தான ஒரு கண்காட்சியாகும். அது வரை உலகத்தில் வேறு எந்த நாட்டிலும் அத்தகைய கண்காட்சி நடந்ததேயில்லை. அது 21 ஏக்கர் நிலத்தில் நடைபெற்றது. அதில் 14000 வணிகர்கள் தம் காட்சிப் பொருளைக் காட்டினார்கள். சுமார் 3 லக்ஷம் பவுன் செலவழிந்தது. 60 லக்ஷம் மக்கள் அதைப் பார்வையிட்ட னர். இறுதியில் 20 ஆயிரம் பவுன் நிகரலாபமும், கண் காட்சி நடத்துவதற்கெனக் கட்டப்பட்ட பளிங்கு மாளிகை ஒன்றும், மூலச்சொத்தாய் எஞ்சி நின்றது. அதில் இங்கிலந்து நாட்டு வணிகர்களைத் தவிர பிற பல நாட்டு வணிகர்களும் கலந்து கொண்டது குறிக்கற்பாலது. முதன் முதலாக, சமாதான நோக்குடன் பல்வேறு நாடு கள் கலந்து கொண்ட,முதல் சர்வதேசக் கண காட்சி என அனைவரும் புகழலாயினர்.

அதை 1—5 –1851 அன்று இங்கிலாந்து அரசியார் திறந்து வைத்தார். பிரபுக்கள் தம்மாளிகையிலுள்ள பணி ஆட்களை அக்கண்காட்சியைப் பார்த்துவர ஒன்றி ரண்டு நாள் விடுமுறையும், கட்டணத்தொகையும் கொடுத்து அனுப்பினார்களாம். பிரான்ஸ் நாட்டிலிருந்து ஏராளமான தொழிலாளிகள் அதனைப் பார்த்துப பயன் பெற அந்நாட்டு அரசினரால் அனுப்பப்பட்டனராம்.

அந்நாள்வரை, சமூகத்திலும், கைத்தொழிலிலும், கலையிலும், அடைந்திருந்த முன்னேற்றததை மக்கள் கண்கூடாக அக் கண்காட்சியில் காண முடிந்ததாம்.

அம் மாபெரும் கண்காட்சியினால் பொது மக்களுக்கு ஏற்பட்ட நற்பலன்களைப் பின் வருமாறு கூறலாம்:—

**பொதுமக்களுக்கு :** பொருள்களின் தரம், மதிப்பு, அழகு ஆகியவற்றை ரசிக்கக்கற்றனர்கள். கலைரசனையை

ஏற்படுத்தியது. கண்காட்சிப் பொருள்களைப் பார்ப்பதில் பல கல்விப் பயன்கள் கிட்டுகின்றன எனக்கண்டனர்.

அதுவரைகண்ட முன்னேற்றத்தில் பூரிப்பும், மேலும் முன்னேற ஊக்கமும் பெற்றார்கள்.

தம் நாட்டுப் பொருள்களே சிறந்தவை என்றிருந்த கிணற்றுத் தவளை மனப்பான்மை மறையத்தொடங்கியது. காட்சிப் பொருள் கொணர்ந்த வணிகர்களுக்கும் பிறநாட்டுப் பிரதிநிதிகளுக்கும் ஏற்பட்ட நன்மைகளைப்பற்றி இங்கு விவரிக்காது விடுத்தனம்; அவற்றோடு நமக்கு நேர் தொடர்பில்லை.

**இதன் பிற விளைவுகள் :**

உயர் வென்றும், தாழ்வென்றும் பாராது, பிரபுக்களும் தொழிலாளிகளும் பழக வாய்ப்பளித்தது. அரசியே கண்காட்சியைப் பார்த்து ரசித்தாள். அதைப்பற்றித் தனது நாட் குறிப்பில் எழுதி யுள்ளாள்.

பொது மக்களுக்கும், சிறார்க்கும் நல்ல **கல்விப்பயனை** அளித்தது. இக்கண்காட்சியின் விளைவாய்ப் புதிய பொருட்காட்சிகள் (Museums) உண்டாயின. கலைப்பொக்கிஷங்களும் (Art Galleries) ஏற்பட்டன,

இதனைப் பின்பற்றி ஐரோப்பிய நாடுகள், வட அமெரிக்க ஐக்கிய நாடுகள் ஆகியவை போட்டியிட்டுக்கொண்டு பல்வேறு கண்காட்சிகளை நடத்தத் தொடங்கின. அவற்றுள் முக்கியமானவற்றைக் கீழே தருகிறோம்.

1855—பாரிஸ்
1862—லண்டன் 1951—பிரிட்டன் விழா
1873—வீயென்னு
1878, 1889—பாரிஸ்
1893—சிகாகோ
1901—கிளாஸ்கோ
1904—ஸெயிண்ட் லூயி
1937—பாரிஸ்
1939—நியூயார்க்

**கண்காட்சிகள் மேலும் வளர்ந்த வரலாறு :**

முன் நடந்துள்ள கண்காட்சிகளைத் தோற்கடிக்கும் அளவிற்குப் பின் நடந்த கண்காட்சிகள் ஒவ்வொன்றும் திட்டமிட்டு நடத்தப்பட்டன. ஒவ்வொன்றிலும் புதுப்புது அம்சங்கள் புகுத்தப்பட்டன. கேளிக்கை, விளையாட்டு, தமாஷ் ஆகியவை கண்காட்சிகளில் இடம் பெற்றன. பெருத்த அளவில், கடிதில் உணவளிக்க வேண்டிய நிலை நேர்ந்தது. ஆண்டுக்காண்டு கண்காட்சிகள் மிகமிகப் பெரியதாயின. நடத்தப்பட்ட காலம் மிக மிக நீண்டது. அவற்றை நடத்துவதில் பொறுப்புகள் மிகுந்தன. கண்காட்சிகளைத் திட்டமிட்டு நடத்துவது ஒரு பெரும் பிரச்சினை ஆயிற்று. அவற்றின் வளர்ச்சியைக் கண்டு நிர்வாகிகளும் அரசினரும் அஞ்சினர். அவற்றைச் சுருக்கிச் சிறிதாக நடத்துவதுடன், ஆங்காங்கு சில பொருள்களைக் கொண்ட நிலைத்த பொருட்காட்சி சாலைகள் (Museum) அமைக்கவும் எண்ணலாயினர்.

பின், 1889-ல் பாரிஸில் நடந்த கண்காட்சியின் விளைவாய், உலகத்திற்கு 1000 அடி உயரம் கொண்ட இரும்புக் கட்டிட அதிசயமான எய்ஃபெல் டவர் (Eiffel Tower) கிட்டியது. 1937-ல் பாரிஸ் நகரத்தில் நடந்த கண்காட்சியில் ருஷியா, ஜெர்மனி ஆகிய இரு நாடுகளும் தத்தம் போர்த்தளவாடங்களைக் காட்டி பிற நாடுகளைத் திடுக்கிடச் செய்தன. அந்த அளவுக்கு அவை முன்னேறியிருந்தன. 1939—1945-ல் நடந்த 2-வது உலக யுத்தத்திற்கு அவை ஒரு முன்னோடியாக அமைந்திருந்தன என்று அறிஞர்கள் கூறுகிறார்கள். 1904-ல் ஸெயிண்ட்லூயி என்னுமிடத்தில் நடந்த கண்காட்சியில் மோட்டார் கார், ஆகாய விமானம், கம்பியில்லாத்தந்தி ஆகிய துறைகளின் முன்னேற்றம் காட்டப்பட்டிருந்தது. 1939-ல் நியூயார்க்கில் நடந்த மாபெரும் கண்காட்சியில் **'குடியரசின் பெருமை'** (Glorification of Democracy) என்னும் அரிய, புதுக் கண்காட்சி இடம் பெற்றிருந்தது

குறிக்கற்பாலதாகும். அதில் மற்ருெரு சிறப்பு, பார்க்க வரும் லட்சக்கணக்கான மக்களுக்குக் கால் வலி எடுக்கும்போது அமர்ந்து இளைப்பாற, ஐம்பதினுயிரம் பெஞ்சுகள் அமைக்கப்பட்டிருந்ததாகும்.

1951-ல் லண்டனில் **'பிரிட்டனின் விழா'** (Festival of Britain) என்ற மாபெரும் கண்காட்சி நடந்தது. அது ஐந்து தனிப்பட்ட ஊர்களில் நடந்தது. அதன் உறுப்பாய் **'கிளாஸ்கோ'** (Glasgow) மாநகரில் நடந்த பளுவான பொறிகளின் கண்காட்சி (Heavy Engineering) குறிக்கற்பாலது. அங்கு தனிப்பட்டவரின் பொருள்கள் காட்டப்படவில்லை. அரசினரே கண்காட்சி நடத்தி நாட்டின் முன்னேற்றத்தை மக்களுக்குக் காட்டிப் பெருமையுறச் செய்தனர்.

**கண்காட்சிகளும் அரசினரும் :**

இவ்வாறு, கண்காட்சிகளில் வணிகர்களோடு அரசினர்களும் பங்கு கொள்ளலாயினர். ஒவ்வொரு அரசும் தத்தம் மக்களுக்கு ஒவ்வொரு துறையிலும் என்னென்ன சாதித்துள்ளார்கள்; என்னென்ன செய்யத் திட்டமிட்டுள்ளார்கள் எனக்காட்ட முன் வந்தது. கல்வி, விஞ்ஞானம், கலை, மருத்துவம், விவசாயம், மின்சாரம், நெடுஞ்சாலை, அஞ்சல், பொதுக்காவல், காடு போன்ற ஒவ்வொரு துறையின் முன்னேற்ற வரலாறு அனைத்தும், ஆதி முதல் அந்தம் வரை படங்கள் மூலமாகவும், மாதிரிகள் மூலமாகவும் காட்டப்பட்டன. நுட்பமான விஞ்ஞான விஷயங்களை நேரிலேயே செய்துகாட்டிப் பொதுமக்களுக்குக் கல்வி ஊட்டலாயினர். எடுத்துக் காட்டாக, தீயணைப்பது, திருடர்களைக் கண்டுபிடிப்பது, அபாயங்களில் உதவுவது, தொலை பேசி இயங்குவது, ரேடியோ இயங்குவது, சாலைகளும், பாலங்களும் அமைப்பது போன்ற எண்ணிறந்த அரசாங்க வேலைகள் அனைத்தும் நிதரிசனமாகக் காட்டப்பட்டு விளக்கப்பட்டன. பல துறைகள் ஈடுபடுவதினுல் ஏற்படும் விரும்பத்தக்கப் போட்டியின் விளைவாய்

ஒவ்வோர் உறுப்பிலும் அழகும் கலையும் புகத்தொடங்கி ஆண்டுக்காண்டு வளரலாயின. மக்களுக்கு இன்பம் ஊட்டும் வகையில் இசையும், நடனமும், நாட்டியமும், கிராமியக் கூத்துக்களும் புத்தொளி பெற்று வளரலாயின. இவ்வாறு, கண்காட்சிகளால் மக்களுக்குப் பயன்படும் எல்லாத் துறைகளிலும் கல்விப்பயன் கிட்டலாயிற்று.

**சென்னைக் கண்காட்சிகள் :**

முன்னமேயே, சென்னை மாநகரில் நடக்கும் கண் காட்சிகளின் பட்டியல் ஒன்றைத் தந்துள்ளோம். அவை மனித வாழ்வின் எல்லாத் துறைகளையும் தழுவி வருகின் றன என்பதை நீங்கள் எளிதில் காணலாம். இப்பொழுது எந்த மாநாடு நடந்தாலும், அதை யொட்டி ஒரு கண் காட்சி நடப்பது பழக்கத்தில் வந்துவிட்டது. சொற் பொழிவுகளையும், நூல்களையும் விடக்கண்காட்சி சிறந்த பலனைத் தருகிறது. சென்னையில் ஆண்டுதோறும் நடக் கும் காங்கிரஸ் கண்காட்சி பல்லாண்டுகளாகப் பொது மக்களுக்கும், குழந்தைகளுக்கும் சிறந்த கல்விப் பயனை அளித்து வருகிறது. சென்னை அரசாங்கத்தின் ஒவ்வொரு துறையும் அதது ஆற்றிவரும் தொண்டினைக் கண்காட்சியில் கண்கவர் வகையாய் காட்டி வருகிறது. பொதுமக்கள் பல்லாயிரக் கணக்கில் வந்து பார்த்துக் கல்விப் பயன் பெறுகிறார்கள்.

**கண்காட்சிகள் கல்விப் பயனைத் தரவேண்டுமானால் ?**

1. கண்காட்சிகள் சிறிய அளவில் இருக்கவேண்டும்.

2. விவசாயம், கல்வி, கால்நடை, கைத்தறி, கனி வகைபோன்ற ஒவ்வொரு துறைக்கும் தனித்தனிக் கண் காட்சி அமைப்பது நலம்.

3. சில எளிய நடமாடும் கண்காட்சிகள் கிராமங் களுக்குப் போய்வருவது நலம்.

4. தொழில்களைச் செய்துகாட்டுபவர்கள், நாட்டு முன்னேற்றத்தில் அக்கறை கொண்டுள்ளவர்களாகவும், செய்து காட்டுவதிலும் விளக்குவதிலும் வல்லுநர்களாகவும், கண்காட்சியில் ஆர்வம் உடையவர்களாகவும் இருத்தல் வேண்டும்.

5. கிராமத்திலுள்ள ஒவ்வொரு ஆணும் பெண்ணும் கண்காட்சியைப் பார்த்துவர ஊக்க வேண்டும்.

6. கண்காட்சியின் விளைவை ஒவ்வொரு சிற்றூரும் எந்த அளவுக்குப் பயன் படுத்தியுள்ளார்கள் என நிர்ணயிக்க, மதிப்புக் கமிட்டி ஒன்று நிறுவவேண்டும்.

**பொருட்காட்சிகள் :**

**தொடக்கம் :**—பொருட்காட்சிகளும் மேல் நாட்டாரின் படைப்பே ஆகும். அபூர்வமானவையும், பழைமையானவையும், வேலைப்பாடுகள் அமைந்தவையுமான பொருள்களை ஓரிடத்தில் சேர்த்து வைத்துத் தான் ரசிப்பதுடன், பிறரையும் ரசிக்கச் செய்வது ஒரு சில மக்களின் சிறப்பான இயல்பாய் நாளிதுவரை இருந்துவருகிறது. அதன் விளைவாய்வந்த உருவே பொருட்காட்சி சாலை ஆகும்.

பொருட்காட்சி சாலைக்கு ஆங்கிலத்தில் மியூசியம் (Museum) என்று சொல்வார்கள். அச்சொல் கிரேக்க மொழியைச் சேர்ந்தது ஆகும். சங்கீத தேவதை என்ற பொருள் கொண்ட Muse என்ற சொல்லிலிருந்து அது வந்ததாகும். மியூசியம் (Museum) என்ற அந்த ஆங்கிலச் சொல் 'சங்கீத தேவதையின் கோயில்' என்று பொருள். மிகமிகப் பழங்காலத்தில் இலக்கியமும் நற்கலைகளும் எங்கெங்கு பயிலப்பட்டனவோ அந்த இடங்களை எல்லாம் மியூசியம் எனக் கூறிவந்தனர். அலெக்ஸாண்டர் என்பவரால் நிறுவப்பட்ட 'அலெக்ஸாண்டர் மியூசியம்' ஒரு பெரிய நூலகமாகவும், அறிஞர்களின் இல்லமாகவும், அவர்கள் ஆராய்ச்சி நடத்தும் ஆய்வுக்கூடமாகவும்

இருந்து வந்தது. அதைத்தான் உலகத்தின் முதல் பொருட்காட்சி என்கிருர்கள் ஆராய்ச்சிக்காரர்கள். தற்காலப் பொருட்காட்சிச் சாலேக்கும் அதற்கும் பல வேறுபாடுகள் உள்ளன.

17-ஆம் நூற்ருண்டில் மேலேநாட்டு மன்னர்களும், பெரிய பிரபுக்களும், கலே ரசிகர்களும் திரட்டு ஊக்கத்தால் உந்தப்பட்டு, சில அருமையான கலேப்பொருள்களே அவர்களது சொந்த மாளிகைகளில் தம் சொந்த இன்பத்திற்காகவே திரட்டி வைத்திருந்தனர். பிறருக்கு அவற்றைக் காட்டுவதில்லே. போரில் வெற்றிக்குப் பின்னரும், பிற நாடுகளில் பயணம் செய்து வந்த காலத்திலும் திரட்டியவை அவை. சிலர் பழங்காலப் பொருள்களேயும், போர்க்கருவிகளேயும், திரட்டி வந்தனர். சிலர் பழங்கால விலங்குகள், பறவைகள், ஆகியவற்றின் எலும்புக் கூடுகளேத் திரட்டிவந்தனர். சிலர் கையெழுத்து மூலப்பிரதிகளேத் திரட்டி வந்தனர். இவ்வாறு அவரவர்க்கு இன்பமளித்த பொருள்களேத் திரட்டி வந்தனர். போர்களாலும், தீயினுலும், பல திரட்டுகள் அழிந்து போயின. எஞ்சியவற்றை மீண்டும் சிலர் திரட்டி வந்தனர். எனினும், 19-ஆம் நூற்ருண்டில்தான் ஒழுங்கான திட்டமிட்டு அமைக்கப்பட்ட பொருட்காட்சிகள் அமையத் தொடங்கின.

**நவீன பொருட்காட்சிசாலேயின் உதயம்:**

ஸர்ஹான்ஸ் ஸ்லோன் (Sir Hans Sloane) (1660-1773) ஸர் ராபர்ட்காட்டன் (Sir Robert Cotton) ஹார்லி (Harley) போன்ற அரும்பொருள் திரட்டுபவரிடமிருந்து கிடைத்த பொருள்களேக் கொண்டுதான் லண்டனிலுள்ள உலகப் புகழ்பெற்ற பிரிட்டிஷ் பொருட்காட்சி உருவாயிற்று. அவற்றைப் பலர் தினசரிப்பார்க்கவந்தனர். பொருட்காட்சி சாலேகள் பொதுமக்கள் கல்விக்கு ஒருவாறு உதவலாயின. அதன் விளேவாய் 19-ஆம் நூற்ருண்டின் பிற்பகுதியில் ஆங்காங்குள்ள நகர்களிலும், இங்கிலாந்திலும் நகராண்

மைக்கழகப் பொருட்காட்சி சாலைகள் பல எழலாயின. நம் நாட்டில் அத்தகைய 'முனிசிபல்' பொருட்காட்சி சாலைகள் நாளிதுவரை எழவில்லை. மாநிலத் தலைநகர் சென்னையில் மட்டுமே ஒரு சிறந்த பொருட்காட்சி உள்ளது.

பிற்பாடு, விஞ்ஞானக் கழகங்களால் சில தேசிய சர்வ கலாசாலைப் பொருட்காட்சி சாலைகள் ஏற்படுத்தப்பட்டன. அவை ஒழுங்காகத் திட்டமிடப்பட்டு, விஞ்ஞானமுறையில் அமைக்கப்பட்டன. அவற்றின் அமைப்பை முன் மாதிரியாகக் கொண்டு, மற்ற பொருட்காட்சிகள் திருத்தி அமைக்கப்பட்டன. நாளடைவில் கட்டிட அமைப்பு, பொருட்களைத் திரட்டல், பொருள்களை வகைப்படுத்துதல், கலையாக அமைத்துக் காட்டல், குறிப்புக்கள் வைத்தல், பார்வையாளருக்கு விளக்கிக்கூறல், சம்பந்தப்பட்ட கண் காட்சி நடத்துதல், இலக்கியங்கள், துண்டுப் பிரசுரங்கள், சார்ட்டுகள் தயாரித்தல், பொருட்காட்சி சாலைகளை அமைக்கும் முறைகளைப்பற்றி ஆசிரியர்களுக்குக் குறுகிய காலப் பயிற்சி அளித்தல் போன்ற உட்பகுதிகள் தோன்றி யுள்ளன. இவ்வாறு சிறுகச் சிறுகச் சமூக வாழ்வில் பொருட்காட்சிசாலைகள் முக்கியமானதோர் அங்கம் வகிக்கத் தொடங்கின. அவற்றின் உபயோகத்தை இன்னும் பெருக்க முயன்றுவருகின்றனர் அரசினர்.

உலகில் சுமார் 8,000 பொருட்காட்சி சாலைகள் உள்ளன. அவற்றில் பெரும்பாலும் ஐரோப்பாவிலேயே உள்ளன. இங்கிலாந்தில் மட்டும் சுமார் 800 பொருட் காட்சி சாலைகள் உள. இந்தியாவில் பெரிய நகர்களில் மட்டுமே கண்காட்சிகள் உள்ளன.

**லண்டன் :**

லண்டனிலுள்ள "பிரிட்டிஷ் பொருட்காட்சி "(British Museum) மிகமிகப் பெரியது. அதை ஒரு நகர் எனக்கூற லாம். மதிப்பிற்கடங்காத அரும்பொருள்கள். அதன் கண் உள்ளன. அரிய கையெழுத்து மூலப்பிரதிகள், அதில் உள்ளன. (1) நூலகம், (2) பழங்காலப் பொருள்கள் என

இருபெரும் பகுதிகள் அதில் உள்ளன. ஒவ்வொன்றிலுள்ள காட்சிப் பொருள்களும் மிகப் பாடுபட்டு பல நாடுகளிலிருந்து திரட்டப்பட்டவை. ஆராய்ச்சியாளருக்கு அளவிறந்த பயனுடையவை. பொதுமககளுக்கு வியப்பையும் ஊக்கத்தையும், ஊட்டவல்லவை. பொதுவாகக் கல்விப்பயன் உடையவை.

**ரஷியா :**

இந்நாட்டில் பொருட்காட்சிகள் ஏராளமாக உள்ளன. ஈண்டு மிகமிகப் பெரிய மூன்று கண்காட்சிகளைக் குறிப்பிடுவோம். மாஸ்கோ நகரிலுள்ள ருமியன்ட்ஸ் கண்காட்சி (Rumiants Museum). அதில் மிகமிகப் பழங் காலத்து, விலங்குகள், பறவைகள் போன்றவை சம்பந்தமான ஒப்பற்ற காட்சிப் பொருள்கள் உள்ளன. லெனின் கிராடு என்னும் நகரில் விஞ்ஞானப் பொருட்காட்சி சாலையும், சுரங்கங்கள் பற்றிய பொருட்காட்சிசாலையும் உள்ளன. அவை உலகப் புகழ்பெற்றவை. இவை தவிர நூற்றுக்கணக்கான பொருட்காட்சி சாலைகள் நாட்டில் ஆங்காங்கு அமைந்துள்ளன. பொதுமக்களும், குழந்தைகளும் அவற்றைப்பார்த்துக் கல்விப் பயன் பெறுகின்றனர்.

**அமெரிக்க ஐக்கிய நாடுகள்** (United States of America)

இந்நாட்டில் பொருட்காட்சிகளின் வளர்ச்சி ஈடு இணையற்றது ஆகும். பொதுமக்கள் ஆதரவினாலும், செல்வந்தரின் நன்கொடைகளினாலும், கல்வியைப் பெருக்க ஆண்களுக்கும் பெண்களுக்குமுள்ள ஆர்வத்தாலும், இந்நாட்டில் ஆயிரக்கணக்கான சிறிதும் பெரிதுமான பொருட்காட்சிசாலைகள் அமைக்கப்பெற்றுள்ளன. இந்நாட்டில் மற்றொரு சிறப்பு என்ன வென்றால் குழந்தைகளுக்காகத் தனிப்பொருட்காட்சி சாலைகள் நிறுவப்பட்டு உள்ளன. அவை பள்ளியில் பயிலும் மாணவ மாணவியருக்குச் சிறந்த முறையில் கல்வித் தொண்டாற்றி

வருகின்றன. அங்குக் குட்டிபோட்டுப் பால்கொடுக்கும் உயிரினங்கள், பறவைகள், நிலத்திலும், நீரிலும்வாழ்வன, விலங்குகள் முதலியவற்றின் சிறந்த மாதிரிகள், கவர்ச்சிகரமான முறையில் வைக்கப்பட்டுள்ளன. ஒவ்வொன்றையும், அதனதன் இயற்கைச் சூழ்நிலேயில் இயற்கை வர்ணத்தில், இயற்கை உருவத்தில் காட்சிப் பொருள்களாக அமைத்துள்ளனர். பள்ளியில் நடக்கும் இயற்கைப் பாடத்திற்கு அந்தப் பொருட்காட்சிசாலேகள் உயிரூட்டுகின்றன. உயிரினங்களின் வாழ்க்கை வரலாற்றுச் செய்திகளே தெளிவாக விளக்குகின்றன.

**இந்தியாவிலுள்ள பொருட்காட்சிசாலேகள் :**

ராஜ்ஜியத் தலேநகர்களில் மட்டுமே பொருட்காட்சிசாலேகள் சில உள்ளன. சிறப்பான பொருட்காட்சிகளே மட்டும் குறிப்பிடுகிரும்.

**கல்கத்தா :**

(i) **இந்தியப் பொருட்காட்சி** (Indian Museum) என்ற பெயருடன் ஒன்று இந்நகரில் உள்ளது. இங்கு வைக்கப்பட்டுள்ள கடல் உயரினங்கள்பற்றிய காட்சிப் பொருள்கள் மிகமிக அரியவையாகும். சிவாலிக் குன்றுகளில் வாழும் விலங்குகளின் அரிய உருவங்கள் இங்கு வைக்கப்பட்டுள்ளன. இதுதான் அதன் தனிச்சிறப்பு.

(ii) **சுரங்கப் பொருட்காட்சி** (Geological Museum) இது ஒரு தனிப்பொருட்காட்சியாகும். இதில் அரிய திரட்டுகளேக் காணலாம்.

(iii) **பூந்தோட்டம்** (Royal Botanical Gardens)

**பம்பாய் :**

**விக்டோரியா ஆல்பர்ட் பொருட்காட்சி.** கொம்புகளுள்ள விலங்குகளின் அரிய திரட்டு இங்குள்ளது. அதுதான் இப்பொருட்காட்சியின் தனிச்சிறப்பு. இயற்கைச் சூழ்நிலேயில் இருப்பனபோன்று அவை அமைக்கப்

பட்டுள்ளன. ஒரு காட்டெருமையின் காட்சிப் பொருளைப் பார்த்தாலே அச்சம் ஏற்படும். மற்றப் பொருட்காட்சியில் உள்ள திரட்டுகளையும் இங்குக் காணலாம்.

**சென்னை :**

சென்னைப் பொருட்காட்சியும் மிகப் பழமையானது. இது அரிய திரட்டுகள் கொண்டுள்ளது. அண்மையில் அதன் நூற்றுண்டுவிழா நடந்தது. அதன் நினைவுச் சின்னமாக ஒரு கண்காட்சி மன்றமும் கட்டியுள்ளார்கள். அங்கு அடிக்கடி பல கண்காட்சிகள் நடந்து கொண்டிருக் கின்றன. இதில் அண்மையில் பெரிய முன்னேற்ற ஏற்பாடுகளைச் செய்துள்ளனர். கோடைகால விடுமுறைக் காலத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட சில ஆசிரியர்களுக்குப் பொருட்காட்சி அமைக்கும் பயிற்சி அளிக்கப் பெறுகிறது. ஒவ்வொரு துறையிலும் இலக்கியங்களும், துண்டுப் பிரசுரங்களும் வெளியிடுகிருர்கள்.

இதை ஒட்டி ஓர் அரை வட்டமான அழகான நாடக அரங்கு உள்ளது. தவிர, கன்னிமரா நூல் நிலையமும் இங்குதான் உள்ளது. பெரியவர்களும், சிறியவர்களும் நாள்தோறும் நூற்றுக்கணக்கில் இப்பொருட்காட்சி சாலையைப் பார்க்க வருகிருர்கள்.

கற்சிலைகள்; உலோகச் சிலைகள்; போர்க் கருவிகள் பறப்பன, ஊர்வன, விலங்குகள் போன்ற அரிய காட்சிப் பொருள்கள் இதில் உள்ளன.

**கோட்டைப் பொருட்காட்சி :**

இது கடற்கரையில் உள்ள கோட்டையில் உள்ளது. இந்திய தற்காப்புத்துறை இதை நிறுவியுள்ளது. தென்னுட்டுப் போர்கள்பற்றியகாட்சிப் பொருள்கள் இங்கு உள்ளன.

**டில்லி :**

இங்குள்ள செங்கோட்டையில் போர்க்கருவிகள், போர் உடைகள் முதலியவை உள்ள ஓர் அரிய கண்காட்சி உள்ளது. ஆங்கிலேயர் இந்நாட்டில் காலடி எடுத்துவைத்ததுமுதல் 1857-ல் சிப்பாய்க் கலகம் நடந்த காலம் வரையில் நிகழ்ந்த பல்வேறு போர்கள் சம்பந்தமான காட்சிப் பொருள்கள் வைக்கப்பட்டுள்ளன. வரலாற்று ஆசிரியர்களுக்கு இது பயன்படும்.

**மகன் வாடிப் பொருட்காட்சி :**

மத்தியப் பிரதேசத்திலுள்ள வர்தா நகரின் ஒரு பகுதி மகன்வாடி. இங்கு **மகன்வாடி சங்கிராலயம்** என்ற ஓர் அரிய கண்காட்சி உள்ளது. இதனை ஆதாரக்கல்வி பயிலும் ஒவ்வொருவரும் கட்டாயம் காணவேண்டும். இதில் கதர், இந்திய கைத்தொழில்கள் ஆகியவற்றின் வரலாற்றினைக் காட்டும் காட்சிப்பொருள்கள் வைக்கப்பட்டுள்ளன. பழைய நூற்புக் கருவிகள், நெசவுக் கருவிகள், கதர் ஆடைகள் ஆகியவற்றைக் காணலாம்.

**பொருட்காட்சியின் சிறப்பு :**

இவ்வாறு, பொருட்காட்சிசாலை வெறும் பொருள்களைத் திரட்டநினைக்கும் நிறுவனமாக நின்றுவிடாமல், பொதுமக்கள் கல்விக்கும், குழந்தைகள் கல்விக்கும், கருவியாக அமைந்துள்ளது.

பழங்காலந்தொட்டு பண்பாடும் நாகரிகமும் எவ்வாறு முன்னேறிவருகிறது என நிதரிசனமாகக் காட்டுகிறது.

**பொருட்காட்சி பொதுக் கல்விக்கும், தேசியக் கல்விக்கும் பயன்படவேண்டுமானால் :**

(1) பொருட்காட்சி செவ்வையான முறையில் நடத்தப்படவேண்டும்.

(2) அதைப் பார்க்கவரும், ஆராய்ச்சிக்காரர்களுக்குத் தேவையான அதிகாரபூர்வமான செய்திகளை அது அளிக்கவேண்டும்.

(3) பொது மக்களுக்கு எளிதில் விளங்குமாறு சுருக்கமான குறிப்புகள் வைக்கவேண்டும்.

(4) பள்ளிகளோடும் கலை நிறுவனங்களோடும் அது தொடர்பு கொள்ளவேண்டும். பள்ளி வேலைகளுக்கு அது உதவ வேண்டும்.

(5) ஒவ்வோர் மாவட்டத் தலைநகரிலும், ஒருபொருட் காட்சி இருத்தல் நலம்.

(6) அமெரிக்காவிலுள்ள குழந்தைகளின் பொருட் காட்சியில் செய்துவருவதுபோல், பள்ளிகளுக்குத் தேவையான காட்சிப் பொருள்களைப் பள்ளிகளுக்கு அனுப்ப ஏற்பாடு செய்யலாம்.

**கண்காட்சி, பொருட்காட்சி—வேறுபாடுகள் :**

| கண்காட்சி | பொருட்காட்சி |
|---|---|
| (1) தற்காலிகமாக அமைவது | (1) நிரந்தரமாக இருப்பது |
| (2) பொருளைப் பற்றி விரிவான விளக்கம் வேண்டும் | (2) விளக்கம் வேண்டாம் |
| (3) செய்து காட்டுவதும் தேவை | (3) செய்துகாட்டத் தேவையில்லை |
| (4) வகுப்புப் போதனைக்குப் பயன்படாது | (4) பயன்படும் |
| (5) திடீரென்று சில நாட்களில் செய்து முடித்துவிடலாம் | (5) அவ்வாறின்றி நாள் தோறும் வளர வேண்டும் |
| (6) கவர்ச்சிகரமானது | (6) கண்காட்சியைப் போல கவர்ச்சியாய் இராது. |

| | |
|---|---|
| (7) அந்தந்தக் காலத்தில் சிறப்புற்ற விஷயங்களுக்கு ஏற்றம் கொடுக்கப் படும் | (7) பழங்காலம் முதல் பண்பாட்டு வளர்ச்சியைக் காட்டும். |
| (8) விளக்க, மனிதர்கள் தேவை. | (8) தேவையில்லை; விளக்கக் குறிப்பே போதுமானது |

முடிவு :

நம்நாட்டு மக்களில் பெரும்பான்மையோர் பரந்து கிடக்கும் சிற்றூர்களில் வாழ்ந்து வருபவர்கள். சிற்றூர்களையும், அருகிலுள்ள நகரங்களையும் இணைக்க நல்ல போக்குவரத்து வசதிகள் இல்லை. ஊழ்வினையில் மிக்க நம்பிக்கை உள்ளவர்கள். மேற்கண்ட காரணங்களினுல், கிராமங்களில் புதுக் கருத்துக்கள் எளிதில் புக முடிவதில்லை. புகுந்தாலும் கடிதில் ஏற்றுக்கொள்ளப் படுவதுமில்லை. எனவே, அவர்களிடம் கிணற்றுத்தவளை மனப்பான்மை அமையலாயிற்று. கிராமத் தொழில்களான பயிர்த்தொழில், துணி நெய்தல், தச்சுவேலை, உலோக வேலை, மண்பாண்டம் செய்தல் முதலியவை நாளிதுவரை பழைய முறையிலேயே செய்யப்பட்டு வருகின்றன. பல நூற்ருண்டுகளுக்கு முன் இவை எவ்வாறு செய்யப் பட்டனவோ, அதேமாதிரியாகத்தான் இப்பொழுதும் செய்யப்பட்டு வருகின்றன.

விஞ்ஞான ஆராய்ச்சிகளினுல் எத்தனையோ அரிய உண்மைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. தேவைப்படும் சிற்றூர்களுக்கு அவை எட்டுவதில்லை. அங்குள்ள பெரும் பான்மையோர் படிக்கத் தெரியாதவர்கள். ஆகையினுல், இந்த ஆராய்ச்சிகளின் நற்பயன்களினுல் அவர்களுக்கு எளிதில் பயன் கிட்டுவதில்லை.

கண்காட்சிகளினுலும், பொருட்காட்சிகளினுலும் இக் குறைகளையெல்லாம் நீக்கிப் பொதுமக்களுக்குக் கல்வி அளிக்க அரசாங்கம் முயலுகிறது. நல்வாழ்வு வாழவும்,

முழுவாழ்வு வாழவும், தொழிலில் முன்னேற்றம் அடைந்து ஊதியத்தைப் பெருக்கவும், கண்காட்சிகளும் பொருட் காட்சிகளும் குறிப்பாக, முன்னவை, பெரும்பாலும் பயன் படுகின்றன.

இவ்வாறு தேசியக் கல்விக்கும் பொதுமக்கள் கல்விக் கும் நற்கருவிகளாய் அவை அமைந்துள்ளன.

**எச்சரிக்கை :**

பள்ளிப் பொருட்காட்சி, கண்காட்சி, ஆகியவற்றிற் கும் இந்த அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ள பொதுக் கண்காட்சி, பொருட்காட்சி ஆகியவற்றுக்கும் வேறு பாடுண்டு என்பதை அறியவேண்டும்.

# ஆசிரியரின் தகுதிகள்

[ஆசிரியரின் இன்றியமையாத தகுதிகள்,—ஆசிரியரின் சொந்த (தனி) வாழ்வில் காணவேண்டிய தகுதிகள்,—அவரது வேலைக்குத் தேவையான, தொழில் திறமையும், கற்பிக்குந் திறன்களும்]

## ஆசிரியர் வேலையின் பெருமை :

ஒரு கல்வித்திட்டம் எவ்வளவோ சிறந்ததாயிருக்கலாம். நாட்டின் நலத்தின் நாட்டம் கொண்ட நல்லோரால் ஆக்கப்பட்ட ஒப்பற்ற திட்டமாயிருக்கலாம். ஆனால் அதை நாட்டிலுள்ள பட்டிகளிலும், தொட்டிகளிலும், நடத்துபவர் ஆசிரியர்களே ஆவர். எனவே, "தொண்டர் தம் பெருமை சொல்லவும் எளிதோ" என்றது போல் ஆசிரியர்களின் பெருமை சொல்லுவது எளிதன்று. தன் பெருமையை ஆசிரியர்கள் இன்றுவரை கண்டு கொண்டதாகத் தெரியவில்லை. ஆசிரியர்கள் நன்முறையில் ஈடுபட்டால்தான் எந்த நல்ல திட்டமும் முன்னேறும். இன்றேல், அது தேக்கமுற்றுத் தேய்ந்து விடும். எனவே, மிகச் சிறந்த நமது ஆதாரக் கல்வித்திட்டத்தை, நாற்பதாண்டுச சோதனைக்குப்பின் நம் நாட்டுத் தந்தை நமக்குத் தந்த திட்டத்தை, நம் நாட்டுக் குழந்தைகளின் ஒவ்வொருவ நடைய ஆளுமை வளர்ச்சிக்கு வித்திட்டுள்ளதிட்டத்தை, எல்லோரும நல்வாழ்வு வாழக்கூடிய சர்வோதயச் சமுதாயத்தினைப் படைக்க எண்ணும் திட்டத்தை, நடத்த வேண்டிய ஆசிரியர்கள், சிறந்தவர்களாக இருக்க வேண்டுமென்று சொலலவே தேவையில்லை.

நமது தற்காலச் சமூக வாழ்விலுள்ள ஒவ்வொரு வேலைக்கும் என்னென்ன தேவைகள் இன்றியமையாதவை என [illegible] மாய் வரையறுத்து இருக்கின்றனர். அது [illegible]வே, குழந்தைகளை நற்குடிகளாகப் பயிற்றும் ஆசிரிய

வேலைக்கு வேண்டிய தேவைகளையும் ஒருவாறு வரையறுத்துள்ளனர். அவற்றை ஒவ்வோர் ஆசிரியரும் அறிந்து கொள்வது அவரது கடமை ஆகும்.

ஆசிரியரின் தகுதிகளை ஆசிரியர்களுக்கு வற்புறுத்தும் பொருட்டே, கலைத்திட்டத்தில் மூன்று பாடங்களின் கீழ் அவற்றைப்பற்றி குறித்துள்ளனர். "கல்வி மனநூலும், குழந்தை ஆராய்ச்சியும்" என்ற ப்ாடத்திட்டத்தில் 12வது அத்தியாயமாக 'ஆசிரியரின் ஆளுமை' என்ற அத்தியாயம் ஒன்றினை அமைத்துள்ளனர். "பள்ளி ஆட்சி" என்ற வேறொரு பாடதிட்டத்தின் 2 வது அத்தியாயத்தில் 'ஆசிரியர்' என்றொரு தலைப்பு உள்ளது.

"ஆதாரக் கல்வியின் தத்துவங்கள்" என்ற இப் பாடத் திட்டத்திலும் 10-வது அத்தியாயமாக "ஆசிரியரின் தகுதிகள்" அமைக்கப்பட்டுள்ளது.

**மூன்றுவகை ஆசிரியர்கள் :**

மாணுக்கர்களை தலை, இடை, கடை என்று மூன்று வகையாக நன்னூல் வகுத்திருப்பது போல நாமும் ஆசிரியர்களைத் தலை, இடை, கடை எனப் பிரித்துக்கொள்ளலாம்.

**தலை ஆசிரியர்கள் :**

இது தலைமை ஆசிரியரைக் குறிப்பதன்று. சிறந்த ஆசிரியரைக் குறிப்பதாகும். இவர் ஆசிரியர் தொழிலை ஒரு பெருமையாகக் கருதுவார். குழந்தைகளுக்குத் தொண்டு செய்ய நேர்ந்ததை, ஒரு பேறு எனக்கருதுவார். தலை ஆசிரியர் கல்வித் திட்டத்தின் அடிப்படைகளை நன்கு அறிந்து கொள்வார். அவற்றிற்கிணங்க தமது கற்பிக்கும் முறைகளை அமைத்துக்கொள்வார். தானும் மேலும், மேலும், கற்றவாறிருப்பார். தம்முடைய கற்பிக்கும் முறைகளை மேம்பாடுறச் செய்தவாறிருப்பார். தம்மிடம் ஒப் படைக்கப்பட்ட குழந்தைகளைப் புனிதமாகக் கருதி, ஒவ்

வொருவரையும் பற்றிக் குறிப்பு எடுத்து, ஒவ்வொருவரும் அவரவர் வேகத்தில் முழுவளர்ச்சியுடன் வளர உதவுவார். தூண்டுதலின்றியே தம் தொண்டுகளைச் செய்ய முயலு வார். இவரைக் குழந்தைகளும் ஊராரும் நேசிப்பார்கள்.

**இடை ஆசிரியர் :**

இவர் 35 சதவீதம் மதிப்பெண்கள் பெறும் மாண வனின் மனப்பான்மை கொண்டவர். காலத்தோடு வரு வார். பாடத்திட்டத்தை அனுசரித்துக் கற்பிப்பார். வேலை முடிந்ததும் வெளியேறுவார். தூண்டுதலின்றி புதுத் தொண்டில் இறங்கார். இயந்திரரீதியாய் இயங்குபவரிவர். இவருக்குக் கொடுக்கப்பட்டுள்ள வேலைகளை என்னவோ முடித்து விடுவார், ஆனால், மக்களோ குழந்தைகளோ இவரை முழுமனத்துடன் நேசிக்கமாட்டார்கள்.

**கடை ஆசிரியர் :**

இவர் தம் தொழிலைப் பழிப்பார். பள்ளியைப் பழிப் பார். வேறு வழியில்லாமல் ஆசிரியத்தொண்டில் புகுந்த தாகச் சொல்லிக்கொள்வார் இவர். பழித்துக்கொண்டே யிருந்தாலும் இவ்வாசிரியப்பணியைவிட ஒருப்படார். சில பொழுது வேறொரு தொழிலை முதற் தொழிலாகவும் ஆசிரி யர் வேலையை உபதொழிலாகவும் கருதுவார்.

நமது ஆதாரக் கல்வித் திட்டத்திற்குத் தேவையான வர்கள் தலை ஆசிரியர்களே எனச் சொல்லத் தேவை யில்லை.

**ஆசிரியரின் சொந்த (தனி) வாழ்வில் காணவேண்டிய தகுதிகள் :**

ஆசிரியர்—வேலைக்கும், மற்ற வேலைக்கும் முக்கிய வேறுபாடு ஒன்று உள்ளது. அதை ஒவ்வோர் ஆசிரியரும் நன்கறிந்திருத்தல் வேண்டும். மற்ற வேலைகளில் அததற் குரிய திறன் பெற்றிருந்தால்மட்டும் போதுமானது. ஒரு வேலையாளின் சொந்த குணங்கள் எப்படியிருந்தாலும்,

அவற்றை நாம் பொருட்படுத்தமாட்டோம். ஓர் எழுத்தாளர் (குமாஸ்தா), காலத்தில் வந்து ஒழுங்காக வேலை செய்யும்போது, மூக்குப்பொடி போட்டாலும், புகை பிடித்தாலும், நாம் பொருட்படுத்தமாட்டோம். ஆனால் ஆசிரியரின் பணி அப்பேர்ப்பட்டதன்று. அவர் பாடங்களை நன்கு கற்பித்தால்மட்டும் போதாது. அவரது நடை முறைகள், குணங்கள், ஒழுக்கம், ஆகியவை பிள்ளைகளுக்கு முன் மாதிரியாக நன்றாயிருக்கவேண்டும். அவரிடம் கற்கும் பிள்ளைகள் அவரைப் பின்பற்றி நடக்க முயலுவார்கள். அவரது சொந்த நடைமுறையும், பழக்க வழக்கங்களும் முன்மாதிரியாயிருக்க வேண்டும்.

அவர் தமது தொழிலினையும், கிராமத்தினையும், பள்ளியையும் பள்ளிப் பிள்ளைகளையும், முழு மனத்துடன் விரும்புவராவர். இவ்வாறு அன்பு நிறைந்த வராதலின் பள்ளி சம்பந்தமான எந்த வேலையும் பளுவாகக் கொள்ளாமல், திருப்பணியாக ஏற்பார். ஒவ்வொரு பிள்ளையையும் புனிதமாகக் கருதுவார். ஒவ்வொருவரின் பண்புகளும் முழு வளர்ச்சியடைய ஆவன செய்வார்.

இவர் தாயுள்ளம் படைத்தவராவர். எனவே, இவரிடம் நம்பிக்கை மிகுதி. தவறு செய்யும் எந்தப் பிள்ளையும், காலப் போக்கில் திருந்திவிடும் என உறுதியாய் நம்புவார். அஹிம்சையிலும் சத்தியத்திலும் முழு நம்பிக்கை கொள்பவர்.

நல்ல உடல் வலியோடு, நல்ல சுறுசுறுப்புடன் இவர் இருப்பார். பள்ளிப் பிள்ளைகளின் முன்னேற்றத்தோடு, கிராம முன்னேற்றத்தையும் கருதுவார். இவரது உடை, உரை, உடைமை, ஒவ்வொன்றிலும், தூய்மை துலங்கும். நிமிர்ந்து நடப்பார்; ஆனால், திமிராய் இருக்க மாட்டார். குரலிலும், பேச்சிலும், இனிமை மிதந்து வருவதுடன் தெளிவும் இருக்கும். இவர் எப்பொழுதும் இன்முகத்துடன் காணப்படுவார். எப்பொழுதும் இன் சொல்லே பேசுவார். காலம், பொருள், முயற்சி, ஆகிய

வற்றில் சிக்கனத்தைக் கைபிடிப்பார். இவர் வெற்றி, விழிப்பு, நுணுக்கங்களைக் கவனித்தல், தொண்டு ஆகிய வற்றில் நிலை தவருதவர். எந்தக் காலத்திலும், மன எழுச்சியில், சம நிலையிலேயே இருப்பார். சீறவுமாட்டார்; முகத்தைச் சுளிக்கவு மாட்டார். ஆதாரக் கல்வித் திட்டத் தின் அடிப்படைத் தத்துவங்களை நன்கு அறிந்திருப்பார். ஆதாரக் கல்வியின் இரு கண்களான, தொழில், இயைபு, ஆகிய இரண்டினைப்பற்றியும் நம்பிக்கை உள்ளவராயிருப் பார். பிள்ளைகளுக்கு உண்மையான அண்ணன் அல்லது அக்காளைப்போல் விளங்குவார். அவர்களுக்கு ஆலோ சகராகவும், வழிகாட்டியாகவும் அமைவார்.

காந்திஜீ ஓரிடத்தில் கூறியதுபோல், பகவத் கீதையில் 2வது அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள ஸ்திதப்பிரக்ஞ னின், பண்புகளை அவர் உடையராயிருப்பார். அவர், அன்ருடம் நாட்குறிப்பு எழுதுவார். பிள்ளைகளைப்பற்றி குறிப்பு வைப்பார். அவற்றைப் பயன்படுத்துவார்.

யோக வாழ்க்கை நடத்துபவராயும், உடல் புரட்சி, உள்ளப்புரட்சி, ஆன்மப் புரட்சி ஆகியவைகளில் நம்பிக்கை உள்ளவராயுமிருப்பார்.

அவரிடம் பாரபட்சம் இராது. பிள்ளைகளின் செல் வம், செருக்கு, சிந்தைகவர் அழகு ஆகிய எந்தத் தனி ஏற்றமும் அவரை ஓரவஞ்சனையில் ஆழ்த்தாது.

குழந்தைகளின், இன்பதுன்பங்களில் பங்குகொண்டு அவர்களை ஊக்குவார்: அல்லது ஆறுதல் கூறுவார்,

## தொழில் திறன் :

ஆதாரத்தொழிலில், அவரது திறமை உயர்ந்த தரமா யிருக்கும். அவர் தொழில் புரிவது பார்க்கவும் வியக்கவும் தக்கதாயிருக்கும். பாடின்றி அதைச் செய்வதுடன் அழகாக வும், நாசூக்காகவும் செய்வார். 20-ஆம் எண் நூலை நூற்றுக்காட்டு என்ருல் உடனே செய்யவல்லார். நூற்பும் நெசவும், தோட்ட வேலையும், பயிர் வேலையும், அவருக்கு

நன் முறையில் தெரிந்திருக்கும். இவற்றைத் தவிர, அவருக்கு ஒன்றிரண்டு உப தொழில்களில் போதுமான திறமை இருக்கும். தொழிலை, தான் செய்வது மட்டு மன்றிப் பிள்ளைகளுக்குக் கற்பிப்பதில் திறன் உடையவரா யிருப்பார். பொருத்தம், திருத்தம், வேகம் ஆகிய முப்பண்புகளிலும் பிள்ளைகள் சிறந்து விளங்குமாறு அவர் தொழிலைக் கற்பிக்க வல்லவராயிருப்பார். தன் சம்பந்த மட்டில், உணவு, உடை, ஆகியவற்றில் தன்னிறைவு பெற்றவராயிருப்பார்.

**கற்பிக்குந் திறன் :**

ஆதாரப் பள்ளிகளில் இருவகை உண்டு. (1) இளை யோர் பள்ளிகள் (Junior Basic) (2) மூத்தோர் ஆதாரப் பள்ளிகள் (Senior Basic) அவற்றில் போதிக்க பின் வரும் தகுதிகள் தேவை.

1. இளையோர் ஆதாரப்பள்ளி (I—V கிரேடுகள்) :—

(1) இளையோர் ஆசிரியப் பயிற்சி நற்சான்றிதழ் பெற்றிருக்க வேண்டும். (அல்லது)

(2) பழைய முறையில் (Elementary Grade) நற்சான்றிதழ் உடையவர்கள் ஆதாரக் கல்வி முறையில் மறு பயிற்சி பெற்று நற்சான்றிதழ் பெற்றிருக்க வேண்டும்.

2. மூத்தோர் ஆதாரப் பள்ளி (VI—VIII கிரேடு கள்) :—

(1) மூத்தோர் ஆசிரியப் பயிற்சி நற்சான்றிதழ் பெற்றிருக்க வேண்டும்.

(2) பழைய முறையில் (Secondary Grade) நற் சான்றிதழ் உடையவர்கள் ஆதாரக் கல்வி முறையில் மறு பயிற்சி பெற்று நற்சான் றிதழ் பெற்றிருக்க வேண்டும்.

ஓர் ஆசிரியர் எந்த வகைப் பள்ளியில் பணி புரிய விரும்புகிருரோ, அதற்குரிய தகுதிகளைப் பெற்றிருக்க வேண்டும்.

ஆதாரப் பள்ளிகளில் ஓவியம், இசை, உடற் பயிற்சி ஆகியவற்றிற்குத் தனி ஆசிரியர்கள் கிடையாது. ஆகவே, இவற்றையும் சாதாரண ஆசிரியர்களே போதிக்க வேண்டும். ஆதலின் ஆதார ஆசிரியர் ஒவ்வொருவரும் இம் மூன்றிலும், போதிய தேர்ச்சி பெற்றிருப்பது அவசியமாகும். கற்பிப்பதற்கு உதவும் சார்ட்டுகளை நன் முறையில் வரையவும், உருவ மாதிரிகளைக் கவர்ச்சிகரமாகவும் திருத்தமாகவும் செய்யவும், இவருக்குத் திறமை தேவை.

குறிப்பாகத் தொழில் மூலம் பாடங்களை இயைபு படுத்திக் கற்பிக்கவும், தொழில் மூலம் ஒழுக்கத்தை நிலை நாட்டவும், தொழில் மூலம் குழந்தைகளின் ஆளுமையை வளர்க்கவும், இவருக்குத் தெரிந்திருத்தல் அவசியம்.

பள்ளிக்கூட வேலையின் வாயிலாக, கிராம மறு மலர்ச்சிக்கு ஆவன செய்ய இவருக்குத் தெரிந்திருக்க வேண்டும்.

பொருட்காட்சி ஒன்று ஏற்படுத்தி அதை வளர்ப்பதிலும், ஆண்டுதோறும் கண்காட்சிகள் நடத்துவதிலும் அவர் பயிற்சி பெற்றிருக்கவேண்டும்.

பள்ளிச் சீரமைப்புக்கு ஆவன செய்ய முனைவார். மக்கள் மனத்தைக் கவரும் வண்ணம் தன் தொண்டினைச் செய்துவருவார்.

இலவச உணவளிப்புத் திட்டம் தங்கு தடையின்றி நடந்தேறுவதற்கு ஆசிரியர் ஆவன செய்யவேண்டும்.

கிராம மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்த, அரசாங்கத்தால் நிறுவப்பட்டுள்ள சமுதாய நல வளர்ச்சித் திட்டத்திலும் ஆசிரியர் ஒத்துழைக்க வேண்டும். இதைப் பற்றிய முழு விவரம் பிற்சேர்க்கையில் தரப்பட்டுள்ளது.

---

# பிற் சேர்க்கை I

## தேசிய விஸ்தரிப்புத் தொண்டும் சமுதாய அபிவிருத்தித் திட்டமும்

**முன்னுரை :**

மேலே கூறிய இரண்டு திட்டங்களும் கிராம மறுமலர்ச்சிக்காகவும், கிராம முன்னேற்றத்திற்காகவும், கிராம மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்வதற்காகவும் தீட்டப்பட்டவையாகும். இவை ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ் எழுந்தவை. இவற்றின் வாயிலாகச் சமதர்ம சமுதாயத்தைப் படைக்க அடிகோலப்பட்டுள்ளது. நமது ஆதாரக் கல்வித் திட்டமும் புதியதோர் சர்வோதய சமுதாயத்தினைப் படைக்கும் குறிக்கோள் கொண்டுள்ளதல்லவா? தவிர, ஆதாரப் பள்ளி கிராம மறுமலர்ச்சிக்காகவும், கிராம முன்னேற்றத்திற்காகவும், கிராம நலத்திற்காகவும் பாடுபடும் ஒரு சாதனம்தானே? ஆகவே, ஆதாரப் பள்ளி ஆசிரியர்கள் தேசிய விஸ்தரிப்புத் தொண்டுபுரியும் சமுதாய அபிவிருத்தித் திட்டம் பற்றியும் நன்கு அறிந்திருக்க வேண்டுவது அவசியமாகிறது. ஆகையால், மேற்கூறிய இரண்டினைப்பற்றியும் ஆதாரப் பயிற்சி பெறும் பயிற்சியாளர்களுக்குக் கற்பிக்கப்பட வேண்டுமென அரசினர் அண்மையில் உத்திரவிட்டிருக்கின்றனர்.* அக்கட்டளையின்படி, "ஆதாரக் கல்வியின் தத்துவங்கள்" என்ற பாடத்தில் 'பள்ளியும் சமூகமும்' என்ற அத்தியாயத்தில் இவை சேர்க்கப்பட்டுள்ளன. இப்போது இவ்விரண்டு தலைப்புகள் பற்றிச் சற்று விரிவாக விளக்குவோம்.

**கிராமங்களின் இழிநிலை.**

நமது பரந்த பாரதநாடு கிராமங்கள் மிகுந்தது. அதில் ஏறத்தாழ, 5 லட்சம் கிராமங்கள் உள்ளன. நகரங்கள் சுமார் 2,300-க்கு மேற்படா. தவிர, இந்தியாவிலுள்ள

---

* G. O. No. Ms, 403, Education dated 6-3-1958, Communicated in Director's Proceedings, RC. No. 249 C.58, dated 8-5-1959.

பெரும்பான்மையான மக்கள் கிராமத்தில்தான் வாழ்கிருர்கள்; நகரத்தில் அன்று. ஆகவே, இந்திய நாடு சீரும் சிறப்புமாய், பெருமையுடன் வாழ வேண்டுமாளுல் மேற்கூறிய கிராமங்கள் அனைத்தும் செழித்துக் கொழித்து வாழவேண்டும். கிராமப் பொருளாதாரம் செவ்வையான முறையில் அமைந்திருக்க வேண்டும். கிராம வாழ்வு மக்களுக்குப் பிடித்ததாயிருக்க வேண்டும். ஆனல், கிராமங்கள் இன்று அத்தகைய நன்னிலையில் இல்லை. அதற்கு மாருக இழி நிலையில், அவல நிலையில் உள்ளன. அதன் காரணத்தை அறிவது எளிது. முன்னூறு ஆண்டுகளாக 5000 கல்லுக்கப்பால் உள்ள அந்நிய நாட்டிலிருந்து வந்த ஆங்கிலேயர்களின் ஆட்சியினுல் வந்த விளைவு அது. வர்த்தகத்திற்காக வந்த அவர்கள் நமது கிராமங்களின் கைத்தொழில்களை நசித்தனர். கிராமப் பொருளாதார அமைப்பைச் சிதைத்தனர். வர்த்தக மனப்பான்மையை மக்கள் மனத்தில் ஊட்டி நமது இந்தியப் பண்பாட்டைக்கூட மாற்றுவதில் ஓரளவு வெற்றியும் கண்டனர்.

**சுதந்தரோதயம் :**

15-8-1947 அன்று நாம் அரசியல் சுதந்தரம் அடைந்தோம். ஆனல் இன்றுவரை பொருளாதார சுதந்தரம் அடையவில்லை. அந்தப் பொருளாதார சுதந்தரத்தை அடையவே நாட்டின் நலனில் நாட்டங்கொண்ட நல்லவர்கள் நல்ல ஐந்தாண்டுத் திட்டங்களை அமைத்துத்தந்துள்ளனர். முதல் ஐந்தாண்டுத் திட்ட காலம் 1951-1956 ஆகும். 1950-ல் கிராமங்களின் மேற்காட்டிய இழி நிலையை மாற்றத் தீவிரமாக எண்ணினுர்கள். அதன் விளைவே தேசிய அபிவிருத்தித் தொண்டும் சமுதாய அபிவிருத்தித் திட்டமுமாகும்.

**இவற்றின் நோக்கங்கள் :** இவ்விரண்டின் நோக்கமும் ஒன்றே. கிராம மக்களை விழிப்புறச் செய்யவேண்டும். அறிவுபெறச் செய்யவேண்டும். கிராமக் கைத்தொழில்களுக்

குப்புத்துயிர் ஊட்டவேண்டும். அவர்களுக்குத் தன்னம்பிக்கைப் பிறக்கச் செய்யவேண்டும். வல்லமை பொருந்திய அரசினருடைய ஆலோசனைகள், பண உதவி, கடன் வசதி, பிற விஞ்ஞான நுட்ப யோசனைகள் போன்றவற்றை கிராம மக்கள் அறியச் செய்யவேண்டும். விஞ்ஞான முன்னேற்றத்தில் கிடைத்த உண்மைகளை கிராம அலுவல்களில் நடைமுறையில் காட்டி கிராம மக்களுக்கு அதிக ஊதியமும், அதிக ஓய்வும், அதனால் ஏற்படும் வாழ்க்கைத் தரஉயர்வும் கிட்டச் செய்யவேண்டும். சோம்பித் திரியாது, பிறர் கையை எதிர்பார்க்காது சுய உதவியினால் முன்னேற ஒருப்பட்டுத் தம் வாழ்வை நல்வாழ்வு ஆக்கிக்கொள்ள சுய உதவி ஏற்படுத்தச் செய்யவேண்டும்.

முக்கியமாக விவசாயம், குடிசைத் தொழில், கல்வி ஆகியவற்றில் மக்களுக்குப் புது உணர்ச்சியைப் பெறச் செய்யவேண்டும்.

**தேசிய விஸ்தரிப்புத் தொண்டு :**

இதில் நான்கு பகுதிகள் உள்ளன.

**1. ஆயத்த நிலை :** எந்தப் பகுதியில் மக்கள் உழைக்க முன்வருவார்களோ, எந்தப் பகுதிகளில் சுய உதவியில் நம்பிக்கை வைக்கிறார்களோ அந்தமாதிரிப் பகுதிகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அவற்றை நன்கு ஆராயவேண்டும். அவற்றிற்கு என்னென்ன அவசியமான தேவைகள் உள்ளன எனக் கண்டறியவேண்டும். இதுதான் ஆயத்த நிலையாகும். இதில் மக்களுடைய ஆர்வமும் ஈடுபாடும் ஆயத்தப்படுத்தப்படுகின்றன.

**2. அமுல் நிலை :** இதில் தேர்ந்தெடுக்கப்பட்டு நன்கு ஆயத்தப்படுத்தப்பட்ட பகுதிகளில் தேசிய விஸ்தரிப்புத் தொண்டு அமுல் செய்யப்படும். கிராமங்களில் எந்தெந்தத் துறையில் விஸ்தரிப்பு தேவைப்படக்கூடும் என்பதை அறிய கீழே கொடுத்திருக்கும் பட்டியலைப் பார்க்க.

**விஸ்தரிப்புக்கு உரிய துறைகள் :**

1. வயது வந்தோர் கல்வி.
2. பயிர்த் தொழில் (மண்ணரிப்பைத் தடுத்தல் உள்பட).
3. காடு வளர்த்தல், பூச்செடி வளர்த்தல்.
4. கால்நடை அபிவிருத்தி (கோழிப் பண்ணை, மீன் பண்ணை உள்பட).
5. கூட்டுறவு.
6. குழந்தைகள் கல்வி.
7. விளையாட்டு, நாடகம், நடிப்பு, கூத்து போன்ற ஓய்வுநேரப் பொழுதுபோக்குகள்.
8. உடல் சுகாதாரமும் ஊர் சுகாதாரமும்.
9. இல்ல நிர்வாக நூல் (Home Science).
10. உற்பத்திப் பொருள்களை விற்க ஏற்பாடுசெய்தல்.
11. கடன் கொடுத்து உதவுதல்.
12. கட்டிடம் கட்டல், சாலைகள் அமைத்தல், நீர்ப் பாசன வசதி அமைத்தல்.
13. கிராமக் கைத்தொழில்களுக்கு உயிர்ப்பூட்டுதல்.

**3. தீவிர அபிவிருத்தி நிலை :** இந்நிலையில்தான் மேலே சொன்ன தொண்டுகள் எல்லாம் நடைமுறையில் தீவிரமாய் செய்து முடிக்கப்படும். தேசிய விஸ்தரிப்புத் தொண்டு மூன்று ஆண்டுகள் ஒரு பகுதியில் நிறைவேறிய பின்னர் அது சமுதாய அபிவிருத்தித் திட்டமாக மாற்றப் படும். எல்லாத் துறைகளிலும் அப்பகுதிகளில் உள்ள கிராமங்கள் தீவிர முன்னேற்றம் அடையுமாறு பாடுபடும் நிலை இது. விவசாயம், குடிசைத் தொழில்கள், உடல் நலம், கூட்டுறவு, கல்வி, சாலை அமைத்தல், உற்பத்திப் பொருள்களை விற்க ஏற்பாடு, முன்னேற்ற அலுவல்களுக்

குப் பண உதவி, இல்லங்கள் கட்டுதல், அறிஞர்களின் ஆலோசனை, மேற்பார்வை, விமரிசனம் ஆகியவை இங்கு குறிக்கற்பாலவை. ஊர் மக்கள் பணமாகவோ, பொருள்களாகவோ, உழைப்பாகவோ பாதிச் செலவை ஏற்க முன்வரவேண்டும் என்பது முன்னரே கூறிய சுய உதவியின் வெளியீடாகும்.

4. மதிப்பிடும் நிலை: இந்நிலையில், செய்த வேலை ஒவ்வொன்றினையும் மதிப்பிட்டு நிறை குறை காண வேண்டும்.

1. இவ்வாறு தேசிய அபிவிருத்தித் திட்டங்கள் கிராம மக்களின் வாழ்க்கையில் எல்லாப் பகுதிகளையும் தழுவி நிற்கும்.

2. கிராம மக்களிட மிருந்துதான் இந்த இயக்கங்களுக்கு மூல ஆற்றல் வரவேண்டும். மக்களின் வலிமை மிக்க எல்லையில்லாத ஆற்றலை, இதுகாறும் செயற்படாமல் உறங்கிக்கிடந்த ஆற்றலை ஆக்க வேலைகளுக்குப் பயன்படுத்த முனைகிறது இந்த இயக்கம்.

3. கிராம வாழ்க்கையில் எதிர்ப்படக்கூடிய சிக்கல்கள் அனைத்தையும் கூட்டுறவாக வேலைசெய்து சமாளிக்கக் கற்பிக்கிறது இந்த இயக்கம்.

மேற்கூறியவண்ணம் கிராம மக்களின் மனப்போக்கை மாற்ற:

1. விஞ்ஞான ஆராய்ச்சிகளின் கண்டுபிடிப்புகளின் உதவியால் பயிர்த்தொழில், கால்நடை அபிவிருத்தி, குடிசைத் தொழில் அபிவிருத்தி, மீன் பண்ணை, கோழிப் பண்ணை ஆகியவற்றில் உற்பத்தியைப் பெருக்கல்.

2. சுய நம்பிக்கை பெறச் செய்தல், தன் கையே தனக்குதவி என்ற மனப்பான்மையை வளர்த்தல், கூட்டுறவு முறைகளைப் பயன்படுத்துதல்—இவற்றிற்கான வழி முறைகளைக் காட்டல்.

3. ஓய்வு நேரத்தில் உள்ளூர்ச் சமூகத்திற்கும், நாட்டிற்கும் தொண்டுபுரிதல் ஆகிய மூன்று முறைகளையும் சிபாரிசு செய்துள்ளனர்.

## பரவி வரும் வரலாறு :

சமூக அபிவிருத்தித் திட்டம் 1952 அக்டோபர் 2-ஆம் நாள் அன்று பாரதநாடு முழுவதிலும் முதன் முறையாக 17000 கிராமங்களை உட்கொண்ட 55 வட்டாரங்களில் தொடங்கப்பட்டது. ஆண்டுதோறும் இவ்வட்டாரங்களின் எண்ணிக்கை பெருகிவருகிறது. மூன்ரும் ஐந்தாண்டுத் திட்டத்தின் மூன்ருவது ஆண்டு முடிவதற்குள் நமது மாநிலம் முழுவதும் பரவிவிடுமாறு ஏற்பாடு செய்து வருகிருர்கள். இதுபோலவே மற்ற மாநிலங்களிலும் பரவி, முடிவில் இந்தியாவிலுள்ள 600000 கிராமங்களுக்கும் இது பரவும்.

## ஆட்சி முறை :

தற்போது சமுதாய அபிவிருத்தித் திட்டத்திற்கெனத் தனித்தனி அமைச்சகம் ஒன்று டில்லி மாநகரில் அமைக்கப்பெற்று உள்ளது. அதற்கு உதவிசெய்ய அனுபவமிக்க (தனியார்) கமிட்டி ஒன்றும் உள்ளது.

மாநிலங்களில் சமுதாய அபிவிருத்தித் திட்டத்தைக் கவனித்து நடத்தத் தனிக் கமிஷனர் ஒருவரும், அவருக்கு உதவியாக ஒரு தனிக் கமிட்டியும் உள்ளது. மாவட்டங்களில் கலெக்டர்தாம் சமுதாய அபிவிருத்தித் திட்டத் தலைவர். அவருக்குக் கீழே சமுதாய அபிவிருத்தி அலுவலாளர்கள் (Block Development Officers) இருக்கிருர்கள். ஒவ்வொரு சமுதாய அபிவிருத்தி அலுவலாளரின் கீழ் பல விஸ்தரிப்பு அலுவலர்களும், கிராம சேவக்குகளும் உள்ளனர். ஒவ்வொரு தொகுதிக்கும் ஓர் ஆலோசனைக்குழு உள்ளது.

கலெக்டர் தலைமையில் அடிக்கடி தொகுதிக் கூட்டங்கள் நடைபெறுகின்றன. அவற்றில் அந்தப் பகுதியிலுள்ள எல்லாத் துறை அலுவலாளர்களும் வருகை புரிகிருர்கள்.

தொகுதியின் பல்வேறு தேவைகள் ஆராயப்படுகின்றன. உடனடியாகக் கவனிக்கவேண்டிய திட்டங்கள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. அத்திட்டங்களுக்குச் செலவு விபரம் கணிக்கப்படுகிறது. மேலிடத்திற்கு சிபாரிசுகள் அனுப்பப் படுகின்றன. மாநிலக் கமிஷனர் மேலும் பரிசீலித்து முக்கியமானவற்றிற்குப் பணம் ஒதுக்கித்தருகிருர். அந்தத் தொகையைக் கொண்டு கிராம மறுமலர்ச்சி வேலேகள் தாமதமின்றி நடத்தப்படுகின்றன.

இந்தச்செலவில் பாதித் தொகையை மத்திய அரசினர் ஏற்றுக்கொள்கின்றனர். மத்திய அரசாங்க அமைச்சரகம் பண உதவியைத் தவிர, அனுபவ ஆலோசனேகள் தந்து மாநில, மாவட்ட, வட்டார வேலேகளே ஊக்கிவருகின்றன.

**சில சாதனேகள் :**

புதுப் பள்ளிகள் கட்டப்பட்டுள்ளன. கிராமக் கூட்டங் கள், நாடகங்கள் முதலியன நடத்தப் புதிய சமூக மன்றங் கள் (Community Halls) கட்டப்பட்டுள்ளன. அவற்றை யொட்டி நூலகங்களும் அமைக்கப்பெற்றுள்ளன. புதிதாக, தாய் சேய் நிலேயங்களும், மருத்துவ மனேகளும் (Primary Health Centres) அமைக்கப்பட்டுள்ளன. உற்பத்திப் பொருள்களே வெளியூர்களுக்கு எடுத்துச் செல்ல உதவும் புதிய சாலேகள் அமைக்கப்பட்டுள்ளன. கால்நடைப் பராமரிப்பு, கோழிப் பண்ணே, பால் பண்ணே முதலியன திறக்கப்பட்டுள்ளன. காடுகள் வளர்க்கப்படுகின்றன.

கிராமக் கூத்து, வில்லுப்பாட்டு முதலிய ஓய்வு நேர விளேயாட்டுகளுக்குப் புத்துயிர் ஊட்டப்பட்டுவருகின்றன. திருவிழாக் காலங்களில் சமூக மேளா (விழா) நடத்துகிருர் கள். அவற்றையொட்டிக் கண்காட்சிகளும், பொருட்காட்சி களும் காட்டப்படுகின்றன. சலனப் படங்கள், பேசும் படங்கள், சொற்பொழிவுகள் வாயிலாக விஞ்ஞான முறை கள் விளக்கப்படுகின்றன. செய்முறைக் காட்சிகளும் நடத் தப்படுகின்றன. மிகுந்த உற்பத்தியைக் காட்டுபவர்களுக்கு ரொக்கப் பரிசு, கலப்பைப் பரிசு போன்ற பயன்தரும்

பரிசுகள் வழங்கி அவற்றின் வாயிலாக கிராம உற்பத்தியை உயர்த்த உற்சாகம் ஊட்டப்படுகிறது கிஸான் மாநாடுகள் நடத்தப்படுகின்றன. அவற்ருல் கிஸான்களுக்கு நல்ல உற்சாகமும், நம்பிக்கையும பிறந்துள்ளன.

கிராமங்களுக்கு எதிர்பாராதவகையில் இவ்வாறு பல்வேறு நன்மைகள் கிடைத்துள்ளன. வெளி நாட்டார் வந்து இத்திட்டம் அமுல் நடக்கும் பிரதேசங்களைப் பார்வையிட்டுச் சாதனைகளின் தரம், எண்ணிக்கை ஆகிய வற்றைப் பாராட்டியுள்ளனர்.

## சமுதாய அபிவிருத்தித் திட்டங்களும், காந்திஜியின் நிர்மாணத் திட்டங்களும்:

முன்பே காந்திஜி வகுத்துள்ள நிர்மாணத் திட்டங் களைப்பற்றிப் படித்தோம். அவையும் கிராம மறுமலர்ச் சிக்காக உருவாக்கப்பட்டவையே. அப்படியிருக்க ஏன் இந்தப் புதிய சமுதாய அபிவிருத்தித் திட்டங்கள்? காந்திஜி யின திட்டங்களுக்கும், இந்தத் திட்டங்களுக்கும் என்ன வேறுபாடுகள் உள்ளன? என்பதை அறிந்துகொள்வது நல்லது. அந்த ஐயத்தைத் தீர்க்க முயலுவோம்.

நிர்மாணத் திட்டங்கள் கிராம மறுமலர்ச்சிக்காக காந்தி அண்ணல் அவர்களால் வகுக்கப்பட்டவையே. கிராம மக்கள் வாழ்க்கை முழுவதையும் அவை தொட்டன என்பதும் உண்மை. நாடு முழுவதும் கிராம மக்களுக்கு அவை புத்துயிர் அளித்துள்ளன.

பல்லாயிரம் தொண்டர்களை—தன்னலமற்ற தொண் டர்களை—இதுவரை நாடு கண்டிராத அளவிற்கு அவரது திட்டங்கள் உருவாக்கித் தந்துள்ளன. அவர்களது சேவை மனப்பான்மை, நாட்டுப் பற்று மக்கள் பற்று, வேலையில் உறுதிப்பாடு, உற்சாகம், எளிய வாழ்வு, சீரிய சிந்தனை ஆகியவற்றின் மேன்மை முதலியவை நாடறிந்த செய்தியே. அத்தொண்டர்களின் சேவை பிற நாட்டின ரைக்கூட கவர்ந்துள்ளது. அந்தத் தொண்டர்களிட

மிருந்து நாம் எத்தனையோ செய்திகள் கற்றுக்கொண்டிருக்கிறோம். இன்னும் கற்றுக்கொள்ள வேண்டியவை எத்தனையோ உள்ளன. ஆனால், ஒவ்வொரு திட்டத்தையும் நிறைவேற்ற கால எல்லை, அளவு எல்லை முதலியன குறிக்கப்படவில்லை. தவிர, திட்டங்களின் விளைவுகளை மதிப்பிட அதிகாரபூர்வமான ஒரு குழு நியமிக்கப்படவில்லை. அத்திட்டங்கள் அனைத்தும் நம்பிக்கையின்மீதே நடந்து வந்தன. மேலும் நிர்மாணத் தொண்டர்கள் அரசினரின் பண உதவிக்காகவோ, ஆலோசனைக்காகவோ காத்திருந்ததேயில்லை. ஏன், நாடியதுகூடக் கிடையாது! அந்நிய அரசாட்சி நடந்துவந்த காலம். நல்ல எண்ணத்துடன் நடந்துவந்த நமது ஒவ்வொரு செயலையுங்கூட ஒரு சந்தேகக் கண்ணோடு ஆட்சி பீடத்திலிருந்தவர்கள் பார்த்த காலமது.

சமுதாயத் திட்டங்கள் அக்குறைபாடுகளை நீக்குகின்றன. இங்கு, கால எல்லை உண்டு. மதிப்புக்குழு உண்டு. அரசினரது பண உதவி உண்டு. பிற நிறுவனங்களோடு ஒத்துழைப்புண்டு. கிராம மக்களின் முழு ஒத்துழைப்பும் எதிர்பார்க்கிறது. அது சுதந்தரம் பெறுவதற்கு முன்பு தேவைப்பட்ட திட்டம். இது சுதந்தரம் பெற்றபின் தேவைப்படும் திட்டம். இந்த ஒற்றுமை, வேற்றுமைகளை அறிந்துகொள்வது நலம்.

அண்ணல் காந்தி பிறந்த புனித நாளன்றுதான் (2-10-1952) இவை முதன்முறை அமுலுக்குவந்தன. ஆண்டுதோறும் புது வட்டாரங்கள் அதே புனித நாளில் தாம் அறிவிக்கப்படுகின்றன.

### அரசினர் துறையினர்களும், சமுதாய அபிவிருத்தித் திட்டங்களும் :

ஒவ்வொரு மாநிலத்திலும் கல்வி, விவசாயம், சாலை, கட்டிடம், மருத்துவம், கால்நடை, மீன், காடு போன்ற பல்வேறு துறைகள் இருக்கின்றனவே. அவற்றின் அலுவலாளர்கள் அனைவரும் கிராமம் கிராமமாகச் சென்று கிராம

மக்களுக்குத் தேவையானவற்றைச் செய்துவரவில்லையா? அப்படியிருக்கப் புதிதாக இச் சமுதாய அபிவிருத்தித் திட்டங்களேன், எனச் சிலர் வினவுகின்றனர். அரசினரது பல்வேறு துறைகளில் தொண்டாற்றிவரும் அலுவலாளர்கள் கிராமங்களுக்குப் போய்வருவது உண்மைதான். ஆனல் கிராம மறுமலர்ச்சிக்கு அந்தப் போதல் மீளுதல் மட்டும் போதாது. தவிர, இப்போதுள்ள ஆட்சி முறையில் பல துறைகள் ஒருமித்து எந்த அலுவலையும் கவனிக்க முடியாது. கிராமங்கள் செழித்து, சீர்பெற்று புத்துயிர்பெற, தனித்தனி தாக்குதல் போதாது. கூட்டுறவான, ஒருமித்த தாக்குதல் அவசியம். தவிர, 'சிவப்பு நாடா' என்ற காலதாமதம் ஒரு பேரிடராய் நாளிதுவரை இருந்துவருகிறது.

சமுதாய அபிவிருத்தித் திட்டங்கள் இக்குறைகளை நீக்க முன்வந்துள்ளன. எல்லாத்துறை அலுவலாளர்களும், அவ்வப்போது காலாண்டுக் கொருமுறை கூடி கிராமங்களின் முக்கியமான தேவைகளை உடனே நிறைவேற்றப் பாடுபடுகிருர்கள்.

கிராம மக்களுக்கு வழிகாட்டும் சமுதாய அபிவிருத்தி அலுவலகங்கள் கிராமங்களிலேயே அமைக்கப் பெற்றுள்ளன. மேலும் கிராம மறுமலர்ச்சிக்காகப் பாடுபடும் பிற நிறுவனங்களுடனும் தனி நபர்களுடனும் சமுதாய அபிவிருத்தித் திட்டம் ஒத்துழைக்கிறது. எடுத்துக் காட்டாக :—

1. கிராம மக்கள்.
2. அரசினரது பல்வேறு துறைகள்.
3. கிராம முன்னேற்றத்திற்காகப் பாடுபடும் பிற நிறுவனங்கள் (பாரத் ஸேவ ஸமாஜ், காந்தி ஸ்மாரக் நிதிக்குழு).
4. ஆலோசனைக் குழு.

## ஆதாரப்பள்ளி ஆசிரியர்களும், சமுதாய அபிவிருத்தித் திட்டங்களும் :

முன்னுரையில் குறித்தவண்ணம் இருவகை நிறுவனங்களும், கிராம மறுமலர்ச்சிக்குப் பாடுபடுபவை. எனவே ஆதாரப் பள்ளி ஆசிரியர் சமுதாய நலத் திட்டங்களின் தத்துவங்கள், நோக்கம், நடைமுறை, சாதனை, மதிப்பீடு முதலியவற்றைப்பற்றிச் செவ்வனே தெரிந்திருக்கவேண்டுவது அவசியமாகிறது. தவிர, ஆதாரப் பள்ளியானது கிராமத்திற்கே ஒரு கேந்திரமாக அமையவேண்டுமன்றோ ?

தற்போதுள்ள நிலையில் கிராமங்களில் ஆதாரப்பள்ளி ஆசிரியரே நன்கு படித்தவர்; பயிற்சி பெற்றவர்; புது மனப்பான்மைகள் கொண்டவர். எனவே, இத்திட்டங்களில் அவர் பங்கெடுத்துக்கொண்டு உதவுவது பொருத்தமுடைத்து.

கிராம மக்களோடு அன்றுடம் நெருங்கிப் பழகுபவர் அவரே. நடைமுறையில், அவரது உதவியினுல் அரும் பெரும் சாதனைகள் நடந்துள்ளன. எடுத்துக்காட்டாக, செங்கற்பட்டு மாவட்டத்தில் ஒதுக்குப்புறமான மூலையில் குருவம்பேடு என்ற ஒரு கிராமம் உள்ளது. அது மிகமிகப் பட்டிக்காடு. அரசினர் அலுவலாளர்கள் யாவரும் அங்கே போனதேயில்லையாம். ரெவின்யூ இன்ஸ்பெக்டர்கூட ஆண்டுக்கு ஒன்று இரண்டு முறைகளே அங்கு போவது இயலுமாம். அதனுல் அது மிகமிகப் பிற்போக்காயிருந்தது வியப்பன்று. ஆனுல் அங்கு இன்று நடப்பது என்ன? அங்கு ஒரு பள்ளி ஏற்பட்டது. ஒரு நல்லாசிரியர் வந்தாராம். முதலில் அவரை மக்கள் வரவேற்கவில்லையாம். ஆனுல் அவர் தம் முயற்சியில் சிறிதும் தளரவில்லை. மக்களோடு நெருங்கிப் பழகி, அவர்களது அன்பினைப்பெற்று மூடப் பழக்கங்களை மாற்றச்செய்து, சமுதாய அபிவிருத்தித் திட்டங்களில் எல்லாம் ஈடுபடச் செய்துவிட்டாராம். அங்கு இப்போது மாதர் சங்கம்கூட ஏற்பட்டுவிட்டதாம். இள

மங்கைகள் நாற்பதின்மர் தையல், நூற்றல் முதலிய தொழில்கள் கற்றுவருகின்றனராம். இந்திய மந்திரிகள் பலர் இக் குக்கிராமத்தின் அபிவிருத்தியைப் பார்த்துப் பாராட்டியுள்ளார்கள். எல்லாம் ஓர் ஆசிரியர் வேலையாம்.

**நேருஜியின் அறைகூவல் :**

சமுதாய அபிவிருத்தித் திட்டத்தைப்பற்றி நேருஜி கூறுவதைப் பாருங்கள் :

"இத்திட்டம் மகத்தான கருத்தை ஆதாரமாகக் கொண்டது. இதன் மூலம் ஒரு விதையை ஊன்றப்போகிறோம். அந்த வித்து இலைவிட்டுச் செடியாகி பிரமாண்ட விருட்சமாக வளர்ந்து இந்நாட்டு மக்களுக்கு எல்லாம் குளிர் நிழல் கொடுக்கும்".



"சராசரி நபரின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதே இத் திட்டத்தின் குறிக்கோள்".

"நமது குறைகள் மீது, வறுமைமீது, அறியாமை மீது, இவற்றின் பயங்கரவிளைவுகள்மீது தொடுத்துள்ள போர் இது".

"அரசியல் துறையில் மாத்திரமன்றி, உணர்ச்சி பூர்வமாகவும் இந்தியா ஒன்றுபட வேண்டும்".

"இடறினோம்; எழுந்தோம்; எழுந்து முன்னேறினோம்".

---

# பிற் சேர்க்கை II

## பயிற்சி வினாக்கள்

### 1

1. கல்வி என்னும் சொல்லின் சாதாரணப் பொருள் யாது?

2. 'கல்வி' என்பதன் முழுப் பொருள் யாது? அதனுள் அடங்கும் நான்கு கூறுகளைக் குறிப்பிடுக.

3. விளக்குக :—

5 H's ; 5 R's.

4. கல்வியின் நோக்கங்கள் யாவை? ஒவ்வொரு நோக்கத்தைப்பற்றியும் சுருக்கிக் கூறுக.

5. காந்திஜியின் படி உண்மைக் கல்வி என்றால் என்ன?

6. எழுத்தறிவு என்றால் எதைக் குறிக்கிறது. அதற்கும் கல்விக்கும் உள்ள வேறுபாடு யாது?

7. ஆளுமை என்றால் என்ன?

8. முழு ஆளுமையின் 'எழுத்தறிவு' என்றால் என்ன?

### 1. a

1. காந்திஜியின் சிந்தையைக் கவர்ந்த நூலின் பெயர் என்ன? அதன் ஆசிரியர் யார்? அந்நூலிலிருந்து அவர் கற்றறிந்த உண்மைகள் யாவை?

2. தன்னை மிகவும் கவர்ந்த பெரியார் மூவராவர் எனக் காந்திஜி கூறியுள்ளார் அம் மூவர் யாவர்? ஒவ்வொருவரிடமிருந்து காந்திஜி கற்றறிந்த சிறப்பு அம்சம் யாது?

3. ஃபீனிக்ஸ் குடியேற்றத்தில் காந்தி நடத்திய வாழ்க்கை முறையினை விளக்கி அதை எவ்வாறு ஆதாரக் கல்வி உதயமான இடம் எனக் கூறலாம் என்பதையும் ஆராய்க.

4. டால்ஸ்டாய் பண்ணை எங்கு யாரால் நடத்தப் பட்டது? அப்பெயர் இடப்பட்டதற்குக் காரணம் யாது?

5. டால்ஸ்டாய் பண்ணையில் நடந்த கல்விச் சோதனைகளைப் பற்றி விவரி, அங்கு பெற்ற சாதனைகள் யாவை?

6. காந்திஜி சாந்தி நிகேதனத்தில் சின்னாள் வாழ்ந்த காலத்து அங்கு அவர் விளைவித்த புதுமைகள் யாவை? கவிஞர் தாகூர் அதைக் குறித்து என்ன கூறியுள்ளார்?

7. சபர்மதி ஆசிரமத்தில் நடந்து வந்த கல்விச் சோதனை களையும் சாதனைகளையும் பற்றி விவரி.

8. 1915 முதல் 1937 வரை காந்திஜி கல்வித் துறையில் செய்து வந்த தொண்டுகளைப் பற்றி விவரி.

9. ஆதாரக் கல்வியைப் பற்றி முதல் முதல் எந்தப் பத்திரிகையில் எந்தத் தேதியில் எழுதினர்?

10. வர்தா மாநாட்டு நடவடிக்கைகளைப் பற்றி விவரி.

11. நிர்மாணத் திட்டம் என்றால் என்ன? அதில் எத்தனை உறுப்புகள் உள.

12. ஹிந்துஸ்தானி தாலீமீ சங்கம் உதயமான வரலாற்றினை விவரி.

13. அது செய்துவரும் தொண்டுகளைப் பற்றி விவரி.

14. 1937 முதல் இன்று வரை ஆதாரக் கல்வி நம் நாட்டில் பரவிய வரலாற்றினைப் பற்றிக் கூறுக.

## 2

1. 'வாழ்க்கைக்கான கல்வி' இதனை விளக்குக.

2. 'வாழ்க்கைவாயிலாகக்கல்வி' என்றால் என்ன? வாழ்க்கை வாயிலாக ஆதாரக்கல்வி எவ்வாறு கற்பிக்கப் படுகிறது?

3. ஆதாரக் கல்வியின் நிலைகள் யாவை? அவற்றை முறைப்படி எழுதுக.

4. ஒவ்வொரு நிலையைப் பற்றியும் சிறு குறிப்பு வரைக.

5. உயர் ஆதாரப் பள்ளிகள உள்ள ஊர்கள், பல்கலைக் கழகங்கள் உள்ள ஊர்கள் ஆகியவற்றின் பெயர்களை எழுது.

## 3

1. 'ஆள்வினையும் ஆழ்ந்த அறிவும் என விரண்டின் நீள் வினையால் நீளும் குடி'' எனற வள்ளுவர் குறள், ஆதாரக் கல்வி யில் அமைந்துள்ள வேலை வாயிலாகக கல்வி என்ற கோட்பாட் டிற்குச் சான்றாக உள்ளது என்பதை எடுத்து விவரிக்க.

2. வேறுபாடுகளை எடுத்துக் காட்டுக :—தொழிலும் கல் வியும், தொழிற் கல்வி, தொழில் வாயிலாகக் கல்வி.

3. தொழில் வாயிலாகக் கல்வி அளிப்பதே சிறந்தது என் பதை மனநூல் உண்மைகள் எவ்வாறு வலியுறுத்துகின்றன.

4. உழைப்பின்றிக் கல்வி கற்றால் என்ன தீங்குகள் நேரிடும்?

5. 'உழைப்பு வாயிலாகக் கல்வி' என்ற கொள்கை இறை வேற என்னென்ன நிபந்தனைகளைக் கவனிக்க வேண்டும் ?

6. ஒரு தொழில் ஆதாரத் தொழிலாகத் தேர்ந்தெடுக்கப் பட அதற்குத் தேவையான தகுதிகள் யாவை ?

7. அந்தத் தகுதிகளை விவரிக்க.

8. தேர்ந்தெடுக்கப்பட்ட ஆதாரத் தொழில்கள் யாவை ?

9. வேலை வாயிலாகக் கல்வி, கீழ்க்கண்ட நிறுவனங்களில் எந்த அளவிற்குத் தரப்பட்டது; அல்லது தரப்படுகிறது ?

(1) பண்டைய குருகுல வாசம்
(2) சாந்தி நிகேதனம்
(3) வாலாஜாபாத் வள்ளுவர் குருகுலம்
(4) பவனர் ஆச்சிரமம்
(5) தற்காலக் கல்லூரிகள்

10. கீழ்க்கண்ட கல்வி மனநூல் அறிஞர்கள் கண்டறிந்து இயம்பின பேருண்மைகளைப்பற்றி ஒரு சிறு குறிப்பு வரைக :—

(1) ரூஸோ
(2) பெஸ்டலாக்ஸி
(3) ஃபிரிபெல்
(4) ஜெனரல் ஆம்ஸ்ட்ராங்
(5) ஜான் டூயி
(6) குரோபாட்கின்
(7) பின்க்விட்ச்
(8) புக்கர் வாஷிங்டன்
(9) கிஸ்பேோயக்

## 4

1. ஆதாரக் கல்வித் திட்டத்தின் அடிப்படைக் கொள்கை கள் இரண்டினையும் கூறுக.

2. தொழிலை எவ்வாறு கற்பிக்கவேண்டும்; எவ்வாறு கற்பிக்கக்கூடாது ? எனக் காந்திஜி எச்சரித்துள்ளார்.

3 தந்நிறைவுக் கோட்பாடு என்றால் என்ன ?

4. அக்கோட்பாட்டினை எதிர்ப்பவர்கள் கூறும் வாதம் யாது ?

5. தந்நிறைவுக் கோட்பாட்டினை ஏன் ஆதாரக் கல்வியின் உரைகல் எனக் காந்திஜி கூறியுள்ளார் ? அதனைப் பல கோணங் களிலிருந்து ஆராய்க.

6. சென்னை மாகில அரசினர் வகுப்புவாரியாக வகுத்துள்ள விகர லாபத் தொகை யாது ?

7. தந்நிறைவுக் கொள்கை எளிதில் நிறைவேற கவனிக்க வேண்டிய நிபந்தனைகளைக் கூறுக.

8. "தன்னிறைவுக் கொள்கை நன்னெறி வாழ்க்கைக்கு அடிப்படையே"—இக்கூற்றினை ஆராய்க.

9. தன்னிறைவுக் கொள்கை பொருளாதார முன்னேற்றத் திற்கு அடி கோலுகிறது எனக் கூறப்படுகிறது; இதனை ஆராய்க.

## 5

1. ஒழுங்கு என்பதன் பொருள் யாது ?

2. சிறு குறிப்பு வரைக :—

(i) சட்ட திட்டங்கள்

(ii) விதிகள்

(iii) மரபுப் பழக்க வழக்கங்கள்.

3. ஒழுங்கு விதிகள் மீறப்படுவதேன் ?

4. ஒழுங்கைப்பற்றிய பழைய கருத்து யாது ?

5. ஒழுங்கைப்பற்றிய புதுக் கருத்து யாது ?

6. "பள்ளி வேலைகள் நன்குநடைபெற ஒழுங்கு அவசியம்"— ஏன் ?

7. சாதாரணமாகப் பள்ளிகளில் காணக்கூடிய நடத்தைத் தவறுகள் யாவை ?

8. 'உழைப்பு வாயிலாக ஒழுங்கினை நிலைநாட்டுவது எளிது"—இதனை ஆராய்க.

9. ஒழுங்கை நிலைநாட்ட உதவும் செயல்கள் யாவை? அவை அதை நிலைநாட்ட எவ்வாறு உதவுகின்றன.

10. ஒழுங்கு விதிகள் எவ்வாறு அமைந்திருக்கவேண்டும்? எத்தனை விதிகள் இருக்கலாம் ? அவற்றை யார் ஏற்படுத்தவேண் டும் ? காரணங்களுடன் விளக்குக.

11. பரிசுகள் வழங்கி ஒழுங்கை நிலைநாட்டுவதன் நன்மை தீமைகளை ஆராய்க.

12. பரிசுகளின் வகைகளைக் கூறுக; ஆதாரக் கல்வித் திட் டத்திற்கு ஏற்றது எவை ?

13. தண்டனைகள் எந்தெந்த நோக்கங்களுடன் அளிக்கப் படுகின்றன. ஒவ்வொன்றினைப்பற்றியும் சிறு குறிப்பு எழுதுக.

14. தண்டனையின் வகைகளைக் கூறுக. ஆதாரப்பள்ளிகளில் அளிக்கக்கூடிய தண்டனைகளைக் கூறுக.

15. தண்டனைபற்றி, குறளில் கூறப்பட்டுள்ள பாக்களை எழுதுக.

## 6

1. ஆதாரக் கல்வியின் அடிப்படை நோக்கங்கள் யாவை ?

2. புதுச் சமுதாயம் ஒன்றினைப் படைக்க ஆதாரக் கல்வித் திட்டம் முயலுவதேன் ?

3. சமூக நூல் உண்மைகளைப்பற்றிய புதிய ஆத்திசூடி ஒன்று எழுத முயலுக.

4. சத்தியத்திற்கும் நன்னெறிக்கும் உள்ள தொடர்பு யாது ?

5. அஹிம்சைக்கும் நன்னெறிக்கும் உள்ள தொடர்பு யாது ?

6. "பள்ளியில் அஹிம்சையைக் கடைப்பிடித்தொழுகுவது மிகமிக முக்கியம் '– நடைமுறையில் நீர் இதை நிறைவேற்ற என்னென்ன செய்ய முயலுவீர்

7. 'புதுக் கல்வி"யில் அடங்கியுள்ள குடிமைபற்றி விவரிக்க ஆதாரப் பள்ளியில் நீர் அதை எவ்வாறு கற்பிப்பீர் ?

8. கூட்டுக் கல்விபற்றி காந்திஜியின் கருத்து யாது ?

9. பிற நாட்டினரின் கருத்து யாது ?

10. வெவ்வேறு கல்வி நிலையில் கூட்டுக்கல்வி எவ்வாறு அமைந்துள்ளது என விவரிக்க.

11. கூட்டுக் கல்வி ஆங்காங்கு நடந்துவரும் முறைகளைப் பற்றிச் சிறு குறிப்பு வரைக.

12 கூட்டுக் கல்வி வெற்றிபெற வேண்டுமானால் கருத வேண்டிய நிபந்தனைகள் யாவை ?

13. கூட்டுக் கல்விபற்றி உம் கருத்து என்ன ?

## 7

1. 'ஆளுமை '—பொருள் கூறி விளக்குக

2 ஆளுமையை வளர்க்க, ஆதாரப் பள்ளியில் கடைப் பிடிக்கும் சில வழிமுறைகளைக் கூறுக.

3. பல்வேறு பண்புகள் எவ்வாறு ஒருமித்து ஆளுமையாக வளர்கின்றன என்பதை எடுத்துக் காட்டுகளுடன் விளக்குக.

4. 'ஆளுமை' வளர்ச்சி முழுமைபெற எவ்வளவு காலம் பிடிக்கும்.

## 8

1. 'பள்ளி சமூகத்தொண்டன்' என்ற கூற்றினை ஆராய்க.

2. 'பள்ளி ஒரு சமூகக் கண்ணாடி' என்பதை விளக்குக.

3. ஆதாரக் கல்வித் திட்டத்தினால் புதிய சமுதாயம் ஒன்றினைப் படைக்க முடியுமா?

4. கிராம மறுமலர்ச்சியில் பொருளாதாரத் துறையில் என்ன மாறுதல்களை விளைவிக்க காந்திஜி வகுத்த நிர்மாணத் திட்டம் ஏற்பாடு செய்துள்ளது.

5. சமூகத் துறையிலும், ஆன்மீகத் துறையிலும் என்னென்ன மாறுதல்களை விளைவிக்க அத்திட்டம் ஏற்பாடு செய்துள்ளது.

6. ஆதாரக் கல்வி பயிலும் ஒருவன், தனது சொந்த விஷயத்தில் எவ்வாறு நடந்துகொள்வான்? (உணவு, உடை, சமூகம், பண்பாடு, கலை முதலியன)

7 "புதுச் சமுதாயம் ஒன்றினை அமைக்க ஆதாரப் பள்ளிகள் கருவிகளாக இயங்கவேண்டும்" என்ற கூற்றினை ஆராய்க.

8. சர்வோதயச் சமுதாயத்தினைப் படைக்க ஆதாரப் பள்ளிகள் எவ்வாறு தொண்டாற்ற வேண்டும்?

9. பிறநாடுகளில் ஏற்பட்ட சமூக, அரசியல், பொருளாதார மாறுதல்களில் பள்ளிகளின் பங்கை விவரிக்க.

10. தனிப்பட்டவர் கொள்கை, சமூகக் கொள்கை என்ற இருவகைக் கொள்கைகளையும்பற்றி சிறு குறிப்பு வரைக.

11. காந்திஜி எந்தக் கொள்கையை ஆதரித்துள்ளார்?

12. வினோபாஜியின் புது இயக்கத்தினைப் பற்றி விளக்குக.

13. பள்ளி ஒரு சமூகக் கேந்திரமாக அமைய வேண்டும் இது எவ்வாறு இயலு மென்று விளக்குக?

14. இலவச உணவளிப்புத்திட்டம், பள்ளிச் சீரமைப்புத் திட்டம் ஆகிய இரு திட்டங்களும் ஊர் மக்களின் வளத்தை எவ்வாறு பள்ளிக்குப் பயன்படுத்த உதவுகின்றன?—விளக்குக.

15 பள்ளிச் சீரமைப்புத் திட்டத்தின் பஞ்ச சீலங்கள்யாவை?

16. எந்த மூன்று நிறுவனங்களினால் கிராமம்செழித்தோங்க வேண்டுமென்று நேருஜி கூறியுள்ளார்?

## 9

1. தற்காலச் சமூக வாழ்வில் கண்காட்சிகள் பெற்றுள்ள இடத்தை எடுத்துக் காட்டுகளுடன் விளக்குக.

2. நாய்கள் கண்காட்சி, கால் நடைக் கண்காட்சி முதலிய கண் காட்சிகள் நடத்துவதனால் மக்களுக்கு என்ன இலாபம்?

3. கண்காட்சிகள் தோன்றிய வரலாற்றைச் சுருக்கிக் கூறுக.

4. சந்தைக்கும், கண்காட்சிக்கும் உள்ள வேறுபாடுகள் யாவை?

5. கண்காட்சியின் மூல நோக்கங்கள் யாவை?

6. 1851-ல் இலண்டன் மாநகரில் நடந்த மாபெரும் முதல் கண்காட்சியை விவரித்து அதன் விளைவுகளைக் கூறுக.

7 தற்காலத்தில் கண்காட்சிகள் விரிந்து வளர்ந்துள்ள தனால் ஏற்பட்ட இடர்ப்பாடுகளைக் கூறுக. அவற்றைச் சமாளிக்க என்ன ஆலோசனைகள் கூறப்படுகின்றன?

8. அரசினர் கண்காட்சிகள் நடத்துவதின் நோக்கங்கள் யாவை?

9. சென்னையில் ஆண்டு தோறும் நடத்தும் கண்காட்சி களினால் மக்களுக்கு ஏற்பட்டுள்ள நன்மைகள் யாவை?

10. கண்காட்சிகள் கல்விப் பயன்களைத் தரவேண்டுமானால் என்ன நிபந்தனைகளை அவை நிறைவேற்ற வேண்டும்?

11 'பிரிட்டிஷ் மியூசியம்' என்ற லண்டன் பொருட்காட்சிச் சாலை நிறுவப்பட்ட வரலாற்றினைக் கூறுக:

12. பொருட்காட்சிகளினால் மக்களுக்கு ஏற்படும் நன்மை கள் யாவை?

13. இங்கிலாந்து, அமெரிக்க ஐக்கிய நாடுகள், ருஷியா ஆகிய நாடுகளில் உள்ள பொருட்காட்சிச் சாலைகளைப்பற்றி சிறு குறிப்பு வரைக.

14. இந்தியாவிலுள்ள பெரும் பொருட்காட்சிச் சாலைகளைக் குறிக்க—ஒவ்வொன்றின் தனிச் சிறப்புகளையும் எடுத்துக் காட்டுக.

15 பொருட்காட்சிச் சாலைகள் பொது மக்கள் கல்விக்குப் பயன்பட வேண்டுமானால் அவை நிறை வேற்ற வேண்டிய நிபந் தனைகள் யாவை?

16. கண்காட்சிக்கும், பொருட்காட்சிக்கும் உள்ள வேறு பாடுகளை எடுத்துக் காட்டுக

17. பள்ளிப் பொருட்காட்சிக்கும், மேற்கூறிய பொருட் காட்சிக்கும் உள்ள வேறுபாடுகள் யாவை?

## 10

1. ஆசிரியத் தொழிலின் பெருமையைப் பற்றி சிறு குறிப்பு ஒன்று வரைக.

2. மூவகை ஆசிரியர்களின் தன்மைகளை விளக்குக.

3. ஓராசிரியரின் சொந்த வாழ்வில் காணவேண்டிய தகுதிகள் யாவை ?

4. ஆசிரியர்களுக்கு தொழில்திறன் உயர்ந்த தரத்த தாய் இருக்க வேண்டும் எனக் கூறுவது ஏன் ?

5. ஆசிரியருக்கு இருக்கவேண்டிய கற்பிக்கும் திறனைப் பற்றி சுருக்கமாக விவரிக்க.

## தேசிய விஸ்தரிப்புத் திட்டம்

### பயிற்சி வினாக்கள்

1. தேசிய அபிவிருத்தி: சமுதாய நல அபிவிருத்தி ஆகிய திட்டங்களின் தோற்றுவாயினை விவரிக்க.

2. அவற்றின் நோக்கங்களைக் கூறுக.

3. தேசிய விஸ்தரிப்புத் தொண்டின் நான்கு நிலைகள் யாவை ?

4. காந்திய நிர்மாணத் திட்டங்களுக்கும், அவற்றிற்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை ஆராய்க.

5. ஏற்கெனவே அமுலிலுள்ள அரசினரது பல்வேறு துறை அலுவலாளர்கள் தொண்டாற்றிவருங்கால், சமுதாயத்திட்டங்கள் எனும் புதிய திட்டங்கள் எதற்காக ?

6. சமுதாய நலத் திட்டங்களின் சில சாதனைகளைக் கூறுக.

7. முதன் முறை எந்தத் தேதியில் சமுதாய திட்டங்கள் அமுலுக்கு வந்தன ? எத்தனை வட்டாரங்களில் ?

8. சமுதாய நலத் திட்ட வேலைகளில் ஆதாரப் பள்ளி ஆசிரியர்களின் பங்கு என்ன ?



## REFERENCE BOOKS

1. My Experiments with Truth—M. K. Gandhi.
2. Educational Reconstruction.
3. Nai Talim and the Social Order—Wilfred Willack.
4. A Picture and Programme of Adult Education—Shanta Narulkar & Marjorie Sykes.
5. Basic National Education (The Plan and Syllabus for Grades I to VIII).
6. Constructive Programme—M. K. Gandhi
7. Basic Education (Its Principles and Practice)—Marjorie Sykes.
8. The Activity School—Gustar G. Schoenchien.
9. The Activity School—Adolph Ferrierie.
10. The Wardha Scheme of Education—Shrimali.
11. An Ideal Hand-book on General Methods--Vasan.
12. The Educational Philosophy of Mahatma Gandhi—M. S. Patil.
13. Basic National Education—Report of the Zakir Hussain Committee.
14. School and Community—John Dewey.
15. Hand-book for Basic Education Teachers—Govt. of India Publication.
16. Nai Talim at Sewagram.
17. Harnessing Community Resources—Govt. of Madras.
18. The Technique of Correlation by Solanki—

**Library Books and Journals on Community Development Programmes recommended by the Director.**

| | | | |
|---|---|---|---|
| 19. | A Symposium on Community Development in Madras State | Govt. of Madras | English |
| 20. | A guide book to Community Development | Ministry of Community Development | ,, |
| 21. | National Extension Service by Sri V. T. Krishnamachari | ,, | English & Tamil |
| 22. | Ram Rajya in Action | ,, | English |
| 23. | Social change of the National Extension Scheme | ,, | ,, |
| 24. | Training for Village Work | ,, | ,, |
| 25. | Guide book for Gram Sevaks | Govt. of Madras | ,, |
| 26. | Home Scienoe and Community Development | ,, | English & Tamil |
| 27. | Community Development movement in cartoons | Ministry of C. D. | ,, |

